# கைவல்ய நவநீதம்

## விளக்கவுரையுடன்




வித்வான்
வேலுப்பிள்ளை






**முல்லை நிலையம்**

9, பாரதிநகர் முதல் தெரு,
தி.நகர், சென்னை - 600 017.

# கைவல்லிய நவநீதம்

(மூலமும், தெளிவுரையும்)

தெளிவுரை ஆசிரியர்

வித்துவான் M. நாராயணவேலுப் பிள்ளை

ஓய்வு பெற்ற தமிழாசிரியர்




முல்லை நிலையம்

9 பாரதிநகர் முதல் தெரு

தி.நகர், சென்னை 17.

முதல் பதிப்பு : 2002
மறுபதிப்பு : ***2017***
முல்லை–35

## நூல் விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | கைவல்லிய நவநீதம் |
| ஆசிரியர் | : | தாண்டவமூர்த்தி |
| தெளிவுரை ஆசிரியர் | : | வித்துவான் M. நாராயணவேலுப் பிள்ளை |
| மொழி | : | தமிழ் |
| பதிப்புரிமை | : | முல்லை நிலையம் |
| தாள் | : | 11.6கி. வெள்ளைத்தாள் |
| நூலின் அளவு | : | 18.5.செ.மீ. X 12.5.செ.மீ. |
| எழுத்து | : | 10 புள்ளி |
| பக்கம் | : | 256 |
| படிகள் | : | 1000 |
| பொருள் | : | தத்துவம் |
| வெளியீட்டாளர் | : | முல்லை நிலையம் 9 பாரதி நகர் முதல் தெரு, தி.நகர் சென்னை 17 |
| விற்பனை உரிமை | : | **பாரி நிலையம்** ***88/184, பிராட்வே, சென்னை–108. போன் – 25270795*** |
| விலை | : | ரூ. **90–00** |
| அச்சிட்டோர் | | **மோனார்க் கிராஃபிக்ஸ்** 104. பெரியார் பாதை. சூளைமேடு. சென்னை-94. போன் : 23621086 |

# முன்னுரை

கைவல்லிய நவநீதம் ஒரு ஞான சாஸ்திரம். இது நன்னிலம் நாராயண தேசிகர் மாணாக்கர் **தாண்டவராய** சுவாமிகளால் இயற்றப்பட்டது. இவரது வேறு பெயர் **தாண்டவமூர்த்தி** சுவாமிகள். இதில் அடியிற்கண்டவாறு 293 செய்யுட்கள் உள்ளன.

| | |
|---|---|
| பாயிரம் | 7 |
| தத்துவ விளக்கப் படலம் | 101 |
| சந்தேகம் தெளிதற் படலம் | 185 |
| ஆக | 293 |

இந் நூலுக்கு அருணாசல சுவாமிகளும் வேறு சிலரும் உரை இயற்றியுள்ளனர். இப் பாடல்களுள் சில குரு சீடனுக்கு உபதேசம் செய்வதுபோலவும் மற்றும் சில தந்தை மகனுக்குக் கூறுவது போலவும் அமைந்துள்ளன. செய்யுளிலும் உரையிலும் வட சொற்கள் பெரிதும் பயின்று வந்துள்ளன. எடுத்துக் கொண்ட பொருள் வேதாந்தம் பற்றியதாக இருப்பதால் இவைகளைத் தவிர்க்க முடியவில்லை. கைவல்லியம் என்றால் மோட்சம், நவநீதம் என்றால் வெண்ணெய். இந்நூலுக்கு இப் பெயர் வந்த காரணம் பாயிரம் ஆறாவது பாடலில் விளக்கப்பட்டுள்ளது.

வேதாந்த மடங்களில் இந் நூலைப் பாடஞ் சொல்லும் போது குரு முகமாகச் சீடர்கள் பொருள் அறிய முடிந்தது. இவ்வரிய நூலைப் பலரும் பயன்பெறும் வகையில் பாடல்களிலும் உரையிலும் உள்ள சொற்கள் சந்தி பிரித்தும், வட சொற்களுக்கு விளக்கம் தந்தும் இந் நூல் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

நூலின் கருத்தை வாசகர்கள் எளிதில் புரிந்து கொள்வதற்காக, **'தத்துவக் கோட்பாடு'** என்ற விளக்கக் கட்டுரை தொடக்கத்திலேயே சேர்க்கப்பட்டுள்ளது. பல சமயங்களில் கோட்பாடுகளைக் கற்றார் வாய்க் கேட்டறிந்தும், பலநூற்களை நானே பயின்றும், என் அனுபவத்தைக் கொண்டும் இந் நூலைச் செப்பஞ் செய்துள்ளேன். தத்துவ உலகம் அங்கீகரிக்கும் என்ற நம்பிக்கை உடையேன். வாசகர்கள் படித்துப் பயன் பெறுவார்களாக.

வித்துவான் **M. நாராயண வேலுப்பிள்ளை**
ஓய்வு பெற்ற தமிழாசிரியர்

# அறிமுகம்

வேதாந்த தத்துவத்தை விளக்கத் தமிழில் எழுந்த சிறப்பான நூல்களுள் ஒன்று 'கைவல்லிய நவநீதம்'. கைவல்லியம் ஆவது பிரமத்தின் உண்மையைத் தெள்ளத் தெளிய விளங்க வைத்தலாம். வேதாந்த நுண் பொருளை வெண்ணெய் போலத் திரட்டி வழங்கு வதனாலே இந்நூல் 'கைவல்லிய நவநீதம்' என்னும் பெயர் பெறுவதாயிற்று.

இந் நூலாசிரியராகிய தாண்டவ மூர்த்தியை உரைச் சிறப்புப் பாயிரம் பன்வருமாறு அறிமுகப்படுத்துகிறது:

**''முற்றுணர் தாண்டவ மூர்த்தி, அனுபவப்**
**பெற்றியின் உலகோர் பேரின்பம் அடையக்**
**கிளரும் வேதாந்தக் கீரோ ததியைத்**
**தளர்வு அறு சமாதித் தாழியின் நிறைத்திட்டு,**
**அகமறு விசார—அனலினால் காய்ச்சி,**
**மகிழ்குரு வாக்கிய மத்தால் கடைந்து,**
**ஞான கைவல்ய நவநீதத்தை,**
**ஆனபே ரன்பின், அளித்தனன்.''**

வேதாந்தப் பாற்கடலை சமாதித் தாழியில் நிறைத்து விசாரத் தீயில் காய்ச்சி, குருவாக்கிய மத்தால் கடைந்து, பிரம ஞானம் விளக்கும் கைவல்லிய நவநீதம் படைக்கப் பட்டதாம்.

**''படர்ந்தவே தாந்தம் என்னும்**
**பாற்கடல் மொண்டு முன்னூல்**
**குடங்களில் நிறைத்து வைத்தார்,**
**குரவர்கள்: எல்லாம் காய்ச்சிக்**
**கடைந்தெடுத்து அளித்தேன் இந்தக்**
**கைவல்ய நவநீ தத்தை;**
**அடைந்தவர் விடய மண்தின்று**
**அலைவரோ பசியிலாரே**

என்று தாண்டவ மூர்த்தி நூலுள் தெரிவித்த செய்தியை விளக்கியே சிறப்புப் பாயிரம் குறிப்பிட்டுள்ளமை காணலாம்.

தாயுமானவரும்,

**''கைவல்ய ஞான நீதி நல்லோர் உரைக்கிலோ**
**கர்மம் முக்கியம் என்று காட்டுவேன்''**

என்று இச் சாத்திரத்தைப் போற்றுகின்றார்.

ஞானோபதேசம் செய்யும் குருவின் பெருமை நூலுள் அங்கங்கே சீடன் வாயிலாக வெளிப்படுத்தப்படுகிறது.

**'குகன்தனையும் எனையும் உலகினையும்**
**ஈன்றளித் தருளும் குருவே'**

என்று இவ்வாறு இறைவனே சற்குருவாய் வருகிறார் என்பது சுட்டப்படுகிறது. சீடன் வினாவும் வினாக்களுக்குக் குருவானவர் விளக்கம் சொல்லும் முறையில் நூற்பொருள் விளக்கப்படுகிறது இது வினா விடை முறையிலான குரு–சீடர் உரையாடல். குரு விளக்கம் தரும்போது ஏதுக்கள், எடுத்துக்காட்டுகள் தருகின்றார். பலவிடத்தும் பொருத்தமான உவமைகளை எடுத்துக் காட்டிப் பொருள் விளக்கும் திறம் இந் நூலின் தனிச் சிறப்பாகும்.

குருவானவர் போதிக்கும் முறைமை,

**''தாலத்தின் மரங்கள் காட்டித்**
**தனிப்பிறை காட்டு வார்போல்**
**ஆலத்தின் உடுக்கள் காட்டி**
**அருந்ததி காட்டு வார்போல்,**
**தூலத்தை முன்பு காட்டிச்**
**சூக்கும சொரூப மான**
**மூலத்தைப் பின்பு காட்ட**
**முனிவரர் தொடங்கி னாரே''**

என்னும் பாடல் (25) குருவானவர் போதித்த முறையை எடுத்துக்காட்டுகிறது.

'புதுமையாம் கதை கேள்' என்று பதின்மர் ஓர் ஆற்றைக் கடந்து ஒருவன் தன்னை விடுத்து ஒன்பது பேரை எண்ணித் தான் பத்தாவான் என்பதை மறந்து திகைத்தமையை ஓரிடத்தில் எடுத்துக்காட்டுகிறார்.

(கைவல்லியம்–61)

இந் நூல் தத்துவ விளக்கப் படலம், சந்தேகம் தெளிதற்படலம் என்னும் இருபெரும் பிரிவுகளையுடையது. இது ஆசிரிய விருத்தப் பாவினால் ஆக்கப் பெற்றது. இந் நூலின் பாடல் தொகை 293. இவற்றுள் எழுசீர் ஆசிரிய விருத்தம் பத்து (231–240) எண்சீர் ஆசிரிய விருத்தம் பதினொன்று (123–133) இவை தவிர ஏனைய எல்லாம் அறுசீர் ஆசிரிய விருத்தமாம். இவற்றுள் பெரும் பகுதி முதற்சீர் நான்காம் சீர் மோனை ஒழுங்கு பெற்றவை. மற்றொரு பகுதி முதற் சீர் ஐந்தாம் சீர் மோனை ஒழுங்குடையவை. இவையெல்லாம் தத்துவ நூற் பாடல்களாயினும் எதுகை மோனை நயம் சிறக்க இனிய சந்தத்துடன் ஆற்றொழுக்காக அமைந்துள்ளன. பாடல்கள் சீர் முறைப்படி இப்பதிப்பில் பிரித்துத் தந்திருப்பதால் சந்த முறையில் வாசிப்பதற்கு எளிதாக, இன்பம் தருவனவாக உள்ளன.

இந் நூலுக்குப் பிறையாறு அருணாசல சுவாமிகள் இயற்றிய உரை பாடற் பொருளை நன்கு விளக்குவதாம். ஒவ்வொரு பாடலுக்கும் தோற்றுவாயாக முதற்கண் அவதாரிகை காணப்படும். அடுத்துப் பொருள்கோள் முறையில் பாடற்பொருள் பொழிப்புரையாக அமைகிறது. அதன்பின் பதசாரம் தாற்பரியம் என்பனவும் பல பாடல்களுக்கு உண்டு. இப்பொழுது வெளியிடப் பெறும் தெளிவுரை பெரும்பாலும் மேலே சுட்டிய பழைய உரையை அடியொற்றியே செல்கிறது. தெளிவுரையாசிரியர் அங்கங்கே அருஞ்சொற்பொருள் தந்திருப்பது புதிய சேர்க்கை மேலும் விளக்கம், குறிப்பு என்னும் தலைப்புகளில் பாடலின் சிறப்புப் பொருள்களைச் சுட்டிச் செல்வது

கற்பார்க்குப் பெரிதும் பயன்படும். தத்துவ பரிபாஷைச் சொற்களுக்குத் தெளிவான விளக்கம் தரப்பட்டிருப்பது இத்தெளிவுரையின் தனிச் சிறப்பாகும்.

நூலின் முதலில் தத்துவக் கோட்பாடுகள் பற்றிய விளக்கம் இடம் பெறுகிறது. இப் பகுதியில் முதற்கண் இறைவன்–உயிர்–கட்டு பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்மை விளக்கப்பட்டுள்ளது. அடுத்துக் கேவலாத்துவிதம், விசிட்டாத்துவிதம், சைவ சித்தாந்தம், துவிதம் என்னும் தத்துவக் கோட்பாடுகள் தெளிவாகத் தரப்பட்டுள்ளன. இவை இந்து சமயக் கோட்பாடுகளை அறிவதற்கும் இந்நூற்பொருளைத் தெளிவதற்கும் வழிகாட்டியாயுள்ளன.

அத்துவித வேதாந்தக் கோட்பாடுகளைத் தெளிவாகத் தெரிந்து கொள்வதற்கு இந்நூல் ஒரு பெருந்துணையாகத் திகழ்கிறது. சமய ஆர்வலருக்கும் இலக்கியச் சுவைஞருக்கும் இந் நூல் நல்விருந்து.

**மு. சண்முகம் பிள்ளை**

# உள்ளுறை

# தத்துவக் கோட்பாடு

பொதுவாக இந்து சமயக் கோட்பாட்டை, வேதாந்தக் கோட்பாடு எனக் கூறலாம். இக் கோட்பாட்டை விளக்கிச் சொல்லும் போக்கில் சிறிது வேறுபாடு காணப்படினும் அடிப்படையாக உள்ள சிந்தனை ஒன்றாகவே உள்ளது. தத்துவ உலகில் எழுப்பப்படும் ஒரு கேள்வி – எது அடிப்படையான உண்மை என்பதாகும்.

வேதத்திலும், 'ஏகம்சத்; பகுதா வதந்தி' என்னும் வாக்கியம் ஒன்றுள்ளது. இவ்வாக்கியத்தின் விளக்கமாக அமைவதே நம் கோட்பாடு எனலாம். இத் தொடருக்கு ஒன்றே உண்மை; அறிஞர் அதனைப் பலவாறாகக் கூறுகின்றனர் என்பதே பொருள். இத் தொடரை விளக்கும் சிவஞானியர்கள் இறுதியான உண்மை 'பிரமம்' ஒன்றே; கண்ணால் காணும் புற உலகும் உயிர்களும், உண்மைகள் அல்ல. பொய்த்தோற்றங்கள் என்றனர். வேறு சிலரோ இவ்வுலகும் உயிர்களும் தோற்றங்கள் அல்ல; இவை பிரமம் என்ற இறுதியான உண்மையின் கூறுகள் என்றனர். இன்னும் சிலரோ, 'ஏகம்சத்' என்பதற்குப் பிரமம் ஒன்றே உண்மை; என்பது பொருளன்று; பிரமம் ஒன்றே சுதந்திரமான உண்மை, இவ்வுலகும் உயிர்களும் உண்மைப் பொருள்களே; அவை பிரமத்தைச் சார்ந்துள்ள உண்மைகள், பரதந்திரமானவை என்றனர்.

இவ்வாறு விளக்கும் போது, மூன்று பொருள்கள் சிந்திக்கப் படுகின்றன.

1. இறைவன் (பிரமம்)
2. உயிர்கள்
3. உலகு

இம் மூன்று பொருள்களையும் பற்றிய ஆராய்ச்சியே இந்துக்கள் அளவில் தத்துவ ஆராய்ச்சி.. உபநிடதத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது அவை பொதுவாகப் பரம்பொருளைப் பற்றியும், இவ்வுலகைப் பற்றியும், இவ்வுலகில் வாழ்ந்தவாறு பரம் பொருளைச் சிந்திக்கும் உயிர்களைப் பற்றியும் ஆராய்கின்றன என முன்னரும் குறிக்கப் பெற்றது, இனி, இம்மூன்று பொருள்களையும் பற்றிக் கூறும் சில விளக்கங்களைப் பார்ப்போம்.

**இறைவன்**

தமிழர்கள் பரம்பொருளை, இறைவன், கடவுள் போன்ற சொற்களால் குறிப்பிடுவர். 'கடவுள்' என்ற சொல்லை விளக்கும் அறிஞர்கள். எல்லாப் பொருள்களுக்கும் உள்ளாகவும் உறைகின்ற பரம்பொருள் என்பர். பொதுவாக இந்துக்கள் இறைவன் இயல்பை இவ்வாறுதான் விளக்குவர்.

நம் சமயப் பெரியோர்கள் 'இறைவனுக்கு இரண்டு இயல்புகள் – இலக்கணங்கள் – உண்டு என்பர்.

1. சொரூப இலக்கணம், 2. தடத்த இலக்கணம். எல்லாவற்றையும் கடந்து குணம் குறிகள் இல்லாமல் விளங்கும் இயல்பைச் சொரூப இலக்கணம் என்பர். இதனை நிர்க்குணப் பிரமம் என்று வழங்குவதும் உண்டு. குணம் குறிகளோடு விளங்கும் நிலையைத் தடத்த இலக்கணம் என்பர்.

சொரூப நிலையில் பிரம்மம் என்றும், தடத்த நிலையில் ஈஸ்வரன் என்றும் வழங்குவது உண்டு. இவ்வாறு வழங்கும்போது ஈஸ்வரனுடைய பல்வேறு தோற்றங்களே, சிவன், விஷ்ணு, முருகன், தேவி போன்ற திருக்கோலங்கள் என்பர். பரம்பொருளை அதன்

சொரூப நிலையில் உணர்ந்து அனுபவித்தல் அருமை; ஆதலால் அப் பரம் பொருள் நம்மீது கொண்டுள்ள அருளால் எடுத்துக் கொண்ட வடிவங்களே இவை என்பர். எனவே இவ்வடிவங்களைப் பிரமத்துக்கு, பரம் பொருளுக்கு வேறானவை எனக் கொள்வதில்லை.

இராமகிருஷ்ணரின் விளக்கம் இங்குக் கருதத்தக்கது. 'காளிகாதேவி என்னும் சக்தியே பிரமம். பிரமமே காளிகாதேவி, கிரியா ரகிதமாயிருக்கும் போது பிரமம், கிரியா சகிதமாயிருக்கும் சக்தி தேவி' என்பது அவர் தரும் விளக்கம். சைவர்களும் பரம்பொருள் பஞ்ச கிருத்தியங்கள் (ஐந்தொழில்கள்) செய்வதற்கு அருட்கோலம் கொண்டு இறங்கி வந்தள்ள இறை இயல்பே தடத்த இலக்கணம் என்பர். இவ் வடிவங்கள் அனைத்தும் பரம் பொருள், தன்னை நமக்குக் காட்ட நாம் கண்ட வடிவங்கள் எனக் கொள்வதன்றி, மனிதன் தன் கற்பனையில் படைத்தவை எனக் கொள்வதில்லை.

''ஆத்மனை, வேத நூற் போதனையாலோ, மேதையாலோ, பல்லான்ற கேள்வியாலோ உணர்தல் அரிது. எவன் அதனால் வரிக்கப்படுகிறானோ அவனால் மட்டும் அது அடையப்படுகிறது. அவனுக்கே அது தனது வடிவைப் புலப்படுத்துகின்றது.''

கடோபநிடதம்.

அருட்கோலம் கொண்டுள்ள ஈஸ்வரனே ஆன்மாக்களின் உய்வுக்காக முத்தொழில் செய்கிறான் என்பர்.

முத்தொழில்களை ஐந்தொழில்களாக விரித்துக் கூறுவதும் உண்டு.

1. படைத்தல்
2. காத்தல்
3. அழித்தல்
4. மறைத்தல்
5. அருளல்

என்பன ஐந்தொழில்கள், படைத்தல், காத்தல், அழித்தல், என்பன முத்தொழில்கள். எந்த மூர்த்தியை வணங்கினாலும் சிவனை வணங்கினாலும், திருமாலை வணங்கினாலும் அம் மூர்த்திதான் நம் பொருட்டு முத்தொழில்களையும் செய்வதாகக் கூறுவர்.

இந்துக்கள் அளவில், 'படைத்தல்' என்பது உயிர்களுக்கு ஓர் உடலைக்கொடுத்து, அவை வாழ்வதற்கு ஏற்ற சூழலைப் படைத்துக் கொடுப்பதே.

'காத்தல்' என்பது அவ்வுடலோடு கூடிய உயிர், சிலநாள் வாழ்ந்து, அறியாமையை அகற்றி ஞான ஒளி பெற உதவுவதே.

'அழித்தல்' என்பது எடுத்த உயிர் வளர்ச்சிக்குப் பயன் தராது என்ற நிலையில் அவ்வுடலில் இருந்து அவ்வுயிரைப் பிரித்தலே.

'மறைத்தல்' என்பது உயிர்கள் தம் வினை போகத்தை அனுபவிக்கும்போது இறைவன் தான் மறைந்து நிற்றல் எனலாம்.

'அருளல்' என்பது உயிர்களைப் பக்குவப்பட்ட நிலையில் தன்னோடு சேர்த்துக் கொள்ளுதல் எனலாம்.

சைவ நெறியினர் இவ்வாறு ஐந்தொழில்களைக் கூறினாலும் பொதுவாக முத்தொழில் என்றலே எல்லாருக்கும் பொதுவான கருத்து.

**உயிர்**

'உயிர்கள் பல' என்பதை இந்து சமயம் பொதுவாக ஏற்றுக் கொள்கிறது எனலாம். ஆயின் இவ்வுயிர்களை விளக்கும்போது சிறிது வேறுபட்டு நிற்றல் உண்டு. ஒரு சாரார் உயிர்கள் பலவாயினும் பொருள் அளவில் பரம்பொருளுக்கு வேறானவை அல்ல என்பர். ஒரு கதிரவன் பல நீர் நிலைகளில் பல பிரதி பிம்பங்களைத் தந்து நிற்பது போல், ஒரு பரம்பொருளின் பிரதி பிம்பங்களே உயிர்கள் என்பர்.

சிலர் எல்லா இடங்களிலும் பரந்திருக்கும் ஆகாசம் தனித்தனிக் குடங்களிலும் இருப்பதை நாம் அறிவோம். குடங்களில் இருப்பதைக்

குடாகாசம் எனத் தனிப் பெயரிட்டு அழைப்பது போல் ஒவ்வோர் உடலிலும் இருக்கும் பரம் பொருளையே நாம் 'ஜீவான்மா' (உயிர்) எனத் தனிப் பெயரிட்டு அழைக்கின்றோம் என்பர்.

வேறு சிலரோ பிரதி பிம்பம், என்றோ, பரம் பொருளின் ஒரு பகுதியென்றோ கூறாமல், பரம் பொருளைப் போன்று, உயிர்களும் அறிவுடைய சித்துப் பொருளே என்றும், உயிர்கள் கட்டுப்பட்ட நிலையில் உள்ளன. பரம்பொருள் சுதந்திரமானது என்றும் விளக்குவர்.

இவ்வாறு பலவகையாக விளக்கினாலும், வாழ்க்கை அனுபவங் களில் உயிர்கள் பலவாக இருப்பதையும் அவை சித்துப் பொருளாக இருக்கும் இயல்பையும், இறுதியில் பரம் பொருளை அடைவதே வாழ்க்கை இலட்சியம் என்பதையும் எல்லா இந்துக்களும் உடன்பட்டுக் கூறுவர்.

உயிர்களுக்கும் இறைவனைப்போல் இரண்டு இயல்புகள் கூறுவதுண்டு. 1. கட்டுண்ட நிலை; 2. விடுபட்ட நிலை. கட்டுண்ட நிலையில் உயிர்கள் இவ்வுலகோடு ஒன்றுபட்டு நிற்கும் என்றும், விடுபட்ட நிலையில் இறைவனோடு ஒன்றுபட்டு நிற்கும் என்றும் கூறுவர்.

### கட்டு

இந்தக் கட்டைப் பலவகையாக விளக்குவர். சிலர் அறியாமை (அவித்தை) என்பர். சிலர் திரிபு உணர்ச்சி என விளக்கி அதனை 'மாயை' என்ற சொல்லால் குறிப்பிடுவர். இப்பியை வெள்ளி என்றும், கயிற்றைப் பாம்பு என்றும் கொள்வதையே இவ்வாறு கூறுவர். சிலர் 'வினை' என்பர், இன்னும் சிலர் 'ஆணவம்' என்பர். ஆயின் இன்றுள்ள நிலை கட்டுண்ட நிலை என்பதில் இருவேறு கருத்துகள் இல்லை.

இந்தக் கட்டு எவ்வாறு ஏற்பட்டது என்பதிலும் வேறு பட்டு நின்று விளங்குவதுண்டு. இது அனாதி, தொடக்கம் கூற முடியாதது என்பர் சிலர். சிலர் தொடக்கத்தில் ஆன்மா கட்டின்றி இருந்தது. கட்டு

இடையே ஏற்பட்ட ஒன்றே என்பர். ஆயின் கட்டுண்ட நிலையை உயிர்களின் இயல்பு எனக் கூறும் வழக்கில்லை. இடையே வந்து சேர்ந்த காலத்தையும் கூறுவதில்லை. எல்லா இந்துக்களும் இக் கட்டிலிருந்து விடுபட ஞானப் பேற்றையே வற்புறுத்துவர். கட்டிலிருந்து விடுபட ஞான சாதனை வேண்டும் என்பதே இந்துக்களின் நம்பிக்கை.

**இலட்சியம்**

ஞானப் பேற்றின் விளைவாக ஒருவன் பெறும் தெய்வானுபவமே இந்துக்களின் இலட்சியம், இத் தெய்வ அனுபவத்தை 'அத்துவிதம்' என்பர் பலர். 'துவைதம்' என்பர் சிலர். அத்துவிதம் என்பது இரண்டற்ற நிலை. தெய்வ அனுபவத்தில் நான்வேறு, தெய்வம்வேறு என்ற நிலை இல்லை என்பதே இதன்பொருள். இந்த அத்துவிதத்தையும் பல நிலைகளில் விளக்குவர்.

## 1. கேவலாத்துவிதம்

(கேவலம் – தனிமை, இணையற்றது, மோட்சம்) 'அத்துவித' அனுபவத்தில் ஒரு பொருளே உண்டு எனக் கூறும் கோட்பாடு இது. தெளிந்த ஞானம் பிறந்து விடும்போது 'உயிர்கள்' என்ற பன்மை உண்மையல்ல. உலகும் உண்மையன்று, இறை ஒன்றே உண்மை என்பதை நாம் உணரமுடியும் என்பர். எனவே உயிர்கள் பலவாகத் தோன்றலும், பிற உலகத் தோற்றமும் உண்மையல்ல; ஞானக் குறைபாட்டால் தோன்றும் தோற்றமே என்பர். ஞானக் குறைபாட்டை மயக்க அறிவு என்றும் அவித்தை என்றும் கூறுவர். இறைவன் என்ற உண்மை வெளிப்படத் தோன்றாமல் இருப்பதற்கு அவன் 'மாயை' காரணமென்றும், அம் மாயை விளக்கப்பட முடியாதது என்றும் கூறுவர். ஞான யோகத்தால் 'மாயை' என்ற போர்வை அகற்றப்பட பிரம்மமே உண்மை என்பதைத் தெளிவோம் என்பர்.

ஞானத்தால் உயிர்கள் பல வல்ல என்று தெளிவதோடு கட்டிலிருந்த விடுபட்ட ஆன்மாவும் பிரம்மமும் ஒன்றே என்பதாலும் கட்டிலிருந்து விடுபட **'அகம் பிரம்மாஸ்மி'** (நான் பிரமமாகின்றேன்) என்னும் மகாவாக்கியத்தைத் தியானிப்பதால் கைகூடும் என்பர். இறைவனருளில் நம்பிக்கை கொண்டு பக்தி நெறியில் நிற்பவர்கள் இக்கோட்பாட்டை ஏற்றுக்கொள்வதில்லை. பிரமத்தை மறுத்து நானே பிரமம் எனக் கூறுபவர்கள் என இவர்களை இகழ்வதுண்டு.

ஆயின் இவர்கள் கோட்பாட்டை ஊன்றி நோக்கினால், இவர்கள் உலகியல் அளவில் ஏற்படும் 'நான்' என்பதும் இவர்கள் கோட்பாட்டிலும் பக்திக்கு இடமுண்டு என்பதும் விளங்கும், வழிபடும் 'ஈஸ்வரன்' என்பதும் ஒன்றே எனக் கூறுவதில்லை. 'நான் என்பது நிலையற்ற போதமேயென்றும், நிலையான நான் பரப்பிரம்மத்திற்கு வேறானதென்றும் கூறி, இறுதியில் ஒரே பொருள் தான் உண்டு என்பதை வற்புறுத்துகிறார்களேயன்றி உலகியல் அளவில் நான் உண்டு, ஈஸ்வரன் உண்டு உலகுண்டு என்று நம்புகின்றவர்களே.

இதனாலேயே இவர்கள் 'அகம் ஈஸ்வரோஸ்மி' என எங்கும் குறிப்பிடுவதில்லை. வழிபாட்டளவில் 'நான் என்பதற்கு வேறாகத் தெய்வத்தைக் கண்டு பக்தி செலுத்துகிறவர்களே. இக் கோட்பாட்டை நன்கு விளக்கியவராகக் கூறப்படும் ஒரு ஞானி சங்கரர். இவரை ஞானி என்று கூறும் அளவுக்கு அவருடைய பாடல்கள் பல இவரைச் சிறந்த பக்தன் என்றும் அறிவிக்கின்றன.

## 2. விசிட்டாத்துவிதம்

இராமானுஜரால் வளர்க்கப் பெற்ற ஸ்ரீ வைணவக் கோட்பாட்டையே 'விசிட்டாத்துவிதம்' என்பர். சிவபரத்துவத்தை உடன்படும் சைவர்களிலும் 'விசிட்டாத்துவிதிகள்' உண்டு என்பர். இவர்கள் கேவலாத்துவிதிகள் கூறுவது போன்று இறுதியான உண்மை ஒன்றே எனக் கூறினாலும் அவ்வொன்று விசேடணத்தோடு **(Attributes)** கூடியது என்பர். இக் கருத்துப்படி, பிரம்மத்துக்கு பிறிதொரு வகையில்

கூறுவதென்றால் பிரம்மத்துக்கு உலகு, உயிர்கள் என இரண்டு உடல்கள் உண்டு எனலாம்.

இந்த வைணவ சித்தாந்தப்படி 1. அசித்து (உடல், உலகு) 2. சத்து (உயிர்) 3. ஈஸ்வரன் என்னும் மூன்று பொருள்களும் அழியாதவை. மூலப் பிரகிருதி அல்லது அடிப்படை சடத்திலிருந்து மண், நீர் முதலிய 24 தத்துவங்கள் வளர்ந்துள்ளன என்றும், சித்து அல்லது உயிர் 25 ஆம் தத்துவம் என்றும், அசித்திலும் சித்திலும் உள்ளுறை பொருளாக ஈஸ்வரன் விளங்குகிறான் என்றும் கூறுவர்.

நம் உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பே அசித்து, சித்து என்னும் இரண்டிற்கும் ஈஸ்வரனுக்கும் உள்ள தொடர்பு. இதனை அவயவ அவயவித் தொடர்பு, சரீர சரீரித் தொடர்பு என்பர். இத் தொடர்பினை வற்புறுத்துவதின் வழியாக இறுதியான உண்மை ஒன்றே என்பதை இக் கோட்பாடும் ஏற்றுக்கொள்கிறது. அவ்வுண்மை இரண்டு சரீரங்களோடு கூடியது என்பதே இதற்கும் கேவலாத்துவிதத்திற்கும் உள்ள வேறுபாடு.

## 3. சைவ சித்தாந்தம்

மெய்கண்டாரால் வளர்க்கப் பெற்ற சைவ சித்தாந்தமும் அத்துவிதத்தை விளக்குவதே, கேவலாத்துவிதிகள் பிரம்பம் ஒன்றே உண்மை; ஏனையவை–உலகு, உயிர்கள்–தோற்றம் என்பர். விசிட்டாத்துவிதிகள் பிரம்மம் ஒன்றே உண்மை, உலகுயிர்கள் அவ்வுண்மையின் அவயவம் என்பர். சைவ சித்தாந்திகளோ பிரம்மம் (சிவம்), உயிர்கள், உலகு இம்மூன்றும் உண்மை என்பர். இம்மூன்று பொருள்களையும் தன்மையில் வேறுபட்ட பொருள்களாகக் கொண்டாலும் தங்கள் கோட்பாட்டை அத்துவிதம் என்றே கூறுவர். இறுதியான தெய்வ அனுபவத்தில், ஆன்ம அனுபவத்தில் ஆன்மாக்கள், தற்போதத்தை இழந்து, சிவ போதத்தில் இரண்டற்று நிற்கும் என்ற பொருளிலேயே அத்துவிதத்தைக் கொள்கின்றனர்.

ஆயின் இறுதி அனுபவத்தின் போதும் கேவலாத்துவிதிகள் போல் அல்லாமல் பதி, பசு, பாசம் என்னும் மூன்று பொருள்களும் உண்டு. அவை நிலையான உண்மைகள் என்பதை வற்புறுத்துவர். சித்தாந்தக் கோட்பாட்டை உபதேச நிலையில் கூறப்படும் சின்முத்திரை ஓரளவு விளக்கும். பெருவிரல் இறைவன், ஆள் காட்டி விரல் உயிர்; ஆள்காட்டி விரலோடு சேர்ந்திருக்கும் மூன்று விரல்களும் மூன்று மலங்கள்.

மும் மலங்கள் தொடர்பை விட்டு விட்டு, ஆன்மா இறைவனோடு சேர்தல் வேண்டும் என்பதையே ஆள்காட்டி விரல் பெரு விரலோடு சேர்ந்து நிற்பது உணர்த்தும், எனவே சித்தாந்தக் கருத்துப்படி 'அத்துவிதம்' என்பது நீரும் நீரும் சேர்தல் போன்றதன்று. விரலும் விரலும் ஒன்று சேர்தல் போன்றதே எனலாம், ஒன்றாதல் இல்லை. ஒற்றுமையாதலே எனல் வேண்டும்.

**துவிதம்**

இறைவன், உலகு, உயிர்களை உண்மையானவை என ஏற்றுக்கொண்டாலும், இறைவன் ஒருவனே சுதந்திரமானவன். உலகு உயிர்கள் பரதந்திரமானவை எனக் கூறும்; எல்லா நிலைகளிலும் இறைவனுக்கு உட்பட்டே உயிர்கள் இயங்குவதால், மோட்ச நிலையிலும் உயிர் இறைவனோடு இரண்டறக் கலத்தல் என்பதில்லை. அந் நிலையிலும் சுதந்திரமற்று இறைவனுக்கு அடிமைப்பட்டு நிற்றலே உண்டு என்பர்.

மத்வாச்சாரியாரால் வளர்க்கப்பெற்றது இக் கோட்பாடு. இம் மூன்று கோட்பாட்டினரும் மிகுதியாக வற்புறுத்துவது பக்தி நெறியே. தத்துவக்கோட்பாடுகளை விளக்கும் போது வழிபடு கடவுள் அடிப்படையில் விளக்கப்படுதல் இல்லை. திருமாலை வழிபட்ட இராமானுஜர் விசிட்டாத்துவிதக் கோட்பாட்டினர். மத்துவர் துவிதக் கோட்பாட்டினர். சிவனை வழிபட்ட சங்கரர் கேவலாத்துவிதக்

கோட்பாட்டினர். சிவனை வழிபட்ட ஸ்ரீ கண்டர் விசிட்டாத்துவிதக் கோட்பாட்டினர்.

இக்கோட்பாடுகள் அனைத்தும் ''வேதாந்தக் கோட்பாடு'' என்றே வழங்கப்படும் என்பது நாம் நினைவிற் கொள்ள வேண்டிய ஒன்று.

**வேறுபடும் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்**
**விளங்கு பரம்பொருளே நின்விளையாட் டல்லால்**
**மாறுபடும் கருத்தில்லை முடிவில் மோன**
**வாரிதியில் நதித்திரள் போல் வயங்கிற் றம்மா!**

என்ற தாயுமானவர் கருத்தே நாம் நினைவிற் கொள்ள வேண்டியுள்ளது. பசுக்கள் பல நிறத்தனவாகலாம், பால் ஒன்றே என்பது வேத வாக்கியம், இன்னும் இதுபற்றி அறியவிரும்புவோர் கடப்பை ஸ்ரீ சச்சிதானந்த யோகீஸ்வர சுவாமிகள் இயற்றிய **''ஜீவப்பிரம்ம ஐக்கியம்''** என்ற நூலையும் அடியிற் கண்ட வேதாந்த நூல்களையும் கற்றுத் தெளிவார்களாக!

1. ஞானவாசிட்டம்
2. கைவல்லிய நவநீதம்
3. சசி வர்ண போதம்
4. வேதாந்த சூளாமணி
5. விசார சாகரம்
6. விவேக சூடாமணி
7. விசார சந்திரோதயம்
8. சொரூப சாரம்
9. தத்வாமிர்தம்
10. ரிபு கீதை
11. வாசுதேவ மனனம்
12. ஒழிவில் ஒடுக்கம்
13. முத்தி சோபானம்
14. ஞானவெட்டியான்
15. ஜீவன் முக்திப் பிரகரணம்
16. விருத்திப் பிரபாகரம்
17. தத்துவ அனுசந்தானம்
18. அத்துவித உண்மை
19. வேதாந்த பரிச்சேதம்
20. பிரபோத சந்திரோதயம்
21. குறுந்திரட்டு
22. நாநா ஜீவ வாதக் கட்டளை
23. மகாராஜா துறவு
24. வார்த்திகாமிர்தம்
25. பெருந்திரட்டு
26. வேதாந்த பரிபாஷை

சுமார் 60 வருஷங்களுக்கு முன்பு வேதாந்த மடங்கள் ஆங்காங்கு இருந்தன. அங்கு இந்த ஞானநூல்கள் போதிக்கப்பட்டும் விவாதிக்கப் பட்டும் வந்தன. கால தேச வர்த்தமானங்களால் இவ்வரிய சாஸ்திரங்கள் கவனிக்கப்படாமல் இருக்கின்றன. இக்கலையில் தாகம் உள்ளவர்கள் இன்னும் இருந்து கொண்டுதான் இருக்கிறார்கள்.

# கைவல்லிய நவநீதம்

## பாயிரம்

### அவதாரிகை

வடநூல் ஆராய்ச்சியில் வல்லமையுள்ள இந்நூலாசிரியர் தாம் அடைந்த சுவானுபூதிப் பிரத்தியட்சத்தை உலகம் எளிதில் அடைந்து ஆனந்தாதீதமாகும் பொருட்டு அருளினால் சொல்லப் புகுந்த இந்நூல் இனிது முடியுமாறு, அதன் அந்தரங்கமான பிரஞ்ஞானம் பிரமம் என்னும் இருக்கு வேத மகா வாக்கியார்த்தமாக விளங்கும் அத்துவித சொருபத்தை விலட்சணமாகவும் சலட்சணமாகவும் துதிப்பான் தொடங்கி, இச்செய்யுளில் சமாதியின்கண் உதயமான விலட்சண மாகிய கூடஸ்த பிரமத்தைத் துதிக்கின்றார்.

அறுசீர் விருத்தம்

1. **பொன்னிலம் மாதர் ஆசை**
**பொருந்தினர் பொருந்தார் உள்ளம்**
**தன்னிலம் தரத்தில் சீவ**
**சாட்சிமாத் திரமாய் நிற்கும்**
**எந்நிலங் களினும் மிக்க**
**எழுநிலம் அவற்றின் மேலாம்**
**நன்னிலம் மருவும் ஏக**
**நாயகன் பதங்கள் போற்றி.**

(இதன் பொருள்) பொன்னினிடத்தும் மண்ணினிடத்தும் மடவாரிடத்தும் ஆசையுள்ள அஞ்ஞானிகளும் நிராசையுள்ள மெய்ஞ்ஞானிகளுமாகிய இவர்களது இதயாம்பரத்தில் நான்கு

---

அவதாரிகை – முகவுரை

பூதங்களிலும் நிறைந்திருக்கின்ற ஆகாயத்தைப் போலக் கூடஸ்த சைதன்ய மாத்திரமாக நிறைந்திருக்கின்ற எவ்விதமான நிலைகளிலும் மேலாய ஞான பூமிகள் ஏழனுள் முடிவாகிய துரிய பூமியிற் பொருந்திய ஒன்றாகிய பிரம சைதன்னியத்தின் திருவடிகளை வணங்குவாம்.

சைதனியம் – தத்துவஞானம்; ஆன்மா வடசொல், (பொருள் அகராதி நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது.)

சொரூபம் – இயற்கைத்தன்மை; உருவம், அழ்கு.

இச்செய்யுளில் முற்கூறிய அத்துவிதவஸ்துவைச் சகச நிட்டையில் சலட்சணமாக விளங்கிய சுயம் சைதன்னியமாகத் துதிக்கின்றார். (1)

2. **ஈன்றளித் (து) அழிக்கும் செய்கைக் (கு)**
**ஏதுவாம் அயனாய் மாலாய்**
**ஆன்றஈ சனுமாய்த் தானே**
**அனந்தமூர்த் தியுமாய் நிற்கும்**
**பூன்றமுத் தனுமாய் இன்பப்**
**புணரியா தவனாய் நாளும்**
**தோன்றிய விமல போத**
**சொரூபத்தைப் பணிகின் றேனே.**

சிருஷ்டி ஸ்திதி சங்காரம் என்னும் முத்தொழிற்கும் ஏதுவாகிய பிரமனாகியும் விஷ்ணுவாகியும் மாட்சிமையுள்ள உருத்திரனாகியும் இன்னும் அநேக வடிவங்களாகியும் இருக்கின்ற பூரணமான முத்தனாகியும் ஆனந்த சமுத்திரத்தில் உதிக்கும் ஞான சூரியனாகியும் சதோதயமாகிய சுத்த சைதன்னியமான பிரம சொரூபத்தை வணங்குகிறேன்.

சர்வம் பிரமமயம் என்னும் உபதேச வாக்கியப் படிக்கு சொரூப சாட்சாத்காரமான சுத்த சைதன்னியத்தைத் துதி செய்ததாம்.

சிருஷ்டி – ஆக்கல்

ஸ்திதி – அளித்தல்

சங்காரம் – அழித்தல்

சலட்சணம் – பொது இயல்பு

விலட்சணம் – சிறப்பு இயல்பு (வி - மேன்மை) (2)

முற்கூறிய ஆத்ம சொரூபமே படிவமான அருள் இறையை அதீதமாகவும் சாட்சாத்காரமாகவும் துதிக்கத் தொடங்கி இக் கவியில் அதீதமாகத் துதிக்கின்றார்.

3. **எவருடை அருளால் யானே**
**எங்குமாம் பிரமம் என்பதால்**
**கவருடைப் புவனம் எல்லாம்**
**கற்பிதம் என்ற றிந்து**
**சுவரிடை வெளிபோல் யானே**
**சொரூபசு பாவம் ஆனேன்**
**அவருடைப் பதும பாதம்**
**அனுதினம் பணிகின் றேனே.**

யாவருடைய கிருபையினால் நானே எவ்விடத்திலும் நிறைந்திருக்கின்ற பிரம சொரூபமும் என்னிடத்தில் தோற்றி விரிந்திருக்கின்ற உலக முழுவதும் பொய்யென்று அறிந்து சுவரிடத்திருக்கும் ககனம் போலே நானே பிரம சுபாவமும் ஆயினேன். ஆதலால் அவரது கமல மலர் போன்ற திருவடிகளை எப்போதும் வணங்குகின்றேன்.

சர்வமாய்ச் சர்வம் இலதாய் இருக்கின்ற தன்னைத் தன்னிடத்துத் தானாயிருந்து விளக்கிய குருதுரியத்தை வணங்கினதாம்.

அதீதம் – கடந்தது, மேற்பட்டது

சாட்சாத்து – கண் கூடாக (சக்ஷீ - கண்)

ககனம் – வானுலகம், வாயு மண்டலம்

சர்வம் – முழுதும்

துரியம் – தன் மயமாய் நிற்பது
சுவர் – உச்ச ஒலி (3)

இச் செய்யுளிற் சற்குரு சொரூபத்தை சாட்சாத் காரமாகத் துதிக்கின்றார்.

4. **என்னுடை மனது புத்தி**
**இந்திரிய சரீரம் எல்லாம்**
**என்னுடைய அறிவி னாலே**
**இரவிமுன் இமமே யாக்கி**
**என்னுடை நீயும் நானும்**
**ஏகமென்(று) ஐக்கியஞ் செய்ய**
**என்னுடைக் குருவாய்த் தோன்றும்**
**ஈசனை இறைஞ்சி னேனே.**

என்னுடைய மனம் புத்திகளாகிய அந்தக்கரணமும் ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும் தூலதேகமுமாகிய இவை அனைத்தும் எனது ஆத்ம ஞானத்தினால் சூரியனைக் கண்ட பனியைப் போலச் செய்து, எனது சுபாவமான நீயென்னும் கூடஸ்தனும் தானென்னும் பிரமமும் ஒன்றெயென அத்துவிதமாக்க, எனது ஆசாரியராக உதயமான அருள் இறையை வணங்கினேன்.

இமம் – பனி

மனம் முதலிய தத்துவங்கள் அனைத்தையும் சமாதி ஞானத்தினால் கரைத்து அதனில் உதயமாகும் ஆனந்தமாகிய அத்துவித சொரூபத்தைத் தரிசிப்பிக்கும் பொருட்டுப் பூரணமே ஓர் உருவாக எழுந்தருளிய ஆசாரியரை வணங்கினதாம்.

ஞானேந்திரியங்கள் (5) மெய், வாய், கண், மூக்கு, செவி,

கன்மேந்திரியங்கள் (5) வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம். (4)

தனது ஆசிரியரை வணங்கி, அவர் அருளினால் கூறப்புகுந்த இந் நூன்முகத்தில் கூறப்படும் விஷயமும், இதனால் உண்டாகும் பயனும், இந்நூற்கும் இதில் கூறப்படுவதாகிய விஷயத்திற்கும் உள்ள சம்பந்தமும், இது கேட்டற்குரிய அதிகாரியும் ஆகிய அனுபந்த சதுட்டயம் இந்நூல் கற்கும் மாணாக்கன் உணரும் பொருட்டு உரைக்க வேண்டுதலின் அவற்றுள் அதிகாரியும் விஷயமும் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

5. **அந்தமும் நடுவும் இன்றி**
**ஆதியும் இன்றி வான்போல்**
**சந்ததம் ஒளிரும் ஞான**
**சற்குரு பாதம் போற்றிப்**
**பந்தமும் வீடும் காட்டப்**
**பரந்த நூல் பார்க்க மாட்டா**
**மைந்தரும் உணரு மாறு**
**வஸ்துதத் துவஞ்சொல் வேனே.**

ஆதி மத்தியாந்த ரகிதமாய் ஆகாயத்தைப் போலச் சதோதயமாய் விளங்குகின்ற ஞானாசிரியரது பாதத்தை வணங்கிப் பெத்தமும் முத்தியுமாகிய இவைகளின் சொரூபத்தைத் தெரிவிக்கும் பொருட்டு விரிந்திருக்கின்ற வேதாந்த சாஸ்திரங்களை ஆராய்ந்தறியச் சக்தியில்லாத சீடரும் எளிதில் உணரும்படி பரவஸ்துவின் உண்மையைச் சொல்லுவேன்.

சகிதம் X ரகிதம்

மைந்தர் என்பது அதிகாரியெனவும், வஸ்து தத்துவம் என்பது விடயமெனவும், கொள்க. 'பரந்த நூல் பார்க்க மாட்டா மைந்தரும்' என்னும் உம்மையால் பார்ப்பவர்கள் என்பதும் ஆயிற்று.

சகிதம் – சேர்ந்திருப்பது
ரகிதம் – பிரிந்திருப்பது. (5)

இச் செய்யுளில் சம்பந்தமும் பிரயோசனமும் கூறுகின்றார்.

6. **படர்ந்தவே தாந்தம் என்னும்**
**பாற்கடல் மொண்டு முன்னூல்**
**குடங்களில் நிறைத்து வைத்தார்**
**குரவர்கள் எல்லாம் காய்ச்சிக்**
**கடைந்தெடுத்(து) அளித்தேன் இந்தக்**
**கைவல்ய நவநீ தத்தை**
**அடைந்தவர் விடய மண்தின்(று)**
**அலைவரோ பசியி லாரே.**

விரிந்திருக்கின்ற உபநிடதமென்னும் பாற்கடலில் முகந்து முன்னூலாகிய குடங்களில் ஆசிரியர்கள் நிறைத்து வைத்தார்கள். அவைகள் அனைத்தையும் காய்ச்சிக் கடைதல் செய்து இந்த ஞான சாஸ்திரமாகிய கைவல்லிய நவநீதத்தை எடுத்துக் கொடுத்தேன். இதைப் புசித்தவர்கள், நித்திய திருத்தியடைந்தவர்கள். ஆதலால் விடயானந்தமென்னும் மண்ணைப் புசித்துப் பவத்தில் சுழல்வார்களோ? சுழலார்.

கைவல்லிய நவநீதம் என்பது சம்பந்தமும், அடைந்தவர் பசியிலார் என்பது பிரயோசனமுமாம் எனக் கொள்க.

பிரமமென்னும் காமதேனுவிற் சுரந்த சுருதிகள் என்னும் பாலை, விசாரமென்னும் அக்கினியால் பூர்வபட்சமென்னும் நீர் சுண்ட, சித்தாந்தமென்னும் மதுரம் மிகக் காய்ச்சி, விருத்தி ஞானமென்னும் பிரைகுற்றி, உபதேசம் என்னும் மத்திட்டு, அனுபவ ஆராய்ச்சி யென்னும் கடைதலைச் செய்து, அதில் எழாநின்ற கைவல்லிய மென்னும் நவநீதத்தை அனுபவித்தலை அடைந்து, நித்திய திருத்தியான பசியிலார் விடயானந்தமான மண்ணைப் புசியார்கள் எனக் கூறினதாம்.

குரவர்கள் – ஆசிரியர்கள்
நவநீதம் – வெண்ணெய்

வேதாந்தம் – உபநிடதம், அத்துவைதம்
கைவல்யம் – மோட்சம். (6)

உபாசனா மூர்த்தியை வணங்கி இந்நூலின் படல வகை கூறுகின்றார்.

7. **முத்தனை வேங்க டேச**
**முகுந்தனை எனையாட் கொண்ட**
**கத்தனை வணங்கிச் சொல்லும்**
**கைவல்ய நவநீ தத்தைத்**
**தத்துவ விளக்க மென்றும்**
**சந்தேகம் தெளிதல் என்றும்**
**வைத்திரு படல மாக**
**வகுத்துரை செய்கின் றேனே.**

பாசங்களை நீக்கி நிற்பவனை, வேங்கடாசலபதியாகிய திருமாலை, என்னை அடிமை கொண்ட இறைவனைப் பணிந்து உரைக்கும் கைவல்லிய நவநீதமென்னும் ஞான சாஸ்திரத்தைத் தத்துவ விளக்கம் எனவும் சந்தேகம் தெளிதல் எனவும் நாமம் தரித்து இரண்டு படலமாகப் பிரித்துச் சொல்லுகின்றேன். (7)

முதலாவது

# தத்துவ விளக்கப் படலம்

முற்கூறிய படலங்களுள் தத்துவ விளக்கம் என்னும் படலத்தில் தத்துவத்தை விளக்கும் பொருட்டு முதற்கண் அது கேட்கும் அதிகாரிக்குரிய சாதன சதுட்டய இலக்கணம் கூறுகின்றார்.

**8. நித்திய அநித்தி யங்கள்**
**நிண்ணயம் தெரிவி வேகம்**
**மத்திய இகப ரங்கள்**
**வருபோகங் களில்நி ராசை**
**சத்தியம் உரைக்க வேண்டும்**
**சமாதியென்(று) ஆறு கூட்டம்**
**முத்தியை விரும்பும் இச்சை**
**மொழிவர்சா தனம்இந் நான்கே.**

நித்தியா நித்திய வஸ்துக்களின் நிச்சயம் தெரிகின்ற விவேகமும், இடையிலுள்ள இகலோக பரலோகங்களில் உண்டாகின்ற செல்வங் களில் விராகமும், உண்மையாகச் சொல்லத் தகுந்த சமாதி சட்க சம்பத்தியும், முமுட்சுத்துவமும் ஆகிய இந் நான்கையும் சாதன சதுட்டயம் என்று சத்துக்கள் சொல்வார்கள்.

| | | |
|---|---|---|
| நித்தியம் | – | என்றும் உண்மை |
| அநித்தியம் | – | அழியும் தன்மையது |
| விராகம் | – | பற்று இன்மை |
| முமுட்சு | – | மோட்ச விருப்பன்; துறவு. |
| சத்துக்கள் | – | அறிவுடையோர். (1) |

**9. சமம்தமம் விடல்ச கித்தல்**
**சமாதானம் சிரத்தை ஆறாம்**
**சமம்அகக் கரண தண்டம்**
**தமம்புறக் கரண தண்டம்**
**அமர்மனை விவகா ரங்கள்**
**அருகலே விடல்என் றாகும்**
**அமர்செயும் சுகதுக் காதி**
**அனுபவிப் பதுச கித்தல்.**

சமமெனவும், தமமெனவும், உபாதியெனவும், திதீட்சை யெனவும், சமாதானமெனவும், சிரத்தையெனவும் ஆறாகும். சமமாவது அந்தக் கரணத்தைத் தண்டித்தலாம்; தமமாவது புறத்தின் கண் உள்ள தசேந்திரியங்களைத் தண்டித்தலாம். விடல் என்பது விரும்பப் பட்ட குடும்ப விவகாரங்களைச் சுருக்கச் செய்தலாம். சகித்தலாவது கலகஞ் செய்கின்ற இன்ப துன்ப முதலியவைகளைப் பிராரத்தமென்று சம சித்தமாய் அனுபவிப்பதாம்.

| | | |
|---|---|---|
| பிராரத்தம் | – | பழவினை, |
| சிரத்தை | – | நம்பிக்கை; அன்பு |
| அந்தக்கரணம் (4) | – | மனம், புத்தி, சித்தம், அகங்காரம். |
| தசேந்திரியங்கள்(10) | – | ஞானேந்திரியங்கள் (5), கர்மேந்திரியங்கள் (5) (2) |

**10. சிரவணப் பொருளைத் தானே**
**சித்தம்சிந் திக்கு மாறு**
**சரசமாய் வைக்கும் இத்தைச்**
**சமாதானம் என்பர் மேலோர்**

பரமசற் குருநூல் அன்பு
பற்றலே சிரத்தை யாகும்
வரமிகு சமாதி யாறு
வகையாம்சொற் பொருளீதாமே

வேதாந்த சிரவணார்த்தங்களை உள்ளமானது பிரியமாய்ச் சிந்திக்கும்படி இனிய தன்மையாகச் செய்யும். இதை மகான்கள் சமாதானமென்று சொல்லுவார்கள்; மேலான ஆசிரியரிடத்தும் வேதாந்த சாத்திரங்களிடத்தும் அன்பு வைத்தல் சிரத்தையாம். மேன்மை மிகுந்த சமாதியென்னும் ஆறு பிரிவான பதத்துக்கு அருத்தம் இதுவாம்.

அநித்திய வஸ்துக்கள் இவையெனக் கண்டு நித்திய வஸ்துவை அடைதற்கு ஏதுவான குணங்களையே சாதன சதுட்டயமாகக் கூறினதாம்.

சிரவணம் – காது, கேள்வி.
சமாதி – மனத்தைப் பரம்பொருளோடு ஐக்கியப் படுத்துகை. (3)

அச்சாதனங்கள் இன்றியமையாச் சிறப்பின எனவும் அதனால் உண்டாகும் பயன் இஃதெனவுங் கூறுகின்றார்.

11. சாதனம் இன்றி ஒன்றைச்
சாதிப்பார் உலகில் இல்லை
ஆதலால் இந்த நான்கும்
அடைந்தவர்க்(கு) அறிவுண்டாகும்
நூதன விவேகி யுள்ளின்
நுழையாது நுழையும் ஆகில்
பூதசென் மங்கள் கோடி
புனிதனாம் புருடன் ஆமே.

சாதனம் இல்லாமல் ஒரு காரியத்தைச் சாதிப்பவர் பூமியின்கண் இல்லை. ஆகையால் இச் சாதன சதுட்டயங்களைப் பெற்றவர்களுக்கு

ஞானோதயமாம்; புதிய விவேகியின் மனத்தில் புகாது. புகுமானால் இறந்த காலத்துள்ள அனந்த சனனங்களில் சித்த சுத்தியுள்ளவனாகிய பூமானாம்.

மெய்யுணர்வை உணர்வதற்கு இச் சாதனங்கள் அவசியம் வேண்டுமென்பதாம்.

(4)

சனனங்கள் – பிறவிகள்.

அச் சாதனமுள்ள சீடனது தீவிர தர பக்குவத்தை அறிவித்தல்.

**12. இவன் அதி காரி யானோன்**
**இந்திரி யங்க ளாலும்**
**புவனதெய் வங்க ளாலும்**
**பூதபெள திகங்க ளாலும்**
**தவனமூன் றடைந்து வெய்யில்**
**சகித்திடாப் புழுப்போல் வெம்பிப்**
**பவமறு ஞான தீர்த்தம்**
**படிந்திடப் பதறி னானே.**

இச்சாதன சதுட்டயம் உள்ளவனே இந்நூலுக்கு அதிகாரியாவான். ஆதி ஆத்மிகத்தினாலும் ஆதிதெய்விகத்தினாலும் ஆதி பெளதிகங்களாலும் தாபத்திரையாக்கினியை அடைந்து, சூரியனது உஷ்ண கிரணத்துக்குச் சகிக்கமாட்டாத கிருமியைப்போல வெப்பமுற்று, பிறவியை ஒழிக்கின்ற ஞான சாகரத்தின் மூழ்கத் தீவிரமுற்றான்.

தாபத் திரையாக்கினி ஆகிய சம்சார துன்பங்களுக்கு ஆற்றாதவனே அவை நீங்கிப் பிரமானந்தமடைய விரைவன் என்பதாம்.

(5)

பவம் – பிறவி.

அத் தீவிரதர பக்குவனுக்கு ஆசிரியர் தரிசனமாதல்.

**13. ஆனஇம் மனைவி மக்கள்**
**ஆர்த்தாஈ டணைகள் மூன்றில்**

**கானவர் வலையிற் பட்டுக்**
**கைதப்பி யோடு மான்போல்**
**போனவன் வெறுங்கை யோடே**
**போகாத வண்ணம் சென்று**
**ஞானசற் குருவைக் கண்டு**
**நன்றாக வணங்கி னானே.**

தனக்கான இவ் இல்லாளும் புத்திரரும் தனமும் ஆகிய ஈடணாத்திரயங்களினின்றும் வேடர்கள் வீசும் வலைக்குள் அகப்பட்டுத் தவறிச் செல்லும் மானைப் போல ஓடினவன், சும்மா செல்லாதபடி உளத்தில் அன்பும் புறத்தில் ஆராதனைக்குரிய வஸ்துக்களும் கொண்டு போய் ஞானாசாரியரைத் தரிசனம் செய்து திரிகரண சுத்தியாகப் பூசித்துப் பணிந்தான்.

ஈடணாத்திரயமான துன்பங்களினின்று நீங்கிய இவனுக்கு இன்ப வடிவமான சற்குரு தரிசனமாயிற்று என்பதாம்.

திரிகரணம் – மனம், வாக்கு, காயம். (6)

தரிசனம் செய்த அவ் ஆசிரியரிடத்தில் செய்யும் விண்ணப்பம்.

14. **வணங்கி நின்(று) அழுது சொல்வான்**
**மாயவாழ் வெனுஞ்சோ கத்தால்**
**உணங்கினேன் ஐய னேஎன்**
**உள்ளமே குளிரும் வண்ணம்**
**பிணங்கிய கோச பாசப்**
**பின்னலைச்சின்ன மாக்கி**
**இணங்கிய குருவே என்னை**
**இரட்சிக்க வேண்டும் என்றான்.**

பணிந்தெழுந்து நின்று கண்ணீர் சொரிய அழுதுரைப்பான்: பொய்யான குடும்ப வாழ்க்கையென்னும் துன்பத்தினால் வாடினேன். எனது ஆசிரியரே! என் உள்ளம் குளிரும் வண்ணம் செறிந்திருக்கிற பஞ்சகோசமாகிய பந்தப் பின்னலைத் தூளாக்கி முத்தியை

அடைவிப்பதற்கு உடன்பட்டிருக்கும் ஆசிரியரே! அடியேனை முத்தியிற் சேர்க்க வேண்டும் என்று சொன்னான்.

அறிவின்மையால் வரும் பவத்துன்பத்தை நீக்கி, அறிவினால் வரும் இன்பத்தில் மூழ்கும்படி செய்விக்க, ஆசிரியரை வேண்டிக் கோடலாம். (7)

அங்ஙனம் வினாவின சீடனைப் பரிசோதித்தல்.

**15. அன்னதன் சிசுவை ஐயன்**
**ஆமைமீன் பறவை போலத்**
**தன்னகங் கருதி நோக்கித்**
**தடவிச்சந் நிதியி ருத்தி**
**உன்னது பிறவி மாற்றும்**
**உபாயம்ஒன் றுண்டு சொல்வேன்**
**சொன்னது கேட்பா யாகில்**
**தொடர்பவம் தொலையும் என்றார்.**

அப்படிக் குறைகூறியிருந்த தம்முடைய சீடனைக் குருவானவர் கூர்மத்தைப் போலத் தனது உள்ளத்தில் நினைத்து, மச்சத்தைப் போலப் பூரண திருஷ்டிவைத்து, பட்சியைப்போல அஸ்தமஸ்தக சையோகஞ் செய்து எதிரில் இருக்க வைத்து, உனது பவத்துன்பத்தை நீக்கும் தந்திரம் ஒன்றிருக்கிறது உபதேசிப்பேன். போதித்த வண்ணம் கேட்டு நடப்பாயாகில் சிருஷ்டி முதல் தொடரும் சனனமானது நீங்கும் என்றருளிச் செய்தார்.

சமஸ்காரஞ் செய்த ஆசிரியர் உபதேசிப்பதற்காக அக, மமதைகள் உளவோ இலவோ என ஆராய்ந்ததாம்.

உவமைகளை நிரல்நிறையாகப் பொருள் கொள்ள வேண்டும். ஆமை தான் இட்ட முட்டைகளைப்பற்றி நினைத்தமாத்திரத்தில் குஞ்சு பொரிக்கும். மீன் அவைகளைப் பார்த்த மாத்திரத்தில் குஞ்சு பொரிக்கும், பறவை அடைகாத்துக் குஞ்சு பொரிக்கும் என்க. (8)

ஆசிரியர் வசனத்தில் அகமகிழ்ந்து அன்பு கூர்தல்

16. **தொடர்பவந் தொலையும் என்று**
**சொன்னதைக் கேட்ட நேரம்**
**தடமடு மூழ்கி னான்போல்**
**சரீரமும் குளிர்ந்துள் ஆறி**
**அடரும்அன் பொழுகு மாபோல்**
**ஆனந்த பாஷ்பம் காட்டி**
**மடன்மலர்ப் பாதம் மீண்டும்**
**வணங்கிநின்(று) ஈது சொல்வான்.**

தொன்றுதொட்டுத் தொடராநின்ற சனனமானது நீங்கும் என்று அருளியதைக் கேட்டபோதே விசாலமான தடாகத்தில் முழுகின வனைப் போலத் தேகமும் குளிர்ச்சியாய் மனமும் குளிர்ந்து நிறைந்த அன்பானது கரையழித்துச் செல்வதுபோல இரண்டு கண்களிலும் ஆனந்த பாஷ்யம் பெருக, இதழ்விரிந்த கமல மலர் போன்ற பாதங்களை மீண்டும் பணிந்து எழுந்து நின்று, இதனைச் சொல்லத் தொடங்கினான்.

ஆனந்த பாஷ்பம் – மகிழ்ச்சிக் கண்ணீர். (9)

சீடன் விண்ணப்பத்தினால் அகம் இன்றெனபதைக் குறிப்பினால் அறிதல்.

17. **சொன்னது கேட்க மாட்டாத்**
**தொண்டன்ஆ னாலும் சுவாமி**
**நின்னது கருணை யாலே**
**நீர்என்னை ஆள லாமே**
**உன்னது பிறவி மாற்றும்**
**உபாயம்ஒன் றுண்டென் றீரே**
**இன்னதென்(று) அதைநீர் காட்டி**
**ஈடேற்றல் வேண்டும் என்றான்.**

போதித்ததைக் கேட்டு நடக்கமாட்டாத அடிமையானாலும் என் தெய்வமே! தேவரீரது கிருபையினால் தேவரீர் அடியேனைத் தடுத்து

ஆளலாமே? உனது பவத்தைக் கெடுக்கும் தந்திரமொன்று இருக்கின்ற தென்று அருள் செய்தீரே, அவ் உபாயம் இத்தன்மையதென்று தேவரீர் காண்பித்து இரட்சிக்க வேண்டும் என்றான்.

சீடன் அறிவு எவ்வளவு துல்லியமானாலும் அதன் கண் உதயமான ஆனந்தத்திற்கு விளக்கமாக அதை விளக்குதல் குரு துரியமாதலால் குருவருளே விளக்க வேண்டும் என்பதாம்.

துல்லியம் – சுத்தம், சரியானது

துரியம் – தன்மயமாய் நிற்பது. (10)

அகம்பாவம் இன்றென்பதை அறிந்து அதன் சொரூபத்தை உபதேசிக்கத் தொடங்கல்

**18. அடங்கிய விருத்தி யான்என்(று)**
**அறிந்தபின் செறிந்த மண்ணின்**
**குடம்பையும் புழுமுன் ஊதும்**
**குளவியின் கொள்கை போலத்**
**தொடங்கிய குருவும் ஆன்ம**
**சொரூபமே மருவ வேண்டி**
**உடம்பினுள் சீவ னைப்பார்த்(து)**
**உபதேசம் ஓது வாரே.**

விருத்தி அடங்கினவன் என்று தெரிந்த பின்பு நெருங்கிய மண் கூட்டினுள் இருக்கின்ற கிருமியின் முன்னே சப்திக்கும் குளவியினது தன்மையைப்போல உபதேசிக்கத் தொடங்கிய ஆசாரியரும் ஆத்ம சொரூபத்தைச் சீடன் அடையும் பொருட்டுத் தேகத்துள் இருக்கும் சீவனை நோக்கி உபதேசம் செய்வார்.

சீடனது யதார்த்த சொரூபத்தைப் பார்த்து அவன் அஃதாக விளங்கும் பொருட்டு அனுக்கிரகிக்கத் தொடங்கினதாம்.

அனுக்கிரகித்தல் – அருள்செய்தல். (11)

பவத்தை நீக்கும் பொருட்டு அஃதுண்டான காரணமும் அஃது நிற்கும் கால அளவையும் கூறல்.

19. வாராய்என் மகனே தன்னை
மறந்தவன் பிறந்(து)இறந்து
தீராத சுழற்காற்(று) உற்ற
செத்தைபோல் சுற்றிச் சுற்றிப்
பேராத கால நேமிப்
பிரமையில் திரிவன் போதம்
ஆராயும் தன்னைத் தான்என்(று)
அறியும் அவ் வளவுந் தானே.

எனது புத்திரனே! கேளாய், தனது ஆத்ம சொரூபத்தை விசாரித் தறியாதவன், அறிவினால் ஆராய்ந்தறியும் ஆத்மாவைப் பிரமமென்று தெரியுமட்டும் சனித்து, மரித்து, ஓயாத சுழற்காற்றில் அகப்பட்ட சருகைப்போல அச்சனன மரணத்தில் சுழன்று, சுழன்று நீங்காத காலச்சக்கரத்தினது சுழற்சியில் சஞ்சரிப்பன்.

அறிவின்மையால் உண்டான பவம் அறிவு உதயமாய்த் தன்னைத் தானென உணருமட்டும் இருக்கும் என்பதாம்.

பவம் – பிறப்பு

கால நேமி – காலச்சக்கரம் (12)

மகாவாக்கிய உபதேசப் பிரகாரம் அறிய வேண்டிய பொருள் இதுவென அறைதல்.

20. தன்னையும் தனக்(கு) ஆ தாரத்
தலைவனை யுங்கண் டானேல்
பின்னையத் தலைவன் தானாய்ப்
பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்
உன்னைநீ அறிவாய் ஆகில்
உனக்கொரு கேடும் இல்லை

**என்னை நீ கேட்கை யாலே**
**ஈ(து)உப தேசித் தேனே.**

கூடஸ்தனையும் தனக்கு இடமான பிரமத்தையும் தரிசிப் பானாயின், பின்பு அப்பிரமமே கூடஸ்தனாய் அக் கூடஸ்தனே பிரமமாய்ச் சனன நீங்குவான், உனது அத்துவித சொரூபத்தை நீ தெரிந்து கொள்ளுவாயானால் உனக்கொரு கெடுதியும் இல்லை. என்னை நீ கேட்கின்ற படியால் எனது அனுபவமான இதைச் சொன்னேன்.

கூடஸ்தன் – உயிர். (13)

தன்னை அறியவேண்டும் என்பதைச் சர்வத்திர சாதாரணமாகக் கொள்ளும் தேகமெனக் கருதி, அஃதை அறிந்தவர்கள் சனன மரணம் நீங்காமையின் அஃதின் உண்மையை யுணர வினாதல்.

21. **என்னைத்தான் அசடன் ஆக**
**எண்ணியோ சொன்னீர் ஐயா**
**தன்னைத்தான் அறியா மாந்தர்**
**தரணியில் ஒருவர் உண்டோ**
**பின்னைத்தான் அவர்கள் எல்லாம்**
**பிறந்திறந்(து) உழலு வானேன்**
**நின்னைத்தான் நம்பி னேற்கு**
**நிண்ணயம் அருளு வீரே.**

எனது ஆசிரியரே! என்னையான் அறியாதவனாகக் கருதியா சொன்னீர்? தன்னைத் தெரியாத மனிதர் பூமியின்கண் ஒருவன் உளரோ? பின்பு அவர்கள் அனைவரும் சனன மரணத்தில் சுழலுவானேன்? தேவரீரை நம்பின அடியேனுக்கு நிச்சயத்தைச் சொல்வீர்

தான் என்பது அனுபவமாயிருக்கும் பொருட்டு அதன் இயல்பை விசாரித்ததாம்.

சனன மரணம் – பிறப்பு இறப்பு (14)

தான் என்பது இஃதெனக் கூறியும் தோன்றாததற்காக ஆசிரியர் வருத்தமுற்று இரங்குதல்.

22. **இன்னது தேகம் தேகி**
**இவனென உணர்வன் யாவன்**
**அன்னவன் தன்னைத் தானென்(று)**
**அறிந்தவன் ஆகும் என்றார்**
**சொன்னபின் தேகி யார்இத்**
**தூலம்அல் லாமல் என்றான்**
**பின்னது கேட்ட ஐயர்**
**பீடையும் நகையும் கொண்டார்.**

சரீரமானது இத்தன்மையுள்ளது. சரீரி இத்தன்மையுள்ளவன் என்று அறிகின்றவன் எவனோ அவன் கூடஸ்தனைப் பிரமமென்று தெரிந்தவன் ஆவன் என்றார். அங்ஙனம் போதித்த பின்பு இச் சரீரம் அன்றி சரீரி யார் என்று கேட்டான்; பின்பு அவன் அனுபவத்தைக் கேட்ட ஆசிரியர் துன்பமும் புன்னகையும் கொண்டனர்.

ஆசிரியர் தனது அனுபவமான சுத்த சைதன்னியத்தைத் தான் எனக் கூறச் சீடன் தனக்கு அனுபவமான தேகந்தான் அன்றித் தான் வேறுளதோ என வினாவினதாம்,

| | | | | |
|---|---|---|---|---|
| தேகம் | – சரீரம் | – உடம்பு | | |
| தேகி | – சரீரி | – உயிர். | | |
| ஐயர் | – ஆசிரியர் | | | |
| பீடை | – துன்பம் | | | (15) |

தேகம் தான் அன்று அதன்கண் உள்ள தேகியே தான் என்பது தனக்குத்தானே தோன்ற, அவத்தாத்திரயங்களை அறிகின்றவன் யார் என ஆசிரியர் வினாதல்.

23. **தேகம்அல் லாமல் வேறே**
**தேகி யார் காணேன் என்றாய்**

மோகமாம் கனவில் வந்து
முளைத்திடும் அவன்ஆர் சொல்லாய்
சோகமாம் கனவு தோன்றாச்
சுழுத்திகண்(டு) அவனார் சொல்லாய்
ஆகநீ கனவில் எண்ணும்
அறிவுதான் ஏது சொல்லாய்.

சரீரத்தையன்றி வேறாயுள்ள சரீரி யார் ? யான் கண்டிலேன் என்றாய்; மோகமாகிய சொற்பனத்தில் உதித்தவன் யாவன்? இதனை நீ சொல்; மயக்கமாகிய சொற்பனம் தோற்றாத சுழுத்தியில் சூனியமாகத் தரிசித்தவன் யார்? சொல்லாய். ஆகிய இவ் இரண்டையும் நீ சாக்கிரத்தில் நினைக்கும் அறிவு யாது? சொல்.

தேகத்தைத் தவிரத் தேகி ஒருவன் உளன் என்பது தோன்ற வினாவினதாம். அவஸ்தைகள் ஐந்து. அவை யாவன:

1. சாக்கிரம் – ஆன்மாவின் விழிப்பு நிலை (நனவு)
2. சொப்பனம் – கனா (கனவு)
3. சுழுத்தி – புலன்கள் செயலற்று நிற்கு நிலை (தூக்கம்)
4. துரியம் – தன்மயமாய் நிற்பது (மயக்க நிலை)
5. துரியாதீதம் – மரணம். (16)

தேகத்தின்கண் அவத்தைகளை அறிகின்ற தேகி ஒருவன் உளனெனத் தோன்றுகின்றது. அதனை விளக்க வேண்டுமெனல்.

24. நனவுகண் டதுநான் கண்ட
நனவுள நினைவு நீங்கிக்
கனவுகண் டதும்இ ரண்டும்
காணாத சுழுத்தி கண்டும்
தினம்அனு பவித்தல் ஒக்கும்
தெரியவும் இல்லை சற்றே
மனதினில் உதிக்கும் பின்னை
மறைக்கும(து) அருளு வீரே.

சாக்கிர அவத்தையில் பார்த்ததும், யான் பார்த்த சாக்கிரத்திலுள்ள நினைப்பு நீங்கிச் சொப்பனத்தில் பார்த்ததும், இவ் இரண்டு அவத்தைகளின் தொழிலில் இல்லாத சுழுத்தியில் சூனியத்தைப் பார்த்ததும், நாடோறும் அனுபவிப்பதனால், தேவரீர்! தேகி ஒருவன் இருக்கின்றான் என்று அருளியது ஒக்கும். அது பிரத்தியட்சமாகவும் இல்லை; சற்று மனதில் தோன்றுகின்றது. பின்பு மறைகின்றது; அதன் சொரூபத்தைக் கிருபை செய்வீர்.

கண்டது என்பது கண்டும் எனவும் மறையும் என்பது மறைக்கும் எனவும் திரிந்து நின்றன.

தான் என்பது தேகம் அன்று, தேகி என அவத்தைகளை முன்னிட்டு அறிவிக்க, ஒருவாற்றான் அறிந்த சீடன் அஃது மின்மினி போலத் தோன்றி மறைதலின், அதன் யதார்த்த சொரூபம் இஃதென விளங்க அனுக்கிரகிக்க வேண்டிக் கோடலாம். (17)

முன் தேகம் தானாயிருந்தவனைக் கிஞ்சித்து விலட்சணப் படுத்திப் பின் தடத்த இலக்கணையான் முன்பு சடமான தேக இலக்கணம் கூறி, அதை நீக்கிப் பின் சித்தே தானான தேகி இலக்கணம் கூறத் தொடங்கல்

**25. தாலத்தின் மரங்கள் காட்டித்**
**தனிப்பிறை காட்டுவார்போல்**
**ஆலத்தின் உடுக்கள் காட்டி**
**அருந்ததி காட்டுவார் போல்**
**தூலத்தை முன்பு காட்டிச்**
**சூக்கும சொரூப மான**
**மூலத்தைப் பின்பு காட்ட**
**முனிவரர் தொடங்கி னாரே.**

பூமியின்கண் உள்ள தருக்களைக் காண்பித்துத் தனியான மூன்றாம் பிறையைத் தரிசிப்பவர்போல், ஆகாயத்தின்கண் உள்ள

நட்சத்திரங்களைக் காட்டி அருந்ததியைக் காண்பிப்பவர்போல, தூலமாயுள்ள தத்துவங்களை முன்னே தரிசிப்பித்து, அணுவுக்கு அணுவான காரணத்தைப் பின் தரிசிப்பித்து ஆசிரியர் ஆரம்பித்தார். ஆலம் என்பது ஆகு பெயர்.

போதமாகும்படி போதிக்கும் மரபு கூறினதாம்.

**குறிப்பு:** நீலம் என்னும் நிறம் அதை உடைய ஆகாயத்திற்கு ஆகி வந்தது ஆகு பெயர். தருக்களைக் காண்பித்து என்பது மரக்கிளையின் அருகில் தோன்றும் மூன்றாம் பிறையைக் காட்டு வதைக் குறித்தது. (18)

தானாகிய சித்தைத் தனியே தரிசிப்பிக்கும் நிமித்தம் தன்னைச் சகசீவ பரமாகத் தோற்றுவிக்கும் ஆரோபயுத்தியையும், அத்துவித மான கூடஸ்த பிரமமாகத் தோற்றுவிக்கும் அபவாத யுத்தியையும் கூறத் தொடங்கல்.

26. **அத்தியா ரோபம் என்றும்**
**அபவாதம் என்றும் சொல்லும்.**
**உத்தியால் பந்தம் வீடென்(று)**
**உரைக்கும்வே தாந்தம் எல்லாம்**
**மித்தையாம் ஆரோ பத்தால்**
**பந்தமாம் அபவா தத்தான்**
**முத்தியாம் இவ்வி ரண்டின்**
**முந்திஆ ரோபம் கேளாய்.**

ஆத்தியாரோபம் என்று சொல்லுகின்ற உத்தியினால் பந்தம் எனவு ், அபவாதம் என்று சொல்லுகின்ற உத்தியினால் வீடு எனவும், உபநிடதம் அனைத்தும் சொல்லும்; ஆதலால் இல்லாத ஆரோபத்தால் பெத்தமாம். அபவாதத்தினால் வீடாம். இவ் இருவகையில் முன்பு ஆரோபத்தைக் கேட்பாய்.

அத்தியாரோப அபவாத இலக்கணம் கூறினதாம். பெத்தம் – பாச பந்தம். அத்தியாரோபம் – கற்பனை. (19)

அத்தியாரோப இலக்கணத்தைத் திருஷ்டாந்த ரூபமாகக் கூறுதல்.

27. ஆரோபம் அத்தி யாசம்
கற்பனை ஆவ எல்லாம்
ஓரோர்வஸ் துவினை வேறே
ஓரோர்வஸ் துவென ஓர்தல்
நாரூடு பணியாத் தோன்றல்
நரனாகத் தறியில் தோன்றல்
நீரூடு கானல் தோன்றல்
நிரந்தரம் வெளியில் தோன்றல்.

ஆரோபம் என்றும் அத்தியாசம் என்றும் கற்பனையென்றும் ஆவன அனைத்தும் ஒவ்வொரு பொருளை வேறான ஒவ்வொரு பொருளென அறிதலாம். பழுதையினிடத்துச் சர்ப்பந் தோற்றுதல், கட்டையினிடத்து மகனாகத் தோன்றுதல், கானலினிடத்துச் சலந்தோன்றுதல், ஆகாயத்தினிடத்தில் தரம் இன்மை தோற்றுதல்.

**விளக்கம்:** கயிற்றினிடத்து அரவு தோன்றுதலும், கட்டுத்தறி யினிடத்தில் கள்ளன் தோன்றுதலும், கானலிடத்து நீர் தோன்றுதலும், வெற்றிடம் ஆகாயத்தில் நீலநிறமும் கொப்பரை கவித்தாற் போன்றுள்ள இடமும் தோன்றுதலும் ஆகிய இவை ஆரோபத்திற்கு உதாரணமாம். (20)

முற்கூறிய திருஷ்டாந்தம் போலச் சுத்த சைதன்யத்தில் சகசீவபரம் தோற்றுமெனல்.

28. இப்படிப் போல நாம
ரூபங்கள் இரண்டும் இன்றி
ஒப்பமாய் இரண்டில் தோன்றா
உணர்வொளி நிறைவாய் நிற்கும்
அப்பிர மத்தில் தோன்றும்
ஐம்பூத விகாரம் எல்லாம்

செப்பிய கற்பி தத்தால்
செனித்தஎன்(று) அறிந்து கொள்ளே.

இவைபோல நாமரூபமான இரண்டு தன்மைகள் இன்றி ஒற்றுமையாயும், துவிதம் இன்றி ஏகமாயும், ஞானப்பிரகாச நிறைவாயும் இருக்கின்ற அப் பிரமத்தில் தோற்றா நின்ற பஞ்ச பூத முதலிய வேறுபாடு அனைத்தும் சொல்லா நின்ற ஆரோபத்தால் உண்டானவைகள் என்று தெரிவாய்.

உள்ளதான சத்தில் இல்லாததான சகசீவபரம் தோன்றும் முறைமை இங்ஙனமெனக் கூறினதாம்.

துவிதம் – இரண்டு; ஏகம் – ஒன்று (21)

பிரமத்தில் கற்பிதமாகச் சீவேஸ்வர சகத்து உண்டான முறையை இருவகையாகக் கூறத்தொடங்கி முன்னர் ஒருவகையைக் கூறுகின்றார்.

29. அதுதான்எப் படிஎன் றக்கால்
அநாதியாம் சீவர் எல்லாம்
பொதுவான சுழுத்தி போலப்
பொருந்தும் அவ் வியத்தந் தன்னில்
இதுகால தத்து வப்பேர்
ஈசனுள் பார்வை யாலே
முதுமூல சுபாவம் விட்டு
முக்குணம் வியத்தம் ஆமே.

அக் கற்பனா சிருஷ்டி எப்படி உண்டாயிற்று எனில், அநாதியாய் உள்ள சித்துருபமான சீவ கோடிகள் யாவும் சகலருக்கும் சாதாரண அனுபவமான சுழுத்தியைப்போல சூனியமாய் இருக்கும் மூலப் பிரகிருதியாகிய மாயையின் கண்ணே அமையும். இம் மாயையானது காலதத்துவ மென்னும் நாம முடைய ஈசுவரனுடைய திருஷ்டியினாலே முன்னிருந்த காரணத் தன்மையை ஒழித்து மூன்று குணங்களாக வெளிப்படும்.

குறிப்பு: நாம ரூபங்களாக வெளிப்படாத நிலையில் மாயை அவ்வியக்தம் என்று கூறுப்படுகின்றது.

ஈசன் சர்வப் பிரபஞ்சத்தையும் படைத்துக் காத்து அழிப்பது பற்றி அவன் காலதத்துவம் என்னும் பெயரால் கூறப்படுகின்றான்.

அனாதியாய் – உற்பத்தியின்றி.

காலதத்துவம் – ஈசுவரன். (22)

முக்குண இயல்பு கூறல்.

30. **உத்தம வெளுப்பு நீலம்**
**உபயமாம் சிவப்பும் ஆகும்**
**சுத்த சத்துவம் தமத்தோ(டு)**
**அசுத்ததத் துவப்பேர் சொல்லும்**
**சத்துவம் அழுக்கி ருட்டாச்**
**சாற்றுமுக் குணமும் மூன்றாய்**
**ஒத்துள எனினும் தம்முள்**
**ஒருகுணம் அதிக மாமே.**

முதலாவதான வெண்ணிறமும், இரண்டாவதான செம்மை நிறமும், மூன்றாவதான கருநிறமும் ஆகா நின்ற தூய்தான சத்துவகுணமும் ரசோகுணமும் தமோகுணமும் என நாமம் கூறப்பெறும். சத்துவமான சுத்தமும், அழுக்கும், இருட்டுமாகச் சொல்லப்பட்ட இம்மூன்று குணங்களும் மூன்றாகி ஒத்திருப்பவை களாயினும் அவைகளுள் இரண்டு அடங்கி ஒரு குணம் விசேடித்து நிற்கும்.

வித்தை வடிவமான சீவர்கள் பந்தப்பட்டிருக்கும் தங்கள் மறதியான அவ்வியத்தத்தில் காலதத்துவமும் முக்குணங்களும் வியத்தமாயின என்பதாம்.

குறிப்பு: அவற்றுள் சத்துவகுணம் உத்தமமும், வெண்ணிறமும், சுத்தமுமாம், இரசோகுணம் மத்திமமும், செந்நிறமும், அழுக்கு (கலக்கமு)மாம், தமோகுணம் அதமமும், கருநிறமும், இருட்டுமாம்.

இம் மூன்று குணமும் மூன்றாகத் தம்முள் ஒத்திருப்பனவாயினும் அவற்றுள் ஒரு குணம் (நெருஞ்சிமுள் போன்று) மேற்பட்டிருக்கும் போது மற்றையிரண்டும் கீழ் நோக்கியிருக்கும். (23)

மற்றொருவகைச் சிருட்டியின் மரபு கூறத் தொடங்கல்.

31. **ஒருவழி இதுவாம் மித்தை**
**ஒருவ்ழி வேறாச் சொல்வார்**
**மருவும் அவ் வியத்தந் தானே**
**மகதத்துவம் ஆகும் என்றும்**
**அருண்மக தத்து வந்தான்**
**அகங்காரம் ஆகும் என்றும்**
**கருஅகங் காரம் மூன்றாய்க்**
**காட்டிய குணமாம் என்றும்.**

ஒரு மார்க்கம் இதுவாம்; இதையே மற்றொரு மார்க்கமாகச் சொல்லுவார்கள். அஃது எங்ஙனமெனில், பொருந்திய அவ்வியத்தமே மகதத்துவமாம் எனவும், சொல்லிய மகதத்துவமே அகங்காரதத்துவமாம் எனவும், கருவாகிய அகங்காரமே மூன்றாய்த் தெரிவித்த குணங்களாம் எனவும் சொல்லப்படும்.

சுத்த சைதன்யமான தன்னை எதிரிட்டு அறிய உதயமான அறிவுக்கு முன்புண்டான மறதியே அவ்வியத்தமான பிரகிருதி எனவும்; அவ்வறிவு பகிர்முக உண்முகமான இடமே மகதத்துவம் எனவும்; அஃது தன்னிடத்து பிரதிபலனமான ஆரோபத்தை நான் என்பதே அகங்காரதத்துவம் எனவும், அதன்நிர்ச்சலனமே சத்துவம் எனவும், அதன் சலனமே ரஜசு எனவும் அதன் மக்கினமே தமம் எனவும் உண்டான உகர்பச் சிருட்டியைத் தனது அனுபவத்திற் காண்க.

இம் முக்குணங்களிலும் சுத்தமான சத்துவ குணமானது மாயையென்று கூறப்படும். (24)

மேற்கூறிய குணங்களில் சகசீவபர உற்பத்தியைக் கூறுவான் தொடங்கி முன்னர் பரன் உற்பத்தியைக் கூறுகின்றார்.

32. இக்குணங் களிலே விண்போன்(று)
இருக்குஞ்சிற் சாயை தோன்றும்
முக்குணங் களினும் தூய்தாம்
முதற்குணம் மாயை யாகும்
அக்குணம் பிரமச் சாயை
அந்தரி யாமி மாயை
எக்குணங் களும்பற் றாதோன்
நிமித்தகா ரணமாம் ஈசன்.

இம்மூன்று குணங்களில் ஆகாயம் போல நிரவயமாய் இருக்கின்ற சிற்சாயை பிரதிபலிக்கும்; மூன்று குணங்களிலும் சுத்தமாகிய சத்துவ குணம் மாயையாம், அந்தச் சத்துவத்தில் பிரதிபலித்த பிரமப் பிரதி பலனமே அந்தரியாமியாம். மாயா சம்பந்தமான எந்தக்குணங்களும் பற்றாதவனே பஞ்சபூத பவுதிக முதலிய சிருட்டிக்கு நிமித்த காரணமாகிய ஈசனாம்.

| | | |
|---|---|---|
| அந்தர்யாமி | – | உள்ளீடாய் நிறைந்திருப்பவன் |
| குடத்திற்கு:மண் | – | முதற் காரணம் |
| தண்டு சக்கரங்கள் | – | துணைக்காரணம் |
| குயவன் | – | நிமித்த காரணம் (25) |

ஈசனது காரண சரீர உற்பத்தியையும் கூறல்.

33. ஈசனுக்(கு) இதுசு ழூத்தி
இதுவேகா ரணச ரீரம்
கோசமா னந்த மாகும்
குணம் இரா சதம்அ வித்தைத்
தேசறும் அவித்தை தோறும்
சிற்சாயை சீவ கோடி
நாசமாம் உயிர்க்(கு)அப் போது
நாமமும் பிராஞ்ஞ னாமே

இவ் ஈஸ்வரனுக்கு இம் மாயையே சுழுத்தி அவத்தையாம் இஃதே காரண சரீரமாம்; இதுவே ஆனந்த மயகோசமாம். ரசோ குணம் அவித்தையாம்; விளக்கமில்லாத அவித்தைகள் தோறும் பிரதிபலித்த ஞானப் பிரதி பலனமே சீவராசிகளாம். யாவையும் இறந்த சுழுத்தியை அபிமானிக்கும் சீவர்களுக்கு அவ் அவசரத்தில் பெயர் பிராஞ்ஞனாம்.

பிராஞ்ஞன் – நன்றாய் அறிபவன். (26)

சீவனது காரண சரீர உற்பத்தியைக் கூறுகின்றார்.

**34. அழுக்கொடு பற்றும் சீவர்க்கு**
**அதுவேஆ னந்த கோசம்**
**சுழுத்திகா ரணச ரீரம்**
**சொன்னஇம் மட்டும் மோகம்**
**முழுக்குணத்(து) இரண்டால் வந்த**
**மூலஆ ரோபம் சொன்னோம்**
**வழுத்துசூக் குமஆ ரோப**
**வழியும் நீ மொழியக் கேளாய்.**

அவித்தையைச் சேர்ந்திருக்கின்ற சீவர்களுக்கு அவ் அவித்தையே ஆனந்த மயகோசமாம்; அஃதே சுழுத்தி அவத்தையாம். அஃதே காரண சரீரமாம். சொல்லிய இது பரியந்தம் மயக்கமாகத் தோற்றிய பிரகிருதியின் முழுதுமான சத்துவ ரசோகுணத்தில் உண்டான காரண சரீர அத்தியாசத்தை உரைத்தோம்; சொல்லப்பட்ட சூக்கும சரீர அத்தியாசமுண்டான மார்க்கத்தையும் யாம் சொல்ல நீ கேட்பாய்.

சீவ ஈஸ்வர உற்பத்தியும் அவர்களுக்கு உண்டான காரண சரீர அத்தியாசமும் கூறினதாம். (27)

சீவ ஈஸ்வரர்களுக்குச் சூட்சும சரீரம் உண்டான முறையைக் கூறுவான் தொடங்கி முன்பு சத்திகளின் தோற்றம் உரைத்தல்.

35. ஏமமா யாவி நோத
ஈசனார் அருளி னாலே
பூமலி உயிர்கட்(கு) எல்லாம்
போகசா தனம் உண் டாகத்
தாமத குணம் இரண்டு
சத்தியாய்ப் பிரிந்து தோன்றும்
வீமமா மூடல் என்றும்
விவிதமாம் தோற்றம் என்றும்.

மோகமாகிய மாயையை விளையாட்டாகவுடைய ஈசுவரனுடைய கிருபையினால் பொலிவு மிகுந்த சீவர்கள் அனைவர்க்கும் அனுபோக சாதனம் உண்டாகும் பொருட்டுத் தமோ குணமானது பயங்கரமான ஆவரணமெனவும், நாநாவிதமாகும், விட்சேபம் எனவும், இரண்டு சத்திகளாய்ப் பிரிந்து தோன்றும்.

உயிர்கட்கெல்லாம் போக சாதனம் உண்டாக என்பதனால் சீவர்கள் சமஷ்டியே ஈசுவரன் ஆதலின், அவ் ஈசுவரனுக்கும் கொள்க.

தமோகுணம் பிரதிபலமான சிற்சாயையின் அறிவின்மை ஆவரணமும். அறிவு விட்சேபமும் என இரண்டு சத்திகளாயின.

ஆவரணம் – மறைப்பு; விட்சேபம் – தோற்றம். (28)

விட்சேபத்தியில் தன் மாத்திரையான சூட்சும பூத உற்பத்தி கூறல்.

36. தோற்றமாம் சத்தி தன்னில்
சொல்லிய விண்ணாம் விண்ணில்
காற்றதாம் காற்றில் தீயாம்
கனலிநீர் நீரின் மண்ணாம்
போற்றுஇவ் ஐந்தும் நொய்ய
பூதங்கள் என்றும் பேராம்
சாற்றுமற்(று) இவற்றில் போக
சாதன தனுவுண் டாகும்.

விட்சேப சத்தியில் சொல்லப்படும் சத்த மாத்திரையான ஆகாயம் உண்டாகும். அவ் ஆகாயத்தில் ஸ்பரிச தன்மாத்திரையான வாயு உண்டாகும். அவ் வாயுவில் ரூப தன்மாத்திரையான அக்கினியுண்டாகும். அவ் அக்னியில் ரச தன்மாத்திரையான அப்பு உண்டாகும். அவ் அப்புவில் கந்த தன்மாத்திரையான பிருதிவி உண்டாகும். போற்றப்பட்ட இத் தன்மாத்திரைகள் ஐந்தும் சூக்கும பூதங்கள் என்று பெயர் பெறும். சொல்லப்பட்ட இத் தன்மாத்திரைகளில் அனுபோகத்துக்குச் சாதனமான சூக்கும சரீரம் தோன்றும்.

ஞானேந்திரியங்கள்

| எண் | பூதங்கள் | ஞான இந்திரியங்கள் | ஞானசக்தி | அதிதேவதை |
|---|---|---|---|---|
| 1. | ஆகாயம் | செவி | சப்தம் | சதாசிவன் |
| 2. | காற்று | மெய் | ஸ்பரிசம் | மகேசன் |
| 3. | தீ | கண் | ரூபம் | உருத்திரன் |
| 4. | நீர் | வாய் | ரசம் | விஷ்ணு |
| 5. | மண் | மூக்கு | கந்தம் | பிரமன் (29) |

தன் மாத்திரை சத்துவகுணத்தில் அந்தக்கரண ஞானேந்திரிய உற்பத்தி கூறல்.

37. ஆதிமுக் குணம்இப் பூதம்
அடங்கலும் தொடர்ந்து நிற்கும்
கோதில்வெண் குணத்தில் ஐந்து
கூறுணர் கருவி யாகும்
ஓதிய பின்னை ஐந்தும்
உளம்புந்தி இரண்டாம் ஞான
சாதன மாம்இவ் ஏழும்
சற்குணப் பிரிவி னாலே.

முன் உண்டான மூன்று குணங்களும் இத் தன் மாத்திரைகள் ஐந்திலும் கூடியிருக்கும் குற்றமற்ற சத்துவ குணத்தில் வியஷ்டியான ஐந்து பங்கும் ஞானேந்திரியங்களாம். சொல்லப்பட்ட சமஷ்டியான ஐந்து பங்கும் மனம் புத்தி என இரண்டாகும் சத்துவகுண அம்சம் ஆதலால் இந்த ஏழும் அறிகருவிகளாம்.

குறிப்பு: வெண்குணம் – சத்துவம்; ஞானசாதனம் – அறிகருவி.

**அந்தக் கரண சதுட்டயம்**

| எண் | அந்தக் கரணம் | வியாபாரம் | அதிதேவதை | ஸ்தானம் |
|---|---|---|---|---|
| 1. | மனம் | சங்கற்ப விகற்பம் | சந்திரன் | கண்டம் |
| 2. | புத்தி | பதார்த்த நிச்சயம் | பிரமன் | முகம் |
| 3. | சித்தம் | பதார்த்த சிந்தனை | விஷ்ணு | நாபி |
| 4. | அகங்காரம் | உடம்பினை யான் என அபிமானித்தல் | உருத்திரன் | சர்வாங்கம் |

(30)

தன் மாத்திரையின் ரசோ குணத்தில் வாயு, கன்மேந்திரியங்களின் உற்பத்தி கூறல்.

**38. இராசத குணத்தில் வேறிட்(டு)**
**எடுத்தகூ(று) ஐந்தும் ஐந்தும்**
**பிராணவா யுக்கள் என்றும்**
**பெருந்தொழிற் கன்மம் என்றும்**
**பராவிய பெயராம் இந்தப்**
**பதினேழும் இலிங்க தேகம்**
**சுராசுரர் நரர்வி லங்காய்த்**
**தோன்றிய உயிர்கட்(கு) எல்லாம்.**

ரசோ குணத்தில் எடுத்து ஒன்றாக வைத்த பங்கு ஐந்தும் பிராணாதி பஞ்சவாயுக்கள் எனவும், தனித் தனியே எடுத்த பங்கு ஐந்தும் பெரிய கிரியையைச் செய்யும் கன்மேந்திரியங்கள் எனவும் பரவிய

நாமங்களாம். இப்பதினேழு தத்துவங்களும் தேவர்களும் அவுணர்களும் மனிதர்களும் மிருகங்களுமாகி உண்டான சீவர்கள் அனைவர்க்கும் சூக்கும சரீரங்களாம்.

சில நூலாசிரியர் சூக்கும தேகம் இருபத்து நான்கு தத்துவம் என்றதை இந்நூலாசிரியர் விடயம் ஐந்தையும் ஞானேந்திரியத்தில் அடக்கியும், அகங்காரத்தையும் சித்தத்தையும் மனம் புத்தியில் அடக்கியும் பதினேழாகக் கூறினார் எனக் கொள்க.

சீவேஸ்வரருக்கு உண்டான சூக்கும சரீர அத்தியாயம் கூறினதாம்.

கன்மேந்திரியங்கள்

| எண் | கர்ம இந்திரியங்கள் | கிரியா சக்தி | அதிதேவதை |
|---|---|---|---|
| 1. | வாக்கு | வசனம் | அக்கினி |
| 2. | பாதம் | கமனம் | வாமனன்(விஷ்ணு) |
| 3. | பாணி | தானம் | இந்திரன் |
| 4. | பாயுரு | விசர்க்கம் | மிருத்யு(யமன்) |
| 5. | உபஸ்தம் | ஆனந்தம் | பிரஜாபதி(பிரமன்) (31) |

சூக்கும தேகத்தினால் வரும் கற்பனா நாமங்களைக் கூறல்.

**39. இவ்வுடல் மருவும் சீவர்க்(கு)**
**இலங்குசை தனன்என் றாகும்**
**இவ்வுடல் மருவும் ஈசர்க்(கு)**
**இரணிய கருப்பன் ஆகும்**
**இவ்வுடல் இரண்டு பேர்க்கும்**
**இலிங்கசூக் குமச ரீரம்**
**இவ்வுடல் கோசம் மூன்றாம்**
**இதுகனா அவத்தை யாமே.**

இவ்வியஷ்டி சூக்கும தேகத்தைச் சேர்ந்து அபிமானிக்கும் சீவர்களுக்கு விளங்காநின்ற அபிமானி நாமம் தைசதன் என்பதாம்.

இச் சமஷ்டி சூக்கும தேகத்தைச் சேர்ந்து அபிமானிக்கின்ற ஈஸ்வரனுக்கு அபிமானி நாமம் இரணிய கருப்பன் என்பதாம். இச் சரீரம் சீவேஸ்வரர் இருவருக்கும் சூக்கும சரீரமாம். இச் சரீரத்துக்குப் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் எனக் கோசங்கள் மூன்றாகும். இது சொப்பனாவஸ்தையாம்.

தன்மாத்திரைகள் சூக்குமம் ஆதலின் அவற்றைக் சூக்கும பூதமெனவும், அவற்றின் தடிப்பைச் சூக்கும தேகமெனவும், அதை அபிமானிப்பவர்களை இரணிய கருப்பன் சைதனன் எனவும் அது மனோராச்சியம் செய்தலைச் சொப்பனாவஸ்தையெனவும், அஃது பிராண மனோ புத்திகளாகத் தன்னை மறைத்தலைக் கோசங்கள் எனவும் கொள்க.

தன்மாத்திரை – சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் மூலப்பொருள்கள்.

**விளக்கம்:** இச் சூட்சும சரீரத்தில் பொருந்திய ஜீவனும் ஈசனும் முறையே தைஜசன் என்றும் இரணிய கருப்பன் என்றும் சொல்லப் படுவர். பதினேழு தத்துவ வடிவமான இச் சரீரம் ஜீவேஸ்வரர் இருவர்க்கும் இலிங்கதேகம் என்னும் பெயரையுடைய சூட்சும சரீரமாம். இது (பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞான மயகோசம் என) மூன்று கோசமாம், சொப்பனாவஸ்தையாம்.

**குறிப்பு:** செய்யுளின் முதலடியில் வரும் சைதனன் என்பது வேறு சில பதிப்புகளில் தைசதன் என்று உள்ளது. தைஜசன் என்பது வடசொல். (32)

பஞ்ச பூத பௌதிகமான சகத்து உற்பத்தியைக் கூறுவான் தொடங்கி, அஃது உண்டாகுதற்கு ஏது கூறுகின்றார்.

**40. சூக்கும சகம்இம் மட்டும்**
**சொல்லினோம் இப்பால் தூலம்**

ஆக்கும்ஆ ரோபந் தானும்
அடைவினில் மொழியக் கோளாம்
தாக்கும்இவ் உயிர்க்குத் தூல
தனுவும்போ கமும்உன் டாகச்
காக்கும்இவ் ஈசன் பஞ்சீ
கரணங்கள் செய்தான் தானே.

சூக்கும சரீரப் பிரபஞ்சத்தை இது பரியந்தம் சொன்னோம். மேல் தூலபூதமும் தூலதேகமும் உண்டாக்கும் அத்தியாசத்தையும் கிரமமாகச் சொல்லக் கேட்பாய்; சூக்கும சரீரத்தில் சேர்ந்திருக்கின்ற இச் சீவர்களுக்குத் தூலதேகமும் அனுபோகமும் உண்டாகும்படி சீவர்களைப் பாதுகாக்கும் இவ் ஈஸ்வரன் பஞ்சீகரித்தலைச் செய்தனன்.

தனுவும் போகமும் என்ற உம்மையால் அண்டமும் புவனமும் கொள்க. தனு – உடல் சூட்சும பஞ்ச பூதங்கட்கு ஒன்றற்கொன்று உண்டாகும் கலப்புப் பஞ்சீகரணம் எனப்படும். (33)

பஞ்சீகரணமும் அவற்றினாலாய காரியமும் கூறல்.

41. ஐந்துபூ தமும்பத் தாக்கி
அவைபாதி நந்நான் காக்கி
நந்துதன் பாதி விட்டு
நாலொடு நாலுங் கூட்ட
வந்தன தூல பூதம்
மகாபூதம் அவற்றி னின்றும்
தந்தன நான்காம் தூல
தனுஅண்ட புவன போகம்.

தமோகுணப் பங்காகிய சூக்கும பஞ்ச பூதங்களைப் பத்துப்பங்கு செய்து, அவற்றில் பகுத்த பாதியை ஒவ்வொன்றையும் நான்கு நான்கு செய்து, கேடில்லாத தன் அம்சமான பாதியை நீக்கி, மற்ற நான்கோடு நான்கையும் சேர்க்கத் தூலபூதம் உண்டாயின. தூலபூதமாகி

அவைகளினின்று உண்டாக்கப்பட்டன தூலசரீரமும், அண்டமும் புவனமும் போகங்களும் ஆகிய நான்குமாம்.

அண்டம் என்பது பஞ்சபூத சமஷ்டி எனவும், புவனம் என்பது அவைகளிலுள்ள பதப் பிராப்தி ஸ்தானங்கள் எனவும் கொள்க.

சூட்சும பூதம் பஞ்சீகரிக்கத் தூலபூதமும் அவற்றில் தூல சரீர முதலிய நான்கும் தோற்றின என்பதாம்

உயிர்த் தோற்றம் (4) கருப்பை; முட்டை; நிலம்; வியர்வை.(34)

தூல தேகத்தினால் வரும் கற்பனா நாமங்கள் கூறல்;

**42. தூலமே மருவும் சீவன்**
**சொல்லிய விசுவ னாகும்**
**தூலமே மருவும் ஈசன்**
**சூழ்விராட் புருட னாகும்**
**தூலஞ்சாக் கிரஅ வத்தை**
**சொன்னதோர் அன்ன கோசம்**
**தூலகற் பனைஈ தென்று**
**தொகுத்தது மனத்திற் கொள்வாய்.**

வியஷ்டி தூலதேகத்தைச் சேர்ந்து அபிமானிக்கின்ற சீவனுக்கு அபிமானி நாமம் சொல்லப்பட்ட விசுவன் என்பதாம்; சமஷ்டி தூலதேகத்தைச் சேர்ந்து அபிமானிக்கிற ஈசுவரனுக்கு அபிமானி நாமம் கருதாநின்ற விராட் புருடன் என்பதாம், இவை இருவர்க்கும் தூலதேகமாம். இவை இவ் இருவர்க்கும் சாக்கிர அவத்தையாம்; சொல்லிய இது இவ் இருவர்க்கும் அன்னமய கோசமாம்; தூல சரீர அத்தியாசம் இதுவென்று தொகுத்துச் சொன்னதை மனதில் உணர்வாய்.

தன் மாத்திரை மிசிரமானதை தூலபூதம் எனவும், அஃதோர் உருவமானதை தூல சரீரம் எனவும், அஃதை அபிமானிப்பவர்களை விசுவன் விராட்டு எனவும், அதனின்று எதிரிட்டு அறிதலை சாக்கிரா அவத்தை எனவும், அஃது அன்ன மயமாதலின், அதனை அன்ன மயகோசம் எனவும் கொள்க.

அபிமான நாம முதலியவைகள் உண்டான அத்தியாசம் கூறினதாம். (35)

சீவ ஈசுவரர்களுக்கு உபாதி ஒன்றாயின் அவர்கள் பேதம் அறிவது எங்ஙனம்? என்ற வினாவுக்கு உத்தரம்.

43. **சீரிய ஈச னார்க்கும்**
**சீவர்க்கும் உபாதி ஒன்றேல்**
**ஆரிய குருவே பேதம்**
**அறிவதெப் படியென் றக்கால்**
**காரிய உபாதி சீவன்**
**காரண உபாதி ஈசன்**
**வீரிய மிகுச மட்டி**
**வியட்டியால் பேத மாமே.**

சிறப்பையுடைய ஈசுவரனுக்கும் சீவனுக்கும் உபாதி ஒன்றானால், அறிவுருவான ஆசிரியரே! சீவேசுவரர் என்கின்ற வேற்றுமை அறிவது எவ்வாறு என்பாயாகில், காரிய உபாதியுள்ள சீவர்கள் வியஷ்டி யினாலும், காரண உபாதியுள்ள ஈசுவரன் வீர மிகுந்த சமஷ்டியினாலும் பேதமாகும்.

சமஷ்டி – சேர்ந்திருப்பது; வியஷ்டி – தனிப்பட்டது. ஒரு வஸ்துவைப் பல வஸ்துபோலக் காட்டற்கு ஏதுவாயிருப்பது உபாதி எனப்படும் – உதாரணம் ஆகாயம்.

மாயை சமட்டி வடிவம்; அவித்தை வியட்டி வடிவம். (36)

இதுவுமது.

44. **மரங்கள்போல் வியட்டி பேதம்**
**வனம் எனல் சமட்டி பேதம்**
**சரங்கள்தா வரங்கள் பேதம்**
**தனியுடல் வியட்டி என்பார்**
**பரம்பிய எல்லாம் கூட்டிப்**
**பார்ப்பது சமட்டி யென்பார்**

**இரங்கிய பலசீ வர்க்கும்**
**ஈசர்க்கும் பேதம் ஈதே.**

தருக்களைப்போல வியஷ்டியின் பேதமாம்; வனம் என்பது சமஷ்டியின் பேதமாம்; சராசர உயிர்களின் பேதமான தனிமையான தேகத்தை வியஷ்டி என்று சொல்லுவார்கள்; விரிந்த தூல தேக முதலிய அனைத்தையும் சேர்த்துக் காண்பது சமட்டி என்று சொல்லுவார்கள். இரங்கா நின்ற அந்த சீவர்களுக்கும் ஈசுவரனுக்கும் பேதம் இதுவாம்.

சமட்டியினால் ஈசுவரனுக்குக் காரண உபாதியும் வியட்டியினால் சீவருக்குக் காரிய உபாதியும் ஆம்.

| | | |
|---|---|---|
| வியஷ்டி | – | தனிமை, ஒருமை (தனிமரம் போன்றது) |
| சமஷ்டி | – | பொதுமை, பன்மை (தோப்புபோன்றது) |
| சர, அசரம் | – | இயங்குதிணை; நிலைத்திணை. |

ஈசனுக்கு உபாதி மாயை; ஜீவனுக்கு உபாதி அவித்தை. (37)

அத்தியாரோப உத்தியினால் தன்னிடத்தில் ஆரோபமாகத் தோற்றின சகசீவ பரங்களைக் கூறி, அவைகள் உண்டான கிரமப்படி லயிப்பிக்கும் அபவாத உத்தியைக் கூறத் தொடங்கல்.

45. **கற்பனை வந்த வாறு**
**காட்டினோம் காண்ப எல்லாம்**
**சொற்பனம் போல எண்ணித்**
**துணிந்தவன் ஞானி யாவன்**
**செற்புதை மழைக்கா லம்போய்த்**
**தெளிந்தஆ காயம் போல**
**அற்புத முத்தி சேரும்**
**அபவாத வழியும் கேளாய்.**

ஆரோபமான சிருட்டியுண்டான முறையை அறிவித்தோம். திரிசியம் அனைத்தையும் கனவைப்போலக் கருதித் தெளிந்தவன் ஞானியாவான். மேகம் நிறைந்திருக்கின்ற வருஷ ருது நீங்கிச்

சரற்காலத்தில் தெளிந்த ஆகாயம் போல அற்புதமான மோட்சம் அடையும் அபவாத மார்க்கத்தையும் கேட்பாய்.

சரற்காலம் – கார்காலம் – ஆவணி புரட்டாசி மாதங்கள். (38)

அபவாத இலக்கணம்.

**46. அரவன்று கயிறுஎன் றாற்போல்**
**ஆளன்று தறியென் றாற்போல்**
**குரவன்தன் உபதே சத்தால்**
**கூறுநூல் வெளிச்சங் கொண்டு**
**புரமன்று புவனம் அன்று**
**பூதங்கள் அன்று ஞானத்**
**திரமென்றும் பிரமம் என்றும்**
**தெளிவதே அபவா தம்காண்.**

சர்ப்பமன்று பழுதையென்றது போலவும் மகன் அன்று குற்றி என்பது போலவும் ஆசிரியர் உபதேசம் என்னும் ஞானக் கண்ணினால் தத்துவத்தைச் சொல்லும் ஞான சாஸ்திரங்களாகிய பிரகாசத்தைக் கொண்டு தேக முதலிய தத்துவங்களற்று, அவைகட்கு அதிட்டான கூடஸ்த சைதன்னியம் என்னும் புவனங்களுமன்று, பஞ்ச பூதங்களும் அன்று; அவைகட்கு அதிட்டானமான ஸ்திர ஞானம் எனவும் பிரமம் எனவும் அனுபவமாய்த் தெளிவதே அபவாதமாம்.

புவனம் என்பது சகளீகரித்திருக்கும் கயிலாச முதலிய ஸ்தானமும் பூதங்கள் என்பது விராட்டுருவமும் எனக் கொள்க.

ஆரோபத்தை நீக்கி அதிஷ்டானத்தைத் தரிசிப்பித்ததாம்.

குற்றி – மரக்கட்டை; சிறுதூண்
அதிட்டானம் – நிலைக்களம்
சைதனியம் – தத்துவ ஞானம்; ஆன்மா. (39)

அதிஷ்டானத்தைத் தவிர ஆரோபம் இன்றெனல்.

47. படமும்நூ லும்போல் செய்த
பணியும்பொன் னும்போல் பார்க்கில்
கடமும்மண் ணும்போல் ஒன்றாம்
காரிய கார ணங்கள்
உடன்முதற் சுபாவம் ஈறாய்
ஒன்றில்ஒன் றுதித்த வாறே
அடைவினில் ஒடுக்கிக் காண்ப(து)
அபவாத உபாயம் ஆமே.

வஸ்திரமும் நூலும் போலவும், செய்த ஆபரணமும் பொன்னும் போலவும், கலசமும் மண்ணும் போலவும், பார்க்கும் இடத்தில் காரிய காரணங்கள் இரண்டும் ஒன்றேயாம். தூலதேகம் முதல் பிரகிருதி பரியந்தம் ஒன்றில் ஒன்று உண்டான பிரகாரம் முறையாக அடக்கிச் சுத்தப் பிரமத்தைத் தரிசிப்பது அபவாத உத்தியாம்.

தன்னிடத்தில் கற்பிதமான சுகஜீவ பரங்களைத் தனது உருவமாக ஒடுக்கிக் காண்பதே உத்தி என்பதாம். (40)

முற்கூறிய ஆவரண சத்தியின் இலக்கணம் யாதென வினாதல்.

48. தூடண தமத்தில் வந்த
தோற்றமாம் சத்தி செய்யும்
ஈடணை விகாரம் சொன்னீர்
இரண்டுசத் திகள்என் றீரே
மூடலாம் சத்தி செய்யும்
மோகமும் சொல்லும் ஐயா
கேடறும் குருவே என்னக்
கிருபையோ(டு) அருள்செய் வாரே.

நித்தியமாகிய குருசுவாமியே! தூஷிக்கத் தக்க தமோ குணத்தில் உண்டான விட்சேபசத்தி செய்யா நின்ற இச்சாரூபப் பிரபஞ்சம் உண்டான வேறுபாடுகளைச் சொன்னீர்; இரண்டு சத்திகள் என்று சொன்னீரே, ஆவரணசத்தி செய்கின்ற மயக்கத்தையும் அருள

வேண்டுமென்று கேட்க, கருணையோடும் ஆசிரியர் அனுக்கிரகிப்பார்.

ஆவரணம் – மறைப்பு; விட்சேபம் – கலக்கம். (41)

ஆவரண சத்தியின் தன்மை கூறல்.

**49. தானிகர் தனக்காம் ஈசன்**
**தனையும்தங் களைத்தான் கண்ட**
**ஞானிகள் தமையும் அன்றி**
**நாஸ்தின பாதி யென்னும்**
**ஊனிறை உயிர்கள் உன்னின்**
**உணர்விழிக் குருடாம் வண்ணம்**
**வானிலம் திசைகண் மூடு**
**மழைநிசி யிருள்போல் மூடும்.**

தனக்குத் தானே சமானமாகிய பிரமமயமான ஈசனையும், தாமாகிய கூடஸ்தரைத் தரிசித்த ஞானவான்களையும் அல்லாமல் பிரமமென்பது வேறு இல்லை; இருக்கிற் காணானோ என்கின்ற இரு முகத்தினால் தேகத்தில் வசிக்கும் சீவர்களின் அகத்தின் விளங்கிய ஞான திருட்டியானது தெரியாதபடி விண் மண் திக்குகளை மூடுகின்ற கார்காலத்து இரவின் இருளைப் போல, ஆவரண சத்தியானது மறைக்கும்.

கூடஸ்த பிரமங்களை மறையாமல் அவைகளின் ஆரோபமான சீவேசுவரர்களை மறைக்கும் என்பதாம். (42)

இதுவுமது

**50. பூன்றமாம் பிரமத் துக்கும்**
**புறத்துள விகாரங் கட்கும்**
**ஆன்றகூ டத்த னுக்கும்**
**அகத்துள விகாரங் கட்கும்**
**தோன்றிய பேதம் சற்றும்**
**தோன்றாமல் மறைத்து மூடும்**

ஊன்றிய பவவி யாதி
உண்டாக்கும் உபாதி ஈதே.

பூரணமான பிரம சொரூபத்துக்கும், புறம்பிலுள்ள ஈசன் முதலிய வேறுபாடுகளுக்கும், மாட்சியையுள்ள அறிவுருவான கூடஸ் தனுக்கும், அகத்திலுள்ள சீவன் முதலிய வேறுபாடுகளுக்கும் உண்டான சித்சடபேதங்களை எவ்வளவு தோற்றாமல் மறைக்கும் ஸ்திரமான பவப்பிணியை விளைவிக்கும் உபாதியானது இவ் ஆவரண சத்தியேயாம்.

அதிஷ்டான ஆரோபங்களின் பேதம் தெரியவொட்டாமல் நாஸ்தி நபாதி என்னும் இருமுகத்தால் ஞான திருஷ்டியை மறைத்தல் ஆவரண சத்தியின் தன்மை என்பதாம்.

நாஸ்தி – இன்மை; நாசம். (43)

அதிஷ்டான திருஷ்டி சாமானியமாகத் தோற்றிய பின்னர், அஃது மறைபடும் போதும் மறைபடாதபோதும் ஆரோபந் தோன்றக் கணக்கில்லையே என்ற சீடனை நோக்கி, அவ் அதிஷ்டான இலக்கணத்தை இரண்டு விதமாகக் கூறுகிறார்.

51. ஆதாரம் மறைந்து போனால்
ஆரோபம் எங்கே தோன்றும்?
ஆதாரம் மறையா தாயின்
ஆரோபம் இலையே என்றால்
ஆதாரம் சமம்வி சேடம்
ஆமென இரண்டு கூறாம்
ஆதாரம் சமமாம் எங்கும்
ஆரோபம் விசேடம் ஆமே.

பிம்பம் மறையுமானால் பிரதி பிம்பம் எங்ஙனம் தோன்றும்? பிம்பம் மறையவில்லையெனில் பிரதிபிம்பம் இல்லையேயெனின், ஆதாரமானது சமமாம் எனவும், விசேடமாம் எனவும் இரண்டு

வகையாம்; சமமானது எவ்விடத்தும் உள்ள ஆதாரமாகும்; விசேடமானது கற்பிதமாம்.

ஆதாரமான சுத்த சைதன்னியம் பூரணமான கூடஸ்த பிரமமாக விளங்குமிடத்தில் சமம் எனவும், அதனில் உதயமான அறிவு சீவேசுவர சகத்தாக விரிந்து ஒடுங்குமிடத்து விசேடம் எனவும், இங்ஙனம் உதித்து ஒடுங்கும் அறிவுண்மையாயினும் அக் கிரியைகள் மித்தையாதலின் அவ்விசேடத்தை ஆரோபம் எனவும் கொள்க. (44)

இதுவுமது.

52. **சகமதில் இதுஎன் சுட்டாச்**
**சமானக்கண் மறைந்தி டாது**
**மிகவுரை கயிறும் பாம்பும்**
**விசேடங்கள் மறைந்து போகும்**
**அகமெனும் சமானம் தன்னை**
**அஞ்ஞானம் மறைத்தி டாது**
**பகர்வதோர் விசேடம் சீவன்**
**பரனெனும் அவரை மூடும்.**

உலகத்தின்கண் இதுவென்று சுட்டப் படாத சமமாகிய கண்கள் ஒன்று மறைக்க அதனால் மறைபடாது, மிகவும் சொல்லா நின்ற பழுதையும் சர்ப்பமுமாகிய விசேடமாகத் தோன்றினவை ஒன்று மறைக்க மறைபடும்; அதனைப் போலத் தான் என்னும் கூடஸ்த பிரமத்தை அறியாமையான ஆவரணம் மறைக்கப்படாது; சொல்லப்பட்ட ஓர் விசேடமாகிய சீவேசுவரர் என்கிற அவர்களை மறைக்கும்.

ஆரோபமான சீவேசுவரரைத் தமக்கு ஆதாரமான கூடஸ்த பிரமத்தைப் பார்க்கவொட்டாமல் அவரது உணர்வை இவ் ஆவரணம் மறைக்குமேயன்றி ஆதாரத்தை மறைக்க மாட்டாது என்பதாம். (45)

அவ்வுணர்வை மனமுதலாகத் தோன்றின விட்சேப காரியம் மறைந்ததேயன்றி ஆவரணம் எங்கே மறைந்தது எனல்.

53. **கேவல நிலைதோன் றாமல்**
**கெடுத்தது பஞ்ச கோசம்**
**சீவனும் சகத்து மாகிச்**
**செனித்தவிட் சேபம் அன்றோ**
**ஆவர ணந்தா னேபாழ்**
**அனர்த்தமென் றுரைத்த தேதோ**
**மேவரும் குருவே யென்று**
**வினாவின மகனே கேளாய்.**

முத்தி நிச்சயம் தோன்றாமல் அழித்தது பஞ்ச கோசமும் சிதாபாசனும் உலகமுமாய் உண்டான விட்சேபம் அன்றோ? அங்ஙனம் இருக்க ஆவரணமே பாழ் எனவும் அநர்த்தம் எனவும் சொல்லியதென்னை? அடைதற்கரிய ஆசாரியரே என்று கேட்ட மாணாக்கனே! நீ கேட்பாய்.

ஆநந்த மயகோசமும் சீவனும் விட்சேப காரியங்கள் அல்லாதனவாயிருக்க அங்ஙனம் கூறியது என்னையெனின், அந்தக் கரணப் பிரதிபலன் சீவனும், அவன் அறியாமை ஆனந்தமய கோசமும் ஆதலால் இங்ஙனம் கூறியதெனக் கொள்க.

வெளிப்படை.

விட்சேபம் – கலக்கம்
ஆவரணம் – மறைப்பு
அநர்த்தம் – பயனிலாச் சொல்; பொருளற்றது; கலகம்.
அந்தக் கரணம் – உட்கருவி; மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.
(46)

விட்சேப சத்தியினால் உண்டாகும் நன்மையையும் ஆவரண சத்தியினால் உண்டாகும் தீமையையும் கூறுகின்றார்.

54. **தோற்றமாம் சத்தி தானே**
**துன்பமாம் பவமா னாலும்**
**ஆற்றலான் முத்தி சேர்வார்க்(கு)**
**அனுகூல சகாய மாகும்**

**ஊற்றமாம் பகற்கா லம்போல்**
**உபகாரம் நிசியில் உண்டோ**
**மாற்றமென் னுரைப்பேன் மைந்தா**
**மறைப்பது மிகப்பொல் லாதே.**

விட்சேப சத்தியே துன்ப மயமான ஜனனத்துக்குக் காரண மானாலும் சிரவணாதி முயற்சியினால் வீடு அடைபவர்களுக்கு அது மிகவும் சகாயமாம்; அறிதற்கு உதவியாகும்; பகற்காலம் போலச் சகாயமானது இரவில் உளதோ? என்ன சொல்வேன் மகனே! மூடுகின்ற ஆவரணம் மிகவும் பொல்லாததாம்.

இராக்காலம் யாவர்க்கும் நித்திரைக்கு ஏதுவாயிருந்து மிக்க துன்பத்தைத் தருதல் போல ஆவரண சத்தியும் யாவர்க்கும் பிறவிக்கு ஏதுவாயிருந்து மிக்க துன்பத்தைத் தருதலால் விட்சேப சத்தியினும் அவ் ஆவரண சக்தியே மிகக் கொடிது என்றவா்றாம். (47)

இன்னும் அதனை வற்புறுத்தல்

55. **சுழுத்தியில் பிரள யத்தில்**
**தோற்றமாம் சகங்கள் மாண்டும்**
**அழுத்திய பவம்போய் முத்தி**
**அடைந்தபேர் ஒருவர் உண்டோ**
**முழுத்தவிட் சேபம் எல்லாம்**
**முத்தியில் கூட்டு கிற்கும்**
**கொழுத்தஆ வரண முத்தி**
**கூடாமல் கெடுத்த கேடே.**

நாள்தோறும் உண்டாகா நிற்கும் பிரளயமாகிய சுழுத்தியிலும் பிரமப் பிரளயத்திலும் உண்டான உலக முதலியன நசித்தும் அப்போது தம்மைத் துன்பத்தில் மூழ்கப் பண்ணிய சனனம் நீங்கி வீட்டைப் பெற்றவர்கள் ஒருவர் உளரோ, இல்லை; முழுதும் விட்சேப காரியமான அனைத்தும் வீட்டிற் சேர்க்கும். அறியாமை மிகுந்த ஆவரணமானது வீட்டைச் சேராமல் கெடுத்த கேடாம்.

மனோ தியானாதியால் பரமசுகத்தை அடைதலின், 'விட்சேபம் எல்லாம் முத்தியில் கூட்டுகிற்கும்' என்றார்.

முத்தியை அடைதற்கு அறிதலுள்ள விட்சேபம் சாதனம் ஆமேயன்றி அறியாமையான ஆவரணம் ஆகாது என்பதாம்.

நித்தியபிரளயம்–க்ஷணத்திற்கு க்ஷணம் காரிய பதார்த்தங்கள் அனைத்தும் தீபச்சுடர் போன்று நாசமாதல் என்றும் கூறுவதுண்டு.

மகாப் பிரளயம் – பிரம்மாவின் நூறு வயதிற்குப் பின்னர் அவரோடு ஆகாயாதி சர்வபூதங்களும் நாச மடைதல். (48)

மித்தையான விட்சேப சத்தியினால் வெளிப்படும் மித்தையே ஆமெனில் அங்ஙனம் ஆகாது எனல்.

56. **சுத்தியில் வெள்ளி போலத்**
**தோன்றிய தோற்ற மான**
**சத்தியும் பொய்யே யென்றால்**
**சத்திசா தனமா வந்த**
**முத்தியும் பொய்யாம் என்னின்**
**மோகநித் திரைவி லங்கால்**
**நித்திரை தெளியு மாபோல்**
**நிருவாண நிலைமெய் யாமே.**

கிளிஞ்சிலில் ரசத ஆரோபம் போல உண்டான விட்சேப சத்தியும் மித்தையாயின் அவ் விட்சேப சக்தி ரூபமான குரு சாஸ்திராதி சாதனமாக உண்டான வீடும் மித்தையாம் என்பாயாகில், மோகமான சொப்பனத்தில் கண்ட சிங்கத்தினால் நித்திரை தெளிந்து சாக்கிரம் வருவதுபோல, அச் சத்தியினால் உண்டாகும் முத்திநிலையும் உண்மையே யாம்.

மித்தையான சொப்பன சிங்கத்தினால் உண்டான சாக்கிரம் சத்தியமானதுபோல மித்தையான விட்சேப சத்தியின் காரியமான தியானாதிகளால் உண்டான வீடும் சத்தியமே யாம்.

மித்தை – பொய்,
இரசிதம் – வெள்ளி
சுத்தி – கிளிஞ்சில்; சங்கு;
ஆரோபித்தல் – ஏற்றுவித்தல்
நிர்வாணம் – முத்தி நிலை.
விட்சேபம் – கலக்கம் (49)

இச் சக்திகளின் காரணமான மாயைகளை நீக்கும் ஏது கூறல்.

**57. இம்பரில் நஞ்சை நஞ்சால்**
**இரும்பினை இரும்பால் எய்யும்**
**அம்பினை அம்பால் பற்றும்**
**அழுக்கினை அழுக்கால் மாய்ப்பர்**
**வம்பியல் மாயை தன்னை**
**மாயையால் மாய்ப்பர் பின்னைத்**
**தம்பமாய் அதுவும் கூடச்**
**சவஞ்சுடு தடிபோல் போமே.**

இவ்வுலகத்தில் சர்ப்பந் தீண்டின விஷத்தை ஔஷதமான விஷத்தினாலும், இரும்பை அரமாகிய இரும்பினாலும், விடும் அம்பை அதற்குப் பகையான அம்பினாலும், வஸ்திரத்தில் பிடித்த அழுக்கை அதை நீக்கும் உவர்மண் முதலிய அழுக்கினாலும் கெடுப்பார்கள். அங்ஙனமே, அசுத்த மாயையைச் சுத்தமாயையால் கெடுப்பார்கள்; பின்பு பற்றுக் கோடான அச் சுத்த மாயையும் அசுத்த மாயையோடுங்கூடப் பிரேத தகனம் செய்யும் தண்டம் அதனோடு வேவுதல் போலக் கெடும்.

சகத் ரூபமான அசுத்த மாயையைச் சித் ரூபமான மாயையினால் கெடுத்த விடத்து, உதயமான பரஞானத்தில் சுத்த மாயையும் அசுத்த மாயையோடு கெடும்.

மனமே மாயை. மனத்தை மனத்தால் கெடுப்பது மாயையை மாயையால் கெடுக்கும் உபாயமாம். (50)

ஆத்மாக்களுக்கு இவ் இருவிதமான சுத்த மாயைகளால் அவத்தைகள் வருமாறும் அவற்றின் நாமமும் கூறல்.

58. இந்தமா யையினால் சீவர்க்(கு)
ஏழ்அவத் தைகள்உண் டாகும்
அந்த ஏழ் அவத்தை தம்மை
அடைவினில் மொழியக் கேளாய்
முந்த அஞ் ஞான மூடன்
முளைத்தல்கா ணாத ஞானம்
சந்ததங் கண்ட ஞானம்
தழல்கெடல் குளிர்மை யாதல்.

இம்மாயையினால் சீவர்களுக்குச் சத்த அவத்தைகள் உளவாம். அவ்வேழ் அவத்தைகளின் நாமங்களைக் கிரமமாகச் சொல்லக் கேட்பாய். முன்னம் 1. அஞ்ஞானமும், 2. ஆவரணமும், 3. விட்சேபமும், 4. பரோட்ச ஞானமும், 5. நித்தியா பரோட்ச ஞானமும், 6. துக்க நிவர்த்தியும், 7. தடையற்ற ஆனந்தமும். (51)

அச் சப்த அவத்தைகளின் தன்மையைக் கூறல்.

59. பிரமமாம் தனைம றந்த
பேதைமை யேஅஞ் ஞானம்
பரனிலை காணோம் என்று
பகர்தல்ஆ வரண மூடல்
நரனொரு கரத்தால் சீவன்
நானெனல் முளைத்த தோற்றம்
குரவன்வாக் கியத்தால் தன்னைக்
குறிக்கொளல் பரோட்ச ஞானம்.

1. பிரம்ம சொரூபமாகிய தன்னை மறந்த அறியாமையே அஞ்ஞானமாம். 2. பிரமம் இல்லை இருந்தால் காணானா என்று சொல்லுதல் மூடல் என்னும் ஆவரண சத்தியாம்; 3. ஒரு புருடன் ஒரு நினைப்பினால் நான் சீவன் எனல் விட்சேப சத்தியாம்; 4. ஆசிரியர்

உபதேசத்தினால் பிரமத்தைக் குறிப்பாகத் தெரிந்து கொள்ளுதல் பரோட்ச ஞானமாம்.

இப் பாடலில் முதல் நான்கு அவத்தைகள் கூறப்பட்டுள்ளன. (52)

இதுவுமது

**60. தத்துவ விசாரஞ் செய்து**
**சகலசந் தேக மும்போய்**
**அத்துவி தந்தான் ஆதல்**
**அபரோட்ச ஞானம் ஆகும்**
**கத்தனாம் சீவ பேதம்**
**கழிவதே துக்கம் போதல்**
**முத்தனாய் எல்லாம் செய்து**
**முடிந்த (து)ஆ னந்த மாமே.**

5. பிரமவிசாரம் செய்து எல்லா ஐயமும் நீங்கி கூடஸ்த பிரம ஐக்கியமான அத்துவித சொரூபம் தானாக விளங்குதல் அபரோட்ச ஞானமாம். 6. அகம்பாவமான சீவ ஈஸ்வர பேதம் நீங்கலே துக்க நிவர்த்தியாம்; 7. சகல துக்கங்களிலிருந்து விடுபட்டவனாய்ச் செய்யத் தக்கன அனைத்துஞ் செய்து அடையத்தக்கன அனைத்தும் அடைந்தனம் என்னும் சந்தோஷமே ஆனந்தமாம்.

அஞ்ஞானம் ஆணவம் இரண்டும் அசுத்தமாயா சம்பந்தம்; விட்சேபம் பரோட்சம் இரண்டும் சுத்த அசுத்த மாயா சம்பந்தம்; அபரோட்ச ஞானத்தினால் பரோட்சமும் விட்சேப சத்தியின் காரியமான திரிஸ்யமும் துக்க நிவர்த்தியினால் ஆவரணமும், தடையற்ற ஆனந்தத்தினால் அஞ்ஞானமும் நீங்கும்; அவைகள் நீங்கவே இவைகள் நாமங்களும் நீங்கி நிரதிசய ஆனந்தமாகத்தானே விளங்கும் என்பதாம்.

1, 2, 3 – பந்த காரணமும்
4, 5 – அவற்றின் நிவர்த்தி சாதனமும்
6, 7 – மோட்ச வடிவமும் ஆம்

இவ்வாறு மற்றொரு சாரார் கூறுவார். (53)

அச் சப்த அவத்தையை விளக்கு நிமித்தம் தசபுமான் திட்டாந்தம் கூறல். சப்தம் – ஏழு.

61. இதுநினக்(கு) அறியும் வண்ணம்
இப்படி ஒருதிட் டாந்தம்
புதுமையாம் கதைகேள் பத்துப்
புருடரோர் ஆற்றை நீந்தி
உதகதீ ரத்தில் ஏறி
ஒருவன்ஒன் பதுபேர் எண்ணி
அதனொடு தசமன் தான்என்(று)
அறியாமல் மயங்கி நின்றான்.

இஃது உனக்குத் தெரியும்படி இவ்வண்ணம் ஒரு திட்டாந்தமாக வியப்பான ஒரு கதை கூறுவன் கேட்பாய்; பதின்மர் ஒரு நதியை நீந்தி நதிக்கரையிலேறி ஒரு புருடன் ஒன்பது பெயரை எண்ணி அவர்களோடும் எண்ணின தான் பத்தாவான் என்று தெரியாமல் பிரமித்து நின்றான்.

திட்டாந்தம் – உபமானம் (உதாரணம்)
தாட்டாந்தம் – உபமேயம். (54)

திட்டாந்த தாட்டாந்தங்களுக்கு ஒப்புமை காட்டல்.

62. அறியாத மயல்அஞ் ஞானம்
அவன்இலைக் காணோம் என்றல்
பிரியஆ வரண மாகும்
பீடைகொண் டழல்விட் சேபம்
நெறியாளன் தசமன் உண்டு
நிற்கின்றான் என்ற சொல்லைக்
குறியாக எண்ணி நோக்கிக்
கொள்வது பரோட்ச ஞானம்.

(1) தன்னைத் தெரியாத மயக்கமே அஞ்ஞானமாம்; (2) அத் தசமன் இல்லை; இல்லாமையால் காண்கிலோம் எனல் அறியாமை நீங்காத ஆவரணமாம்; (3) தசமனைக் காணோம் என்று துன்பமுற்று அலறல் விட்சேபமாம்; (4) வழிச் செல்வோன் இவன் கருத்தைக் கண்டு பதின்மன் உளன், இவ்விடத்திருக்கிறான் என்று சொல்லிய வசனத்தைக் குறிப்பாக நினைத்து அறிந்து கொள்வது பரோட்ச ஞானமாம்.

1. அஞ்ஞானம் – இருள்
2. ஆவரணம் – மறைப்பு
3. விட்சேபம் – கலக்கம்
4. பரோட்சம் – கண்ணுக்கு எட்டாதது. (55)

இதுவுமது

63. **புண்ணிய பதிகள் பின்னும்**
**புருடர்ஒன் பதின்மர் தம்மை**
**எண்ணிய நீபத் தாவான்**
**என்னவே தன்னைக் காணல்**
**கண்ணினிற் கண்ட ஞானம்**
**கரைதல்போ வதுநோய் போதல்**
**திண்ணிய மனதில் ஐயம்**
**தெளிதல்ஆ னந்த மாமே.**

(5) புண்ணியவானான நெறிச்செல்வோன் பின்பும் ஒன்பது புருடர்களை எண்ணின நீ பத்தாவான் ஆவாய் என்று சொல்லவே, தன்னைத் தசமனாகக் காண்டல் அபரோட்ச ஞானமாம்; (6) அழுகை நீங்கினது துக்க நிவர்த்தியாம், (7) வன்மையான உள்ளத்தில் சந்தேகம் தீர்தல் தடையற்ற ஆனந்தமாம்.

5. அபரோட்ச ஞானம் – காண்டல்
6. சோக நிவர்த்தி – துக்க நிவர்த்தி
7. நிரங்குசத் திருப்தி – சந்தேகம் தீர்தல் தடையற்ற ஆனந்தமாம்.

தசமன் திட்டாந்தத்தினால் தன்னை மறந்ததனால் வந்த உபாதிகளையும், தத்தரிசனத்தில் அவைகளின் நீக்கத்தையும் கூறினதாம். இதனால் ஆன்மாவிற்கும் அஞ்ஞானாதி சப்த அவஸ்தை பொருந்தும் என்பது நன்கு விளங்கும். (56)

தசமன் தன்னைத் தானென்கண்டது போலத் தன்னைத் தானாகத் தரிசிப்பிக்க வேண்டும் என்ற சீடனை நோக்கி மகா வாக்கியார்த்த நிருபகத்தினால் அத்துவிதமான தன்னை அறிவிக்கத் தொடங்கல்.

**64. தசபுமான் தனைக்கண் டாற்போல்**
**தேசிக மூர்த்தி யேஎன்**
**நிசவடி வினையான் காண**
**நீர்காட்டல் வேண்டும் என்றான்**
**சுசிபெறும் இலக்கி யார்த்தம்**
**தொம்பதம் தற்ப தங்கள்**
**அசிபதம் ஐக்கியம் செய்யும்**
**அதிசய உண்மை கேளாய்.**

ஆசாரியரே! பதின்மன் ஆனவன் தன்னைக் கண்டது போல எனது தத்துவாதீனமான பிரமத்தை நான் தரிசிக்கும்படி தேவரீர் காண்பிக்க வேண்டுமென்று கேட்டான். (நீ அது என்னும்) தொம்பத தற்பதங்களின் பரிசுத்தமாகிய இலக்கியார்த்தமான கூடஸ்த பிரம்த்தினுள் ஐக்கியத்தை (அது நீயானாய் என்னும்) அசிபதப் பொருளானது காட்டும்; இந்த அற்புதமான உண்மையைக் கேட்பாய்.

**விளக்கம்:** (சாம வேதத்தின் சாந்தோக்கிய உபநிடதத்தின் ஆறாவது பிரபாடகத்திலுள்ள 'தத்துவமசி' என்னும் மகா வாக்கியமானது) துவம்பத தத்பதங்களின் இலட்சியார்த்தங்கட்கு (அது நீயாய் இருக்கின்றாய் என்னும்) அசிபதப் பொருளான ஐக்கியத்தை விட்டுவிடாத லட்சணையால் போதிக்கின்றது.

| மூவகை லட்சணா விருத்தி | உதாரணம் |
|---|---|
| 1. லட்சணா விருத்தி ஜகத் (விட்டது) | – கங்கையில் இடைச்சேரி |
| 2. லட்சணா விருத்தி அஜகத் (விடாதது) | – சிவப்போடுகின்றது |

3. லட்சணா விருத்தி பாகத் தியாகம் – அவனே இவன். (57)
(விட்டு விடாதது)

ஒன்றான சைதன்யமே நான்கு சைதன்யமாகத் தோன்றும் எனல்.

65. **விண்ஒன்றே மகாவிண் என்றும்**
**மேகவிண் என்றும் பாரில்**
**மண்என்ற கடவிண் என்றும்**
**மருவிய சலவிண் என்றும்**
**எண்ணும்கற் பனைபோல் ஒன்றே**
**எங்குமாம் பிரமம் ஈசன்**
**நண்ணும்கூ டஸ்தன் சீவன்**
**நான்குசை தன்னிய மாமே.**

ஆகாயம் ஒன்றே மகா ஆகாயம் எனவும், மேக சலப் பிரதிபிம்ப ஆகாயம் எனவும், மண் என்ற கட ஆகாயம் எனவும், அதில் பொருந்திய கடக சலப் பிரதிபிம்ப ஆகாயம் எனவும் நினைக்கப்பட்ட கற்பிதத்தைப்போல, ஏகமான சுத்த சைதன்யமே பூரணமாகிய பிரமமெனவும், ஈஸ்வரன் எனவும், பொருந்திய கூடஸ்தன் எனவும், சீவன் எனவும் நான்கு சித்துக்களாம்.

**விளக்கம்:** ஆகாசம் ஒன்றாய் இருந்தும் அஃது உபாதியினால் மகா ஆகாசம், மேக ஆகாசம், கட ஆகாசம், சல ஆகாசமென நால் வகைத்தாக வியவகரிக்கப்படுதல் போல, சேதனம் ஒன்றாயிருந்தும் அஃது உபாதியினால் பிரம்மம், ஈஸ்வரன், கூடஸ்தன், ஜீவன் என நால்வகைத்தாக வியவகரிக்கப்படுகின்றது. (58)

ஆரோப சைதன்னியத்தை நீக்கி அதிஷ்டான சைதன்னியத்தை அடைய வேண்டுமெனல்.

66. **பூச்சிய ஈசன் சீவன்**
**புகல்பதம் இரண்டி னுக்கும்**
**வாச்சியம் இலக்கி யந்தான்**
**மலமிலாப் பிரமம் ஆத்மா**

காய்ச்சிய பாலில் நெய்போல்
கலந்தொன்றாக் கடைந்தெ டுக்கும்
ஆச்சியம் என்ன உன்னை
அறிந்துநீ பிரிந்து கொள்ளே.

மகா வாக்கியத்தில் சொல்லும் தற்பதம் தொம்பதமான இருபதங்கட்கும் வாச்சியார்த்தமானவை. ஆரோபமான சீவ ஈஸ்வர ராம்; இலக்கியார்த்தமானது நிர்மலமான பிரம கூடஸ்தராம்; காய்ச்சின பாலின் வெண்ணையைப் போலச் சடத்திற் சேர்ந்து ஒருமித்திருக்கின்ற ஆத்மாவைத் தரிசித்துக் கடைந்தெடுத்து உருக்கிய நெய்போல நீ அநாத்மாவினின்று பிரிவாயாக.

தற்பத தொம்பதங்களின் வாச்சியார்த்தமான சீவ ஈஸ்வரன் ஆரோப மெனக்கொண்டு அவைகளை நீக்கி இலக்கியார்த்தமான கூடஸ்தபிரம அதிஷ்டானத்தை ஒன்றாகக் காணின் அதுவே அசி பதார்த்தமான சுத்த சைதன்னியமாம் என்பதாம்.

**விளக்கம்:** பாலினின்றும் மத்தினால் கடைந்து பிரித்தெடுக்கும் வெண்ணையினைப்போல விவேகத்தால் இலட்சியார்த்தமான உன்னையறிந்து வாச்சியார்த்தத்தினின்றும் பிரிந்திருக்கக் கடவாய்.

தொம்பதம்–துவம்பதம்–அசையாநிலை, இரண்டு. (59)

தன்னைத் தரிசிப்பிக்கும் நிமித்தம் தான் அல்லாதவைகளை நியதி களைதல்.

67. பிறிவதெப் படியென் றக்கால்
பிணமாகும் உடனாம் என்னும்
அறிவினைக் கொல்லல் வேண்டும்
ஐம்பூத விகாரம் அன்றோ
வெறியதோர் துருத்தி மூச்சு
விடுவது போல மூக்கால்

எறிபிரா ணனும்நீ யல்லை
இராசத குணவி காரம்.

அநாத்மாவை நீங்குவது எங்ஙனம் எனின், சவமாய்ச் சிதைகின்ற தேகம் பஞ்சபூத விகாரமாம். ஆதலால் அதை நானெனக் கருதும் பிராந்தியைக் கெடுத்தல் வேண்டும்; வெறுந்துருத்தியானது காற்றை விடுவது போல மூக்கினால் வீசும் பிராண வாயுவும் ரசோகுணத்தின் விகாரமாய் ஆதலால் அதுவும் நீ அல்லை.

**விளக்கம்**

1. ஸ்தூல சரீரம் அன்னமய கோசம்.
2. சூட்சும தேகத்தில் பிராணாதி வாயுக்களும் கன்மேந்திரியங்களும் கூடியது பிராணமய கோசம்.
3. மனமும் ஞானேந்திரியங்களும் கூடியது மனோ மயகோசம்.
4. புத்தியும் ஞானேந்திரியங்களும் கூடியது விஞ்ஞான மய கோசம்.
5. சுழுத்தியில் உள்ளது ஆனந்த மய கோசம். கோசம்–உறை. (60)

இதுவுமது

68: **கரணமாம் மனது புந்தி**
**கருத்தாவாம் அவைஆன் மாவோ**
**தரமுள இரண்டு கோசம்**
**சத்துவ குணவி காரம்**
**வரமறு கனவா னந்த**
**மயனையும் நான்என் னாதே**
**விரவிய தமஅஞ் ஞான**
**விருத்தியின் விகாரம் ஆமே.**

அந்தக் கரணமான மனமும், அகம்பாவமாகிய புத்தியும், பேதமுள்ள மனோமய கோசமும், விஞ்ஞான மய கோசமும், ஸ்திரமில்லாத சொப்பனமும், சத்துவ குண விகாரமுமாம்; ஆதலால்

அவ்விரண்டும் ஆத்மாவோ அல்ல; பொருந்திய தமோ ரூபமான அவித்தியா விருத்தியினது விகாரமாம்: ஆதலால் ஆனந்தமய கோசமான சீவனையும் ஆத்மா என்று கருதாதே.

தேகமுதல் அவித்தை பரியந்தமான மூன்று தேகமும் மூன்று அவத்தையும், மூன்று அபிமானியும் பஞ்ச கோசங்களும் தான் அன்றென நியதி களைந்ததாம். (61)

நியதி களைந்த நீ அவ்விடத்திலுள்ள சுத்த சைதன்னியத்தைத் தரிசித்து அதுவாகும் பொருட்டுப் பஞ்ச கோச விலட்சணன் ஆவாய் எனல். விலட்சணம் – சிறப்பியல்பு.

**69. சத்தோடு சித்தா னந்தம்**
**சமந்திரஞ் சாட்சி யேகம்**
**நித்தியம் வியாபி ஆன்மா**
**நீஅது வாய்அ றிந்து**
**பொத்தொடு சடந்துக் காதி**
**பொருந்துபே தங்க ளான**
**குத்திர பஞ்ச கோசக்**
**குகைவிட்டு வெளியில் ஆவாய்.**

சத்தும் சித்தும் ஆனந்தமும் சமமும் ஸ்திரமும் காட்சியும் ஏகமும் நித்தியமும் பூரணமும் ஆகி விளங்குவது ஆத்ம சொரூபமாம். ஆதலால், கூடஸ்தனே பிரமம், பிரமமே கூடஸ்தன் என அத்துவித சொரூபமாகத் தரிசித்து அனுர்த சட துக்க முதலியவற்றை அடையா நின்ற வேறுபாடுகள் உள்ள வஞ்சகமான பஞ்ச கோசமாகிய தேகத்தை நீக்கி வெளிப்படுவாய்.

பஞ்ச கோசங்களைக் கண்டு அவைகட்கு விலட்சணன் ஆவாய் என்பதாம். (62)

விலட்சணமான இடத்தைப் பார்த்து இவ் இருளோ நான் என வினாதல். விலட்சணம் – சிறப்பியல்பு.

70. பஞ்சகோ சமும்விட்(டு) அப்பால்
பார்க்கின்ற போது பாழே
விஞ்சிய(து) அதுவல் லாமல்
வேறொன்றும் தெரியக் காணேன்
அஞ்சன இருளை யோநான்
அகமென அனுப விப்பேன்
வஞ்சம்இல் குருவே என்ற
மகன்மதி தெளியச் சொல்வார்.

உண்மையான ஆசாரியரே! ஐந்து கோசமான மூன்று தேகத்தையும் நீக்கி அப்பால் பார்க்கும்போது சூனியமே சேஷித்திருக்கின்றது. அச் சூனியமே அன்றி மற்றொன்றும் தோன்றக் காண்கிலேன்; கரிய அந்தகாரத்தையா யான் நான் என்று அனுபவிப்பேன்? என்று கேட்ட சீடன் அறிவு தெளியும்படி போதிப்பார்.

அஞ்சன இருள் என்பது பிரகிருதி எனக்கொள்க, நியதிகளைந்த தான் இருக்க அதனைக் காணாமல் நியதி களையப் பட்டவை தோற்றாமையைத்தான் தோன்றவில்லை எனக் கலங்கி வினாவினதாம்.

பிரகிருதி–மூலம்; வேறுபாடு உறாதது; இயல்பு. (63)

பிரகிருதியை நீக்கிச் சுத்த சைதன்னியனான தன்னைத் தரிசிப்பிக்கும் பொருட்டு இருளைக் கண்டவன் பாழா? அவனே நீ எனக் காண்பாய் எனல்.

71. முன்புகல் தசமன் புத்தி
மோகத்தால் எண்ணி எண்ணி
ஒன்பது பேரைக் கண்ட
ஒருவனாம் தனைக்கா ணாத
பின்(பு) அவன் இடையிற் கண்ட
பெரியபாழ் அவனோ பாராய்
அன்புள மகனே காண்ப(து)
அடங்கலும் காண்பான் நீயே.

முன் சொல்லிய பதின்மன் ஆனவன் புத்தி மயக்கத்தினால் நினைத்து ஒன்பது பெயர்களைப் பார்த்த ஒருவனாகிய தன்னைப் பாராத பின் தன்னிடத்திலே தன்னைத் தசமனாகப் பார்த்த அவனா பெரும்பாழ்? பார்ப்பாய் அன்புள்ள புத்திரா! சூனிய முதலிய திரஸ்யங்கள் அனைத்தையும் பார்ப்பவன் நீயே ஆவாய்.

அவ் இருளாகிய அறியாமை நீ அன்று; அதனைக் கண்ட ஞானமே நீயென அறிவித்ததாம். (64)

அங்ஙனம் அதிஷ்டான சைதன்னியமான தனது சந்நிதியில் சகலமும் உதித்து ஒடுங்கும் எனல்.

அதிஷ்டானம் – நிலைக்களம்.
சைதனியம் – தத்துவஞானம்; ஆன்மா.

72. **தூலசூக் குமம்அஞ் ஞானம்**
**தோன்றுமூன்(று) அவத்தை தாமும்**
**காலம்ஓர் மூன்றும் சன்மக்**
**கடலெழும் கல்லோ லங்கள்**
**போலவே வந்து வந்து**
**போனஎத் தனையென் பேன்நான்**
**ஆலமர் கடவுள் ஆணை**
**அவைக்கெலாம் சாட்சி நீயே.**

தூல சூக்கும காரணமாகிய சரீரத் திரயங்களும், தோற்றாநின்ற சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி எனும் அவத்தாத் திரயங்களும், விசுவ தைச பிரஞ்ஞுகன் என்னும் அபிமானத் திரயங்களும், திரிகாலங்களும், பிறப்பாகிய சமுத்திரத்தில் உண்டான பேரலைகளைப் போலவே உண்டாகி உண்டாகி அழிந்தன. யான் எவ்வளவென்று சொல்வேன். கல்லாலின் நிழலில் எழுந்தருளிய சற்குருவின் ஆஞ்ஞைப் படிக்கு அவை அனைத்திற்கும் நீயே சாட்சியாம்.

ஆரோபமாள அவித்தை முதலியவைகளின் ஏக தேசமும் அவைகட்கு அதிட்டானமான ஆத்மஞான வியாபகத்தையும் தெரிவித்ததாம்.

## சரீரங்கள் – 3

**விளக்கம்:**

1. **ஸ்தூல சரீரம்** – பஞ்சீகிருத பஞ்ச பூதங்களால் ஆயது; கருமத்தால் தோன்றியது; சுகதுக்காதி போகத்திற்கு இடமாயிருப்பது; பிறத்தல், இருத்தல், வளர்தல், திரிதல், குறைதல், கெடுதல் என்னும் சட்பாவ விகாரமுடையது.

2. **சூட்சம சரீரம்** – அபஞ்சீகிருத பஞ்ச மகா பூதங்களால் ஆயது; கருமத்தால் தோன்றியது; சுக துக்காதி போகத்திற்குச் சாதனமாயது; ஞானேந்திரியங்கள் ஐந்து, கன்மேந்திரியங்கள் ஐந்து, பிராணாதி வாயு ஐந்து, மனம் புத்தியென்னும் இரண்டென்னும் இப்பதினேழு கலையோடும் கூடியிருப்பது.

3. **காரண சரீரம்** – அநிர்வாச்சியமாய் அவித்தா வடிவமாய் ஸ்தூல சூட்சுமம் என்னும் சரீரம் இரண்டிற்கும் காரண மாத்திரமாயிருக்கும் தனது சொரூப அஞ்ஞானமாகிய நிர்விகற்ப வடிவம்.

## அவஸ்தைகள்–3

1. சாக்கிரம் – காது முதலிய இந்திரியங்களால் சப்தாதி விஷயங்கள் அறியப்படுங்காலம்.

2. சொப்பனம் – சாக்கிர அவஸ்தையில் பார்க்கப்பட்டவற்றாலும் கேட்கப்பட்டவற்றாலும் உண்டாகிய வாசனையால் நித்திரா காலத்தில் எதில் பிரபஞ்சம் தோன்றுகிறதோ அது.

3. சுழுத்தி – யான் ஒன்றும் அறியேன். நித்திரை என்னால் சுகமாய் அனுபவிக்கப்பட்டது என்னும் நினைவிற்கு ஏதுவாகிய அனுபவகாலம்.

சாட்சி – நேரிற் கண்டவன். (65)

அவ்வாத்ம ஞானத்தைத் தவிர மற்றோர் ஞானம் அன்று என்பதை உறுதிப் படுத்தும் நிமித்தம் தன்னையறிவது தானே எனல்.

73. எல்லாம்கண்(டு) அறியும் என்னை
ஏதுகொண்(டு) அறிவேன் என்று
சொல்லாதே சுயமாம் சோதிச்
சுடருக்குச் சுடர்வே றுண்டோ
பல்லார்முன் தசமன் தன்னைப்
பார்ப்பதும் தனைக்கொண் டேதான்
அல்லாது பதினொன் றானும்
அவனிடத்(து) உண்டோ பாராய்.

அனைத்தையும் பார்த்து அறிகின்ற என்னை எதைக் கொண்டு அறிவேன் என்று உரையாதே. சுயஞ்சோதியான பிரகாசத்தை அறிவிப்பதற்குப் பிரகாசம் வேறும் உளதோ? பலர் முன்னர் பதின்மனைக் காண்பதும் தன்னைக் கொண்டே அன்றி பதினோராம் புருடனும் அத்தசமனிடத்து உளனோ? பார்ப்பாய்.

ஆத்ம சைதன்னியம் ஒன்றே என்று அறிவித்ததாம். (66)

சர்வஞ்ஞத்துவ கிஞ்சிஞ்ஞத்துவத்தையும் அறிவு அறியாமையையும் நீக்கிச் சுத்த சைதன்னியத்தைத் தரிசிப்பித்தல்

74. அறிவுக்கும் அறிவு செய்யும்
அறிவுவே றுண்டென் றெண்ணும்
அறிவற்ற குதர்க்க மூடர்க்(கு)
அனவத்தை பலமாய்த் தீரும்
அறிபடும் பொருள் நீ அல்லை
அறிபடாப் பொருள்நீ அல்லை
அறிபொருள் ஆகும் உன்னை
அனுப்வித்(து) அறிவாய் நீயே.

சுயஞ் சைதன்னியத்துக்கும் அறிவிக்கும் ஞானம் மற்றொன்று இருக்கிறதென்று நினைக்கின்ற உணர்வற்ற குதர்க்கம் செய்யும் அஞ்ஞானிகளுக்கு அனாவஸ்தாதோஷம் பிரயோசனமாய் முடியும். திரிசிய வஸ்துக்களும் நீ அல்லை; அறியாமையான சூனிய

வஸ்துக்களும் நீ அல்லை; சைதன்னிய வஸ்துவான உனதாத்ம சொரூபத்தை நீ அனுபவித்து உணர்வாய்.

துவிதமாகிய அபர உணர்வை நீக்கி அத்துவிதமான பரவுணர்வு இதுவென உணர்த்தியதாம்.

அபரம் – பொய். (67)

அப்பரவுணர்வே தானாக விளங்கிய சிதானந்தமே சர்வமாக விளங்குகின்றதென உணர்த்துதல்.

75. **மதுரமாம் கட்டி சுட்ட**
**மாப்பணி யாரம் எல்லாம்**
**மதுரமாக் கியஅ தற்கு**
**மதுரந்தான் சுபாவம் அன்றோ**
**அதுஇது எனும்ச டங்கள்**
**அறிவாக அறிவைத் தந்தே**
**அதுஇது இரண்டும் ஆகா**
**அகம்பொருள் அறிவாய் நீயே.**

தித்திப்பாகிய கருப்புக்கட்டி சேர்த்துச்சுடப்பட மாப்பலகாரங்கள் அனைத்தையும் மதுரமாகச் செய்த அவ்வெல்லக் கட்டிக்கு மதுரமானது சுபாவம் அன்றோ? அது என்னும் சமஷ்டியும் இது என்னும் வியஷ்டியுமான திரிசிய வஸ்துக்களை அறியும்படியான ஞான திருஷ்டியைக் கொடுத்துச் சீவ ஈசுவர துவிதமாகாத தானாகிய அத்துவித வஸ்துவை நீயே தரிசிப்பாய்.

தனது அம்சத்தைத் தவிர வேறொன்றும் இல்லை எனத் தனது வியாபகத்தை விளக்கியதாம்.

அது – அறிபடாப் பொருள்.
சமஷ்டி – கூட்டாக உள்ளது.
இது – அறிபடு பொருள்.
சுபாவம் – தன்மை; இயல்பு.
வியஷ்டி – தனிப்பட்டது.

இவ் அத்துவித நிலை சித்திக்கும் பொருட்டு அதிஷ்டானத்துக்கு ஐக்கியமேயன்றி ஆரோபத்திற்கு ஐக்கியம் இன்றெனல்.

அத்துவிதம் – இரண்டன்மை அல்லது ஒன்று. பரமான்மாவும் சீமான்மாவும் ஒன்றென்கை.

**76. இந்தநீ தொம்ப தத்தின்**
**இலக்கியப் பொருளாம் என்றும்**
**பந்தமில் பிரம மேதற்**
**பதந்தனில் இலக்கி யார்த்தம்**
**அந்தமாம் சீவன் ஈசன்**
**அவர்களே வாச்சி யார்த்தம்**
**சந்தத்தம் பேத மாவார்**
**தமக்குஐக் கியங்கூ டாதே.**

இத் தன்மையுள்ள கூடஸ்தனான நீயே தொம்பதத்தினுடைய லட்சியார்த்தமாம்; எப்போதும் மாயா ரகிதமான பிரமம் என்றும் அதுவே தற்பதத்தினுடைய லட்சியார்த்தமாம்; தோன்றி அழியும் சீவ ஈஸ்வரரான அவர்களே வாச்சியார்த்தமாம்; என்றும் பேதமாகிய சீவ ஈஸ்வரர்களுக்கு ஏகமாதல் கூடாதாம்.

பேதம் ஆவார்க்கு ஐக்கியங் கூடாதென்றதனால் அபேதம் ஆவார்க்கு ஐக்கியம் கூடும் என்றாயிற்று.

மகாவாக்கியத்தின் இலக்கியார்த்தமான கூடஸ்த பிரமம் அபேதமாதலின் அவர்கட்கு ஐக்கியம் கூடும் என்பதாம்.

சகிதம் – சேர்ந்திருப்பது.
ரகிதம் – விலகியிருப்பது. (69)

இதுவுமது

**77. பேதமா னதுவும் கேளாய்**
**பேராலும் இடங்க ளாலும்**

ஓதரும் உபாதி யாலும்
உடலாலும் உணர்வி னாலும்
பாதலம் விசும்பும் போலப்
பலதரம் அகன்று நிற்பார்
ஆதலால் இவர்க்(கு) எந் நாளும்
ஐக்யம்என் பதுகூ டாதே.

சீவ ஈஸ்வரர்களுக்கு உண்டான பேதத்தைக் கேட்பாயாக. சீவ ஈஸ்வரர்கள் என்னும் தங்கள் நாமங்களினாலும், அண்ட பிண்டங்களாயிருக்கின்ற ஸ்தானங்களினாலும், சொல்லுதற்கரிய காரண காரியமாகிய உபாதிகளினாலும், சமஷ்டி வியஷ்டியாகிய தேகங்களினாலும் சர்வஞ் ஞத்துவம் கிஞ்சிஞ் ஞத்துவம் என்னும் ஞானத்தினாலும், அவர்கள் பாதாளமும் விண்ணுலகமும் போலவும் நாநா விதத்தினாலும் பேதமுற்று நிற்பார்கள், ஆதலால், இத் தன்மையுள்ள சீவ ஈஸ்வரர்களுக்கு எப்போதும் கலத்தல் என்பது கூடாதாம் உபாதி–வேதனை.

மகாவாக்கியத்தின் வாச்சியார்த்தமான சீவ ஈஸ்வரர் இங்ஙனம் பேதமாதலின் அவர்கட்கு ஐக்கியம் கூடாதென்பதாம்.

சர்வஞ்ஞன் – எங்கும் நிறைந்தவன்.
கிஞ்சித்து – கொஞ்சமானது. (70)

மகா வாக்கியார்த்தப்படி கூடஸ்தபிரமம் ஏகம் என்னும் பொருள் தோன்ற மூவித இலக்கணையைக் கூறுகின்றார்.

78. வடநூல்வல் லவர்கள் சொல்லும்
வாசகப் பொருள்சே ராமல்
இடராகிற் பொருளாம் வண்ணம்
இலக்கணை யுரையால் கொள்வார்
திடமான அதுவும் மூன்றாச்
செப்புவார் விட்ட தென்றும்

விடல்இலா தென்றும் விட்டு
விடாததென்னூ றும்பே ராமே.

வட நூலாசிரியர் சாஸ்திரங்களிற் சொல்லா நின்ற வாச்சியார்த்தத்தினால் பொருள் விளங்காது தடைப்படின், அர்த்தமாகும் பொருட்டு இலக்கியார்த்தத்தினால் பொருள் கொள்வார்கள்; திறமாக அவ் இலக்கணையையும் மூன்று விதமாகச் சொல்லுவார்கள். அவற்றிற்கு விட்ட இலக்கணை எனவும், விடாத இலக்கணை யெனவும், விட்டும் விடாத இலக்கணை எனவும் நாமங்களாம்.

இலக்கணையின் நாமங்களைக் கூறினதாம்.

அடுத்த பாட்டில் உதாரணங்களைக் காணலாம்.

இலக்கணை – ஒரு பொருளைக் காட்டற்குரிய சொல்லை மற்றொரு பொருளுக்குத் தந்துரைப்பது. (71)

அவற்றிற்கு உதாரணங் கூறல்

79. **கங்கையில் கோஷம் என்றும்**
**கறுப்புச்சேப்(பு) ஓடு(து) என்றும்**
**தங்கிய சோயந் தேவ**
**தத்தன்என் றுஞ்சொல் வார்கள்**
**இங்குதா ரணங்கள் ஆக்கி**
**இந்தமூன் றுரைக ளாலே**
**துங்கநூல் விரோத மான**
**சொல்லெலாம் பொருளாம் தானே.**

கங்கைக் கண் இடைச்சேரி எனவும். கருமை செம்மைகள் செல்லுகின்ற எனவும், தங்கா நின்ற அவனே இவனான தேவதத்தன் என்னும் ஒரு புருடன் எனவும் உரைப்பார்கள். இவ்விடத்து உதாரணங் கொண்டு இம்மூன்று இலக்கணைப் பொருள்களினால் மேலான சாஸ்திரங்களில் அர்த்தம் பொருந்தாமல் வேறுபடுகின்ற வாக்கியங்கள் அனைத்தும் அருத்தமாம்.

1. கங்கைக்கண் இடைச்சேரி என்பது அதன் கரையில் இருக்கும் என்று அதைவிட்டு இதைக் கொள்வது – விட்ட இலக்கணை.

2. கருமை செம்மை செல்லுகின்றன என்னுமிடத்து கருமை நிறமாகிய பசுவும் செம்மை நிறமாகிய குதிரையும் செல்லுகின்றன என்று அதன் நிறத்தை விடாமல் அவ் ஆன்மாக்களைக் கொள்வது – விடாத இலக்கணை.

3. அவ்விடமும் அக்காலமும் அவ்வேடமும் உள்ள அவனே இவ்விடமும் இக்காலமும் இவ்வேடமும் உள்ள இவன் என அவைகளை நீக்கி இப் புருடனை மாத்திரம் கொள்வது விட்டு விடாத இலக்கணை (உதாரணம்: தங்கிய சோயந் தேவதத்தன்)

1. விட்ட இலக்கணை – கூடஸ்த சைதன்யத்தைத் தரிசிப்பது.
2. விடாத இலக்கணை – ஆநந்தோப் பிரமத்தைத் தரிசிப்பது.
3. விட்டும் விடாத இலக்கணை – அபேதமான அத்துவித வஸ்துவை விடாமல் தரிசிப்பது. (72)

இதுவுமது

**80. பன்னிய சோயம் என்னும்**
**பதங்களின் வாச்சி யார்த்தம்**
**அன்னிய தேயம் காலம்**
**அவனிவன் என்ப எல்லாம்**
**சொன்ன இவ் விரோதம் விட்டுத்**
**தொகைஇ லக்கியம் விடாமல்**
**உன்னிடில் தேவ தத்தன்**
**ஒருவனை வெளியாக் காட்டும்.**

முன் சொன்ன அவனே இவன் என்னும் பதங்களுக்கு வாக்கியார்த்தமானது தேசமும் காலமும் அவன் இவன் என்பனவாகச் சொல்லப்பட்ட விரோதமாயுள்ள இவ் அனைத்தையும் விடுத்து முடிவில் இலக்கியார்த்தத்தை விடாமல் சிந்திக்கில் தேவதத்தன் என்னும் ஒரு புருடனையே பிரத்தியட்சமாகக் காண்பிக்கும்.

இவ் இலக்கணையின் பொருள் ஒருமையை நன்றாகத் தெரிவித்ததாம். சோயம் – சப்தங்கள் ஒன்று சேர்ந்து ஒரு பொருளை உணர்த்துதல். (73)

இத் திருஷ்டாந்தப்படி தாஷ்டாந்தத்தை விளக்குதல்.

81. தத்துவப் பதங்கள் தாமும்
சாட்சியாய்ப் பிரம மான
வத்துவை விடாமல் பேத
வாச்சியார்த் தத்தை விட்டு
நித்தமும் அதுநீ யாகும்
நீயது வாகும் என்னும்
அர்த்தமும் அகண்டம் என்றே
அசிபத ஐக்கியம் காட்டும்.

மகா வாக்கியமான 'அதுநீ' என்னும் பதங்கள் பிரமமாயும் சாட்சியாயும் உள்ள சேதன பாகமான இலக்கிய அர்த்தத்தை விடாமல் பேத தர்மங்களையுடைய வாச்சிய பாகங்களை விடுத்து சர்வகாலமும் பிரமமே நீயாம், நீயே பிரமமாம் என்று சொல்லும் அசிபதத்தின் பொருளும் ஏகமே என்று ஐக்கியத்தை உணர்த்தும்.

ஆசிரியர் உபதேசப்படி வேத நிச்சயம் இருப்பது தோன்ற அதன் முடிவான மகா வாக்கியத்தின் இலக்கியார்த்தமான கூடஸ்த பிரமத்தின் ஒருமையை உணர்த்தியதாம், சேதனம் – அறிவுடைப்பொருள்.

மகா வாக்கியம் – தத்துவமசி.

பிரம்மமே கூடஸ்தனாம், கூடஸ்தனே பிரம்மமாம் என்ற ஐக்கியத்தை அறிவிக்கின்றது. (74)

இவ் அத்துவிதமான சுவானு பூதியே தானாக விளங்குவாய் எனல்.

82. கடநீரின் மேக நீரில்
கண்டவான் இரண்டும் பொய்யே

குடவானும் பெரிய வானும்
கூடிஒன் றாம்எப் போதும்
இடமான பிரமம் சாட்சி
இரண்டும்எப் போதும் மேகம்
திரமாகச் சுவானு பூதி
சிவோகம்என் றிருந்தி டாயே.

கட சலத்திலும் மேக சலத்திலும் தோன்றுகின்ற பிரதி பிம்ப ஆகாயமான இரண்டும் மித்தையேயாம்; கட ஆகாயமும் மக ஆகாயமும் எக்காலமும் கலந்து ஏகமாம். அது போல வியாபகமான பிரமனும் கூடஸ்தனும் ஆகிய இரண்டு சைதன்னியமும் எக்காலமும் ஒன்றேயாம். ஆதலின் ஸ்திரமாகச் சுவானு பூதியாகிய சிவோகம் என்று இருப்பாய்.

சுருதி குருவாக்கியார்த்தம் ஒன்றுபட்ட அத்துவிதமான சுத்த சைதன்னியமே தானாக விளங்குவாய் என, மௌன நிலையை உணர்த்தி ஆசிரியர் மௌனமாயிருந்தார், என்பதாம். சுருதி – எழுதாமறை (வேதம்); மித்தை – பொய்.

சிவோகம் – சிவமே நான் – நானேசிவம்.

சுவானுபவம் – நான் அறிவானந்தம் என்னும் அனுபவம். (75)

குருவாக்கியப்படி சமாதியில் தன்னைத் தரிசித்தல். சமாதி – மனத்தைப் பரம்பொருளோடு ஐக்கியப்படுத்தி நிறுத்துகை.

83. தஞ்சமாம் குருவுஞ் சொன்ன
தத்துவ வழிதப் பாமல்
பஞ்சகோ சமுங்க டந்து
பாழையும் தள்ளி யுள்ளில்
கொஞ்சமாம் இருப்பும் விட்டுக்
கூடஸ்த பிரமம் என்னும்
நெஞ்சமும் நழுவி ஒன்றாய்
நின்றபூ ரணத்தைக் கண்டான்.

தனக்கு உயிர்த்துணையான ஆசிரியர் அனுக்கிரகஞ் செய்த தற்பத தொம்பத சோதனை செய்த மார்க்கங்கள் தவறாமல் ஐந்து கோசங்கட்கும் விலட்சணனாய், அங்ஙனங் கண்ட சூனியத்தையும் நீக்கி, உள்ளத்தில் அற்பமாகத் தோற்றியிருக்கின்ற ஸ்மரணத்தையும் விடுத்து 'கூடஸ்த பிரமம்' என்கின்ற நினைவும் இறந்து அத்துவிதமாயிருந்த பரிபூரண சொரூபத்தைத் தரிசித்தான். (76)

விலட்சணமாய் – தெளிவாய்.

சமாதிகூடி சுவானுபூதி மயமாதல். சுவ அனுபூதி – தனது அனுபவ அறிவு.

84. அனுபவா னந்த வெள்ளத்(து)
அழுந்தியே அகண்ட மாகித்
தனுக்ர ணங்க ளாதிச்
சகலமும் இறந்து சித்தாய்
மனதுபூ ரணமாய்த் தேக
மானசற் குருவுங் காண
நனவினில் சுழுத்தி யாகி
நன்மகன் சுபாவம் ஆனான்.

சுவானுபவமாகிய நிரதிசய ஆனந்த சமுத்திரத்தில் மூழ்கி, அகண்டா காரமாய்த் தேக இந்திரிய அந்தக்கரணம் முதலிய அனைத்தும் நசித்து, சின்மாத்திர அனுபவத்தினால் மனம் பூரணமாகி, பூரணமே திருவுருக்கொண்ட ஆசிரியரும் பார்க்கும்படி நனவிற் சுழுத்தியை அடைந்து, நற்சீடன் தனது இயல்பான சொரூபமாக விளங்கினான்.

சுருதி குருவாக்கியப்படி சுவானுபவம் விளங்கிற்று என்பதாம்.

சொரூபம் – இயற்கைத் தன்மை; உருவம்; அழகு நிர்விகற்ப சமாதியில் அந்தக்கரண விருத்தி சலத்தில் கரைத்த உப்பைப் போன்று புலனாகாது இருக்கிறது.

நனவிற் சுழுத்தியை நடு நிலையென்பர்.

(77)

சமாதியினின்றும் வெளிப்படல்.

85. அளிமகன் நெடும்போ திவ்வா(று)
ஆனபின் மனது மெள்ள
வெளியில்வந் திடவு ணர்ந்தான்
விமலதே சிகனைக் கண்டான்
துளிவிழி சொரியப் பாதம்
தொழுதுவீழ்ந்(து) எழுந்து சூழ்ந்தான்
குளிர்முகச் சுவாமி கேட்கக்
கும்பிட்டு நின்று சொல்வான்.

கனிவுள்ள சீடன் ஆனவன் வெகுநேரம் இவ்வண்ணமாக விளங்கின பின்பு, சொரூப சமஸ்காரமான மனது மெள்ள அச் சமாதியின்றும் துரிதமாய் வெளிப்பட, அறிந்தவனாய் நிர்மலமான ஆச்சாரியரைப் பார்த்துக் கண்கள் ஆனந்த பாஷ்பம் பொழிய அவரது பாதத்தில் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, பின்பு எழுந்து வலம் வந்து பிரமானந்தம் விளங்குகின்ற முகத்தையுடைய ஆசாரியர் கேட்கும் படி சிரசின் மேல் அஞ்சலியோடு நின்று துதிப்பான்.

சமாதி அனுபவ சமஸ்காரத்தோடு சக நிட்டைக்கு வெளிப் பட்டதாம். சக நிட்டை – சதா நிட்டை. (78)

கைம்மாறு காணேன் எனக் குருவைத் துதி செய்தல்.

86. ஐயனே எனது ளேநின்(று)
அனதுசென் மங்கள் ஆண்ட
மெய்யனே உபதே சிக்க
வெளிவந்த குருவே போற்றி
உய்யவே முத்தி நல்கும்
உதவிக்கோர் உதவி நாயேன்
செய்யவே றொன்றும் காணேன்
திருவடி போற்றி போற்றி.

ஆசாரியரே! எனது உள்ளத்தினின்று அளவிறந்த பவங்கள் தோறும் ஆளாநின்ற கர்த்தனே! அனுக்கிரகிக்கும் மானிட வடிவு கொண்டு எழுந்தருளிய ஆசிரியரே! வீடு அளித்த சகாயத்திற்கு ஒரு கைம்மாறு அடியேன் செய்ய மற்றொன்றும் காண்கிலேன்; ஆகையால் தேவரீர் அழகிய பாதங்களைத் துதிக்கின்றேன்.

சென்மங்கள் – பிறவிகள்
முத்தி – வீடு
கைம்மாறு – மாற்றுதவி. (79)

சமாதி அனுபவம் பெற்ற சீடனை நோக்கிச் சுக நிட்டை அனுபவம் உதயமாம் பொருட்டு உனது அனுபவம் தடையின்றி விளங்கும் எனில் அஃதே கைம்மாறு எனக் கூறல்.

87. **சிட்டன்இவ் வாறு சொல்லத்**
**தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்**
**கிட்டவா என விருத்திக்**
**கிருபையோ(டு) அருளிச் செய்வார்**
**துட்டமாம் தடைகள் மூன்றும்**
**தொடராமல் சொரூப ஞான**
**நிட்டனாய் இருப்பா யாகில்**
**நீசெய்யும் உதவி யாமே.**

சீடன் ஆனவன் இவ்வண்ணம் துதித்துரைக்க, ஆசிரியர் ஆனவர் மகிழ்ச்சியுடன் பார்த்து, சமீபத்தில் வா வென்று அழைத்து இருக்கச் செய்து, கருணையோடும் அனுக்கிரகம் செய்வார். பொல்லாதன வாகிய பிரதிபந்தங்கள் மூன்றும் தொடர்ந்து வாராமல் சொரூப சைதன்னிய சமாதியை உடையவனாய் இருப்பாயானால் இஃதே நீ எனக்குச் செய்யும் கைம்மாறாகும்.

தானென அனுபவமான சுக போகத்தைத் தவிர வேறு கருதாமல் இருக்க வேண்டும் என்பதாம். (80)

அனுபவமான அத்துவித ஞானம் தடைகளினால் நீங்குமோ என்ற சீடனை நோக்கி அவைகள் உண்டேல் அனுபவம் திறமாக விளங்காது எனல்.

**88. நீநாடுன்(று) இரண்டில் லாமல்**
**நிறைந்தபூ ரணமாய் எங்கும்**
**நானாகத் தெரிந்த ஞானம்**
**நழுவுமோ குருவே என்றான்**
**தானாகும் பிரம ரூபம்**
**சற்குரு நூலால் தோன்றும்**
**ஆனாலும் தடைகள் உண்டேல்**
**அனுபவம் உரைத்திடாதே.**

நீ எனவும் நான் எனவும் துவிதமின்றி அத்துவிதமாக வியாபித்த பரிபூரணமாய் எவ்விடத்தும் தானாக அறிந்த சைதன்னியமானது ஆசாரியரே! நழுவுமோ? என்று கேட்டான், த்ன் மயமான பிரம சொரூபமானது உபதேசத்தினாலும் வேதாந்த சாஸ்திரங்களினாலும் உதிக்குமானாலும் பிரதி பந்தங்கள் இருக்குமானால் அவ் அனுபவம் ஸ்திரப்படாது.

நீ என்பது முன்னிலையில் குருவாக விளங்கிய ஆனந்தம் எனவும் நான் என்பது தன்மையில் சீடனாக விளங்கிய அறிவெனவும் கொள்க.

தடைகள். – பிரதி பந்தங்கள். இவைகள் அடுத்து வரும் பா...ல்களில் விளக்கப்படுகின்றன. (81)

தடைகளையும் அவற்றை நீக்கும் உபாயங்களையும் கூறல்.

**89. தடைகள்ஏ தெனில் அஞ் ஞானம்**
**சந்தேகம் விபரீ தங்கள்**
**படர்செயும் இந்த மூன்றும்**
**பலசன்மப் பழக்கத் தாலே**

உடனுடன் வரும்வந் தக்கால்
உயர்ஞானம் கெடும்இ வற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல்
சிந்தித்தல் தெளித லாலே.

அத் தடைகள் யாவையென்றால் அஞ்ஞானமும் சந்தேகமும் விபரீதங்களுமாம். துன்பஞ்செய்யும் இம் மூன்று தடைகளும் அனந்த ஜென்மப் பழக்கத்தினால் அடிக்கடி வரும்; அங்ஙனம் வருமாகில் மேலான ஞானம் மறைபடும்; இத் தடைகளைத் திடமாகச் சிரவணத்தினாலும், மனனத்தாலும், நிதித்தியாசனத்தாலும் நீக்குவாய்.

(1) அஞ்ஞானத்தைச் சிரவணத்தாலும்

(2) சந்தேகத்தை மனனத்தினாலும்

(3) விபரீதத்தை நிதித்தியானத்தினாலும் கெடுப்பாயாக என்பதாம். (82)

தடைகள் உளவாயின் அனுபவம் விளங்காது எனத் திருஷ்டாந்த முகத்தால் அறிவித்தல்.

90. அக்கினி கட்டுப் பட்டால்
அற்பமும் சுடமாட் டாது
மக்கின ஞானத் தாலே
வந்தபந் தமும்வே காது
சிக்கெனப் பழகிக் கேட்டல்
சிந்தித்தல் தெளித லாலே
விக்கின மடம்சந் தேகம்
விபரீதம் போக்கு வாயே.

மந்திரத்தினால் நெருப்பானது ஸ்தம்பனமானால் சற்றும் எரிக்கமாட்டாது. அதுபோல அஞ்ஞானம் சந்தேகம் விபரீதங்களால் தடையுண்ட தத்துவ ஞானத்தால் வரப்பட்ட திரிசிய வாசனையும் கெடாது. ஆதலால் இடைவிடாமல் பழக்கம் செய்து சிரவணத்தால்

ஞானத்துக்குத் தடையாகிய அஞ்ஞானத்தையும், மனனத்தினால் சந்தேகத்தையும் சுவானுபவமாய்த் தெளிதலினால் கற்பிதமான திரிசியத்தையும் நீக்குவாய். (83)

அத் தடைகளின் இயல்பு கூறல்.

**91. பிரமபா வனையை மூடிப்**
**பேதம்காட் டுவ(து) அஞ் ஞானம்**
**குரவன்வாக் கியநம் பாமல்**
**குழம்பின மனம்சந் தேகம்**
**திரமறு சகமெய் யென்றும்**
**தேகம்நான் என்றும் உள்ளே**
**விரவிய மோகம் தானே**
**விபரீதம் என்பர் மேலோர்.**

அஞ்ஞானம்; அகம் பிரமம் என்னும் பாவனையை மறைத்து யான் பிரமம் அல்லன் பாவனையை உண்டு பண்ணுவது அஞ்ஞானம். (திருக்கு ஸ்மரணத்தை மறைத்துத் திரிசியத்தைக் காண்பிப்பது அஞ்ஞானமாம்.) ஆசிரியர் உபதேச வாக்கியார்த்தத்தை நம்புதல் செய்யாமல் மனக்கலக்கம் உறுதல் சந்தேகமாம். நிலையில்லாத சகம் சத்தியமெனவும், சரீரம் யான் எனவும், மனத்தின் கண் பொருந்தின மயக்கமே விபரீதம் என்றும் சொல்லுவார்கள். மகான்கள். (84)

அத் தடைகளைக் கெடுக்கும் கேட்டல் முதலியவைகளின் இயல்பு கூறல்.

**92. தத்துவ அனுபோ கந்தான்**
**சாதித்தல் கேட்டல் என்பார்**
**ஒத்துள பொருள்ஊ கத்தால்**
**உசாவல்சிந் தித்தல் என்பார்**
**சித்தம்ஏ காந்த மான**
**தெரிசனம் தெளிதல் என்பார்**

**நித்தம்இப் படிசெய் தக்கால்**
**நிர்வாணம் பெறுவாய் நீயே.**

மகா வாக்கியார்த்தமான பிரமோபதேசத்தைக் குருமுகமாகப் பெறுதலைக் கேட்டல் என்று உரைப்பார்கள். அதன் ஐக்கிய அர்த்தத்தை விசாரித்தலைச் சிந்தித்தல் என்று சொல்லுவார்கள். மனமானது தனிமையான சுவானுபூதியைத் தரிசித்தலைத் தெளிதல் என்று சொல்லுவார்கள். எப்போதும் இவ்வண்ணம் அனுசந்தித்தால் நீ முத்திஸ்யயடைவாய்.

அஞ்ஞானம் முதலிய தடைகளைக் கேட்டல் முதலிய உபாயங் களால் கெடுக்கிற் சுவானுபவம் தடையின்றி விளங்கும்.

1. கேட்டல் – சிரவணம்
2. சிந்தித்தல் – மனனம்
3. தெளிதல் – நித்தியாசனம்.

நிர்வாணம் – மோட்சம்,

அனுசந்தித்தல் – அப்பியாசம் செய்தல். (85)

அக் கேட்டல் முதலியவைகள் வேண்டும் கால அளவு கூறல்.

௯௩. **எத்தனை நாள்ஞா தர்வும்**
**ஞானமும் இருக்கும் உன்பால்**
**அத்தனை நாளும் வேண்டும்**
**அப்பாலோர் செயலும் வேண்டா**
**நித்தமும் வெளிபோல் பற்றா**
**ஞேயமாத் திரமாய்ச் சீவன்**
**முத்தரா னவர்வி தேக**
**முத்திபெற் றிருப்பர் என்றும்.**

எவ்வளவு காலம் காண்பானும் காட்சியும் இருக்குமோ அவ்வளவு காலமும் இக் கேட்டல் முதலிய மூன்றும் வேண்டும். அதற்கு மேல் ஓர் அனுஷ்டானமும் வேண்டுவதில்லை. எப்போதும்

நான்கு பூதத்தினாலும் தாக்கற்று இருக்கின்ற ஆகாயத்தைப் போலத் திரிசியங்களில் பற்றாது நிற்கும் ஆத்ம சொரூபமாய் சீவன் முத்தியையடைந்தவர்கள் எப்போதும் விதேக கைவல்லியத்தை அடைந்திருப்பார்கள்.

காண்பானும் காட்சியும் நீங்கிச் சொரூபம் தானாகிற பரியந்தம் கேட்டல் முதலியவைகளைப் பழகல் வேண்டும்.

ஞாதா – அந்தக்கரணம். (86)

அச் சீவன் முத்தர்கள் தொகையும் நாமமும் சொல்லி அவர்கள் இயல்பு கூறத் தொடங்குதல்.

**94. ஞானமார் சீவன் முத்தர்**
**நால்வகை யாவர் கேளாய்**
**வானிகர் பிரம வித்து**
**வரன்வரி யான்வ ரிட்டன்**
**ஆனவர் நாமம் ஈதாம்**
**அவர்களில் பிரம வித்தன்**
**தானமும் மற்றை மூவர்**
**தாரதம் மியமும் சொல்வேன்.**

ஞானம் நிறைந்த சீவன் முத்தர்கள் நான்கு விதம் ஆவார்கள். அவர்களது பெயர், ஆகாயத்துக்கு ஒப்பான பிரமவித்து, பிரமவரியான், பிரமவரிட்டன் ஆகிய இவையாம். அவர்களுக்குள் பிரமவித்தின் நிலையையும் ஏனைய மூவருடைய தாரதம்மி யத்தையும் சொல்வேன் கேட்பாயாக. (87)

சீவன் முத்தர்களில் பிரமவித்தின் இயல்பு கூறல்.

**95. தீரராய்ப் பிரம வித்தாய்த்**
**தெளிந்தவர் தெளியும் முன்னம்**
**வாரமாய் இருந்த தங்கள்**
**வருணம்ஆச் சிரமம் சொன்ன**

பாரகா ரியம்ஆ னாலும்
பலர்க்(கு) உப கார மாக
நேரதாச் செய்வார் தீர்ந்த
நிலைவிடாச் சீவன் முத்தர்.

தீரமுள்ளவர்களாய்ப் பிரமவித்தாய்த் தெளிந்த ஜீவன் முக்தர்கள் இங்ஙனம் தெளிவதற்கு முன்பு உரிமையாய் இருந்த தங்களுடைய வர்ணாச்சிரமங்களைக் குறித்துக் கன்ம நூலாற் சொல்லப்பட்டவைகள் வருத்தமான கருமங்கள் ஆயினும் யாவர்க்கும் அனுகூலமாகக் கிரமமாக அவற்றைச் செய்வார்கள்; முடிவான நிச்சயத்தை விட்டு நீங்கார்கள்.

பிரமவித்து லோகோபகார நிமித்தம் சற்கருமத்தை அனுஷ்டிப்பான் என்பதாம். இவர்கள் பெரும்பாலும் இல்லற ஞானிகளாய் இருப்பர். (88)

இதுவுமது

96. காமமா திகள்வந்தாலும்
கணத்திற்போம் மனத்திற் பற்றார்
தாமரை யிலைத்தண்ணீர்போல
சகத்தொடும் கூடி வாழ்வார்
பாமரர் எனக்காண் பிப்பார்
பண்டிதத் திறமை காட்டார்
ஊமரும் ஆவார் உள்ளத்(து)
உவகையாம் சீவன் முத்தர்.

காமம் முதலியவைகள் ஒரு போது நேரிட்டாலும் அநிச்சா பிராரத்தமாகக் கணத்தில் நீங்கும். மனதில் வையார்கள், தாமரையிலைத் தண்ணீர் போல உலகத்தாருடன் சேர்ந்து வாழ்வார்கள். அஞ்ஞானிகளைப் போலக் காட்டுவார்கள். வித்துவத் திறத்தைக் காண்பியார்கள், உள்ளத்தின்கண் நித்திய ஆனந்தத்தை யுடைய பிரமவித்தானவர்கள் மௌனமாயும் இருப்பார்கள்.

காமமாதிகள் வந்தாலும் என்ற உம்மை அவைகள் வாரா என்பதை உணர்த்தியதாம்.

பிரமவித்தின் அனுபவ விலாசத்தைக் கூறினதாம். (89)

இதுவுமது.

97. பேதகன் மத்தால் வந்த
பிராரத்த நாநா வாகும்
ஆதலால் விவகா ரங்கள்
அவரவர்க்(கு) ஆன வாகும்
மாதவம் செயினும் செய்வர்
வாணிபம் செயினும் செய்வர்
பூதலம் புரப்பர் ஐயம்
புகுந்துண்பர் சிவன் முத்தர்.

அறிவின்மையான சஞ்சித கன்மத்தால் உண்டான பிராரத்த கன்மம் பலவிதமாம். ஆதலினால் விருத்திகள் அவரவர்களுக்கு நியமித்தவையாம்; பிரமவித்தானவர்கள் மகாதவத்தைச் செய்தாலும் செய்வார்கள். வியாபாரம் செய்தாலும் செய்வார்கள். பூமி பாலனம் செய்தாலும் செய்வார்கள். பிச்சை வாங்கிப் புசித்தாலும் புசிப்பார்கள்.

பிரமவித்து எத்தொழிலைச் செய்யினும் அவைகள் பிராரத்த கன்மமே அன்றி அவர்க்கிலை என்பதாம். (90)

இதுவுமது.

98. சென்றது கருதார் நாளைச்
சேர்வது நினையார் கண்முன்
நின்றது புசிப்பார் வெய்யில்
நிலவாய்விண் விழுது வீழ்ந்தும்
பொன்றின சவம்வாழ்ந் தாலும்
புதுமையாய் ஒன்றும் பாரார்

நறைத்(து) என்னார் சாட்சி
நடுவான சீவன் முத்தர்.

முன். நீங்கினவைகளை நினைத்து வாடார்கள். எதிர் காலத்து வரும் பொருளை நினைத்து மகிழார்கள்; நிகழ்காலத்துள்ள பொருளைப் பிராரர்த்தமென்று அனுபவிப்பார்கள். உஷ்ண கிரணமானது அமிர்த கிரணமாய் ஆகாயத்தினின்று விழுதாக இறங்கினாலும் மரித்த பிரேதம் சீவித்தாலும் அதிசயமாக ஒன்றையும் காணார்கள்; இது நன்றென்றும் தீதென்றும் சொல்லார்கள். சாட்சியாய் மத்திய கதமாய் விளங்கிய பிரமவித்துக்கள்.

பிரமவித்து மனம் அடங்கிய அனுபவமாய் நிற்றலின் ஒன்றைக் கருதுதலும் வியப்புறுதலும் இலன் என்பதாம். இந் நான்கு செய்யுளில் முந்தின பிரமவித்தின் இயல்பைக் கூறியதெனக் கொள்க.

**ஊழ்வகை**

1. பிராரத்தம் – பழவினை
2. சஞ்சிதம் – அனுபவித்தது போக எஞ்சியுள்ள கர்மம்
3. ஆகாமியம் – இப் பிறப்பிற் செய்யும் புண்ணிய பாவங்கள். (91)

மற்ற மூவர் இயல்பு கூறல்.

**99. பின்னைமூ வரில்இ ரண்டு**
**பேர்களும் சமாதி யோகம்**
**தன்னையுற் றிருப்பார் தேக**
**சஞ்சார நிமித்தம் தானாய்**
**உன்னுவோன் வரன்வேற் றோரால்**
**உணர்பவன் வரியா னாகும்**
**அன்னியர் தம்மால் தன்னால்**
**அறியாதோன் வரிட்டன் ஆமே.**

மற்ற மூன்று பேர்களில் பிரமவரன், பிரமவரியான் என்னும் இரண்டு சீவன் முத்தர்களும் சமாதி ஞானத்தை அடைந்திருப்பார்கள்;

தேகம் சஞ்சரிக்கும் பொருட்டுத் தானாய் உணவு முதலியவற்றை நினைப்பவன் பிரமவரனாம். அன்னியராகிய சீடர் முதலியோரால் உணவு முதலியவைகளைக் கொள்ள அறிபவன் பிரமவரியானாம். பிறராலும் தன்னாலும் அவ்வுணவு முதலியவைகளைக் கொள்ள அறியாதவன் பிரமவரிட்டனாம்.

பிரமவரிட்டன் சமாதியில் அதீதமானவன் எனக் கொள்க.

பின்னுள்ள பிரமவரன் பிரமவரியன் பிரமவரிட்டன் இவர்கள் இயல்பைக் கூறினதாம். (92)

இந் நால்வர் பயன்களைக் கூறல்.

**100. அரிதாகும் இவர்கள் இவ்வா(று)**
**அநேகரா னாலும் முத்தி**
**சரியாகும் பாடு பட்ட**
**சமாதிக்குப் பலனே(து) என்றால்**
**பெரிதான திட்ட துக்கம்**
**பிரமவித் தனுப விப்பன்**
**வரியானும் வரனும் மற்றை**
**வரிட்டனும் சுகமாய் வாழ்வார்.**

திரிலோகத்திலும் கிடைத்தற்கரிய இச் சீவன் முக்தர்கள் இவ்வண்ணம் அனந்தரானாலும் அவரடைந்த ஞானத்தில் தாரதம்மியம் இன்மையால் வீடு ஒரு தன்மைத்தாம். வருத்த முற்றுச் செய்த நிஷ்டைக்குப் பிரயோசனம் யாதெனில் பிரமவரியனும், பிரமவரனும், பிரமவரிட்டனும் நிரதிசய ஆனந்தமாக வாழ்வார்கள். ஏனைய அச் சமாதியில் ஈடுபடாத பிரம வித்தானவன் பிராரத்த வசத்தால் நேரிடும் பெருந் துன்பங்களை அனுபவிப்பான்.

இச் சீவன் முத்தர்கள் பிராரத்தத்தினால் வரும் சுகதுக்க அனுபவத்தில் தாரதம்மியராயினும் பிரமானந்த கைவல்யப் பேற்றில் அஃதிலர் என்பதாம். (93)

பெத்த முத்தர்களின் இயல்பு கூறல்.

101\. பிரமஞா னிகளும் கன்மப்
　　பேதையர் போல வாழ்ந்தால்
திரமுறும் அஞ்ஞா னம்போய்ச்
　　செனியாத வழியே தென்னின்
பரவும்ஆ காயம் ஒன்றில்
　　பற்றாது மற்றை நாலும்
விரவின தோடுங் கூடும்
　　விதம்இரு வோரும் ஆவார்.

சொரூப ஞானிகளும் கன்மிகளான அஞ்ஞானிகளைப் போலச் சீவித்திருந்தால், நிலையாகத் தோற்றிய அறியாமை நசித்து இனிப் பிறவாத மார்க்கம் யாதெனில் வியாபித்திருக்கும் ககனமானது ஒன்றிலும் தோயாது நிற்க, மற்றை நான்கு பூதங்களும் ஒன்றுடன் ஒன்று கலக்கும். இவ்விதமான ஞானி அஞ்ஞானிகள் இருவரும் ஆகுவர்.

ஞானி அஞ்ஞானிகளின் கிரியை ஒன்றாயினும் கருத்து வேறு என்பதாம். (94)

சீவன் முத்தர்களின் தரிசன மகிமை சொல்லி அவர்கள் விதேக முத்தரான வழி சொல்லத் தொடங்குதல்.

102\. சீவன்முத் தரைச்சே வித்தோர்
　　சிவன்அயன் நெடுமால் ஆன
மூவரும் மகிழ நோன்பு
　　முழுவதும் செய்து சன்ம
பாவன மானார் ஒன்று
　　பலமுறை முழங்கும் இப்பால்
மேவரும் சீவன் முத்தர்
　　விதேகமுத் தியும்நீ கேளாய்.

சீவன் முத்தர்களைத் தரிசித்தவர்கள் சிவனும் பிரமனும் திருமாலும் ஆகிய மும்மூர்த்திகளும் மிக மகிழத் தவங்கள் அனைத்தும் முடித்துப் பவம் பரிசுத்தமானார்கள் என்று அனந்த

வேதங்கள் முறையிடுகின்றன. இனி அறிதற்கரிய சீவன் முக்தர்கள் அடையும் விதேக முத்திப் பலத்தையும் நீ கேட்பாயாக.

சன்ம பாவனம் ஆனாரென்பது ஞான தனுவாயினாரெனக் கொள்க. (95)

கன்மத்திரய ஒழிபு கூறல்.

**103. பஞ்சினை ஊழித் தீப்போல்**
**பலசன்ம விவித வித்தாம்**
**சஞ்சிதம் எல்லாம் ஞானத்**
**தழல்சுட்டு வெண்ணீ றாக்கும்**
**கிஞ்சில்ஆ காமி யந்தான்**
**கிட்டாமல் விட்டுப் போகும்**
**விஞ்சின பிராரத் தத்தின்**
**வினையனு பவித்துத் தீரும்.**

பஞ்சை வடவைத் தீ எரிப்பதுபோல அனந்தபவங்கள் உண்டாவதற்குப் பலவித விதைகளான சஞ்சித கன்மங்கள் அனைத்தையும் ஞானாக்கினியானது எரித்து வெண்மையாகிய சாம்பலாக்கும். ஆகாமியகன்மமானது அற்பமும் நெருங்காமல் நீங்கும். சேடித்த பிராரத்த கன்மமானது மூன்று விதமாக அனுபவித்து நீங்கும்.

சஞ்சிதம் – சென்ற செனனங்களிற் செய்யப்பட்டுப் பலன் அனுபவிக்காமல் நின்ற கருமம்.

பிராரத்தம்–சென்ற சனனங்களிற் செய்யப்பட்டு வர்த்தமான சனனத்திற்கு ஏதுவாகிய கருமம்.

ஆகாமியம்–வர்த்தமான சனனத்திற் செய்யப்பட்டு மறுசனனத்துக்கு ஏதுவான கர்மம். (வர்த்தமானம் – நிகழ்காலம்)

மூவிதமான இச்சை அனிச்சை பரவிச்சை என்பனவாம். (96)

இருவினை நீங்கும் வகை கூறல்.

104. பொறுமையால் பிராரத் தத்தைப்
புசிக்குநாள் செய்த கன்மம்
மறுமையில் தொடர்ந்தி டாமல்
மாண்டுபோம் வழிஏ தென்னின்
சிறியவர் இகழ்ந்து ஞானி
செய்தபா வத்தைக் கொள்வர்
அறிபவர் அறிந்து பூசித்(து)
அறமெலாம் பறித்துண் பாரே.

சாந்தத்தினால் பிராரத்த கன்மத்தை அனுபவிக்கும் காலத்தில் சீவன் முத்தர்கள் செய்யுங் கர்மங்கள் மேற் பிறவியைக் கொடுப்பதற்குத் தொடர்ந்துவராமல் நசிக்கும் மார்க்கம் யாதென்றால், மூடர்கள் நிந்தித்து ஞானவான் செய்யும் பாவகன்மத்தைப் பெற்று கொள்வார்கள். விவேகிகள் சிவ சொரூபம் என்று அறிந்து ஆராதித்து அவர்கள் செய்யும் தருமங்கள் அனைத்தையும் கவர்ந்து அனுபவிப்பார்கள்.

**விளக்கம்:** ''ஞானியின் புத்திரர்கள் தாயத்தை அடைகின்றனர்; மித்திரர்கள் புண்ணியத்தை அடைகின்றனர்; சத்துருக்கள் பாவத்தை அடைகின்றனர்'' என்பது சுருதி, தாயம் – பிராசீனமான சொத்து, (பாட்டன் வழிச்சொத்து) (97)

சரீரத் திரய ஒழிவு கூறல்.

105. அரியமெய்ஞ் ஞானத் தீயால்
அவித்தையாம் உடன்நீ றாமே
பெரியதூ லமுங்கா லத்தால்
பிணமாகி விழும் அந் நேரம்
உரியசூக் குமச ரீரம்
உலையிரும்(பு) உண்ட நீர்போல்
துரியமாய் விபுவாய் நின்ற
சொரூபத்தில் இறந்து போமே.

அறிதற்கரிய ஞானாக்கினியினால் காரணசரீரம் நசிக்கும்; பருத்த தூலசரீரமும் காலநியமப்படி பிரேதமாம். அப்போது சாதனத்துக்கு உரித்தான சூக்கும தேகமானது கொல்லன் உலையிற் காய்ந்த அயமானது கிரகித்த சலத்தைப் போலத் துரியமாகவும் வியாபகமாகவும் இருந்த பிரம சொரூபத்தில் நசிக்கும்.

சஞ்சித வினையும் காரண சரீரமும் பரஞானத்தினால் கெடுதலும், ஆகாமிய வினையும் சூக்கும தேகமும் அந்த ஞானத்தில் லயமாகுதலும் நீங்குதலும் ஆம் என்பதாம். (98)

விதேக முத்தியின் இயல்பு.

**106. கடமெனும் உபாதி போனால்**
**ககனம்ஒன் றானாற் போல**
**உடலெனும் உபாதிபோன**
**உத்தரம் சீவன் முக்தர்**
**அடிமுடி நடுவும் இன்றி**
**அகம்புறம் இன்றி நின்ற**
**படிதிகழ் விதேக முத்திப்**
**பதமடைந் திருப்பர் என்றும்.**

குடம் என்கிற உபாதி நீங்கினால் கடாகாய முதலிய நான்கும் ஏகமானது போல, மூன்று தேகம் என்கிற உபாதி நீங்கின க்ஷணம் சீவன் முத்தரானவர் ஆதி மத்தியாந்த ரகிதமாய் உட்புறம் இன்றி எப்போதும் இருந்த வண்ணம் விளங்குகின்ற விதேகமுத்திப் பதத்தைப் பெற்றிருப்பார்.

கடோபாதி நீங்கிய விடத்துக் கடாகாசம் மகா ஆகாசத்தோடு ஏகமாவது போலச் சரீரத்திரய உபாதி நீங்கிய விடத்துச் சீவன் முத்தர் பிரம்மத்தோடு ஏகமாய் அஃதாவது பிரம்ம மாத்திரமாகவே விளங்குகின்றனர். அப்போது அவர் விதேகமுத்தர் எனப்படுகின்றனர்.

விதேகம் – தேகமின்மை, உபாதி – வேதனை. (99)

இவ் அனுபவம் எஞ்ஞான்றும் விளங்குவது எனல்.

107. சொல்லிய மகனே எங்கும்
சூழ்வெளி யிருக்க மண்ணைக்
கல்லிய பின்பு தோன்றும்
கிணற்றின்ஆ காயம் போல
ஒல்லையாம் பிரம நூலால்
உற்றது போலே தோன்றும்
எல்லையின் ஆம்எப் போதும்
ஏகம்என்(று) இருந்தி டாயே.

முன் அனுபவம் சொன்ன புத்திரா! எவ்விடத்தும் சூழ்ந்த ஆகாயம் இருக்கப் பூமியை அகழ்ந்த பின்பு உண்டானது போலத் தோற்றுகின்ற கூப ஆகாசம் போல, அநாதியாய் விளங்குகின்ற பிரம சொரூபமானது ஆத்ம ஞான சாஸ்திரங்களால் உதித்தது போலத் தோன்றும்; பிரமாண அதீதமான, சுத்த சைதன்ய சொரூபமான யாம் எக்காலமும் ஒன்றே என்றிருப்பாய்.

இப்போது உதித்தது போலத் தோற்றிய அனுபவம் சிருஷ்டிக்கு முன்னும் பின்னும் நடுவுமான எப்போதும் இருந்து நித்திய திருத்தியாக விளங்கிய சச்சிதானந்தமேயன்றி இப்போது உதித்தது அன்றென்பதாம். சச்சிதானந்தம் – சத்து+சித்து+ஆனந்தம். (100)

சத்து அசத்து இவைகளின் உண்மையைத் தெரிவித்தல்.

108. கானல்நீர் கிளிஞ்சல் வெள்ளி
கந்தர்ப்ப நகர்க னாவூர்
வானமை கயிற்றில் பாம்பு
மலடிசேய் முயலின் கோடு
பீனமாம் தறிபு மானிப்
பிரபஞ்சம் எல்லாம் பொய்யே
ஞானமெய் மகனே உன்னை
நம் ஆணை மறந்தி டாதே.

கானற் சலம் போலவும், சுத்திகா ரசிதம் போலவும் கந்தர்ப்ப நகரம் போலவும், சொப்பன நகரம் போலவும், ஆகாய நீலம் போலவும், ரச்சு

சர்ப்பம் போலவும், வந்தியா புத்திரன் போலவும், சச விஷாணம் போலவும், பருத்த கட்டை சோரனைப் போலவும் பிரமத்தில் கற்பிதமாகத் தோற்றுகின்ற இச் சகத்து அனைத்தும் மித்தையேயாம், சுத்த சைதன்னியம் ஒன்றே உண்மையாம். மாணாக்கனே! இங்ஙனம் விளங்கிய உனது சொரூப சைதன்னியத்தை நமதாக்கினைப் படிக்கு மறவாமல் அதுவாய் விளங்குவாய்.

எப்போதும் சத்தான சுகபோதம் இருக்கின்றதே அன்றே திரிசியங்கள் இல என்பதாம்.

புமான் – ஆண்மகன்; ஆன்மா
பீனம் – பருமை

**விளக்கம்:** புத்திரசிகாமணியே! பிரபஞ்சம் அதன் உபாதான காரணமான அஞ்ஞானமாகிய அனைத்தும் கானல்நீர், கிளிஞ்சல் வெள்ளி, கந்தர்ப்ப நகரம், சொப்பன உலகம், ஆகாய நீலம், கயிற்றரவு, மலடிமகன், முயற்கோடு, ஸ்தாணுபுருஷன் என்பவற்றைப் போன்று மித்தையாம். பிரஞ்ஞானகனப் பிரம்மமே சத்தியமாம். (நீ பிரஞ்ஞானகனப் பிரம்ம வடிவமாய் இருத்தலின் உன்னிடத்துச் சகத்தும் அதன் உபாதான காரணமான அவித்தையும் மித்தையாய் இருக்கின்றன. அவ்வாறிருக்கும்) உன்னை நமது ஆணைப்படி மறவாதிருக்கக் கடவாய்.

| | | |
|---|---|---|
| குடம் செய்ய | – | |
| மண் உபாதானம் | – | முதற்காரணம் |
| தண்டு, சக்கரங்கள் | – | துணைக்காரணம் |
| குயவன் | – | நிமித்த காரணம் |
| சச விஷாணம் | – | முயற்கோடு |
| ஸ்தாணு புருஷன் | – | பருத்த கட்டை சோரன் |
| சுத்திகா ரசிதம் | – | கிளிஞ்சல் – வெள்ளி |
| புமான் | – | புருஷன் |
| ரச்சு சர்ப்பம் | – | கயிற்றரவு |
| வந்தியா புத்திரன் | – | மலடிமகன் |

(101)

தத்துவ விளக்கப்படலம் முற்றிற்று.

## இரண்டாவது

# சந்தேகம் தெளிதற் படலம்

முன் படலத்தில் தத்துவமாகிய ஆனந்த பிரக்ஞையை நிஷ்டா பிரக்ஞையால் விளக்கி, இனிச் சொரூப பிரக்ஞையினால் முன் கற்பனையாகத் தோற்றிய சீவேஸ்வர சகம் சிற்சுகாகாரமாக விளங்குவதை விளக்கும் பொருட்டுச் சந்தேகம் தெளிதலைக் கூறுகின்றார்.

தத்துவம் – உண்மை நிலை
நிஷ்டை – தியானம்
பிரக்ஞை – அறிவு

109. நரர்குழி பறித்து மெள்ள
நாட்டிய நெடிய கம்பம்
உரமுறக் குத்திக் குத்தி
உரப்பிக்கும் உபாயம் போலப்
பரமமாம் சொரூபந் தன்னில்
பற்றிய மனோவி ருத்தி
திரநிலை பெறச்சந் தேகம்
தெளிதலை மொழிகின் றேனே.

மானிடர்கள் பள்ளங் கல்லி மெள்ள எடுத்து நட்ட நீண்ட ஸ்தம்பமானது அசைவின்றி ஸ்திரமாக நிற்கும் பொருட்டுக் குத்திப்

பலப்படுத்துகின்ற யுக்தியைப் போலப் பிரம சொரூபத்தில் பொருந்திய சித்த விருத்தியானது ஸ்திர நிலையை அமையும் பொருட்டுச் சந்தேகம் தெளிதலைச் சொல்லுகின்றேன்.

இத் திட்டாந்தம் தூணா கனன நியாயமெனக் கொள்க தூணா – கம்பம்; கனனம் – புதைத்தல்; நியாயம் – திருஷ்டாந்தம்.

தான் அல்லாத விஷயங்களை நீக்கித் தானாகிய பிரமத்திற் கலந்த மனம் அப் பிரம வியாபகமான பூரண விருத்தியில் சஞ்சரிக்கும் இடத்தில் சர்வம் பிரமமயம் என்னும் சாட்சாத் கார அனுபவம் தடையின்றி விளங்குவதே விவகரித்தும் விவகரியாத நிலையாதலின் அதற்குத் தடையாய் உள்ளவைகளைக் களைதல் வேண்டும் என்பார் ''சொரூபந் தன்னிற் பற்றிய மனோவிருத்தித் திரநிலைபெறச் சந்தேகந் தெளிதல்'' என்றார்.

சித்தினிடத்து உதயமாய்ப் பகிர்முகம் இன்றி அச் சித்தில் கரைந்த மனமானது சென்ற இடமெல்லாம் சிதானந்தமாக ரமிக்கும் பொருட்டுச் சந்தேகம் தெளிதலைக் கூறத் தொடங்கினதாம்.

சித்து – அறிவு (1)

குருகுலவாசம் செய்யும் தன்மையைக் கூறல்.

**110. நற்கருத்(து) உடையோ னாகி**
**ஞானவா னாகி நின்றோன்**
**மர்க்கட நியாயம் போல**
**மகாபூத விகாரம் தொட்டு**
**நிர்க்குண விதேக முத்தி**
**நிலைபரி யந்தம் சொன்ன**
**சற்குரு வினைவி டாமல்**
**சந்ததம் அனுச ரித்தான்.**

பேரானந்தமான சிந்தையையுடையவனாய் சைதன்னிய சொரூபமாகி இருந்த சீடனானவன் மர்க்கட நியாயத்தைப் போலப்

பஞ்ச பூத காரியமான தூலதேக முதல் திரிகுண ரகிதமான விதேக கைவல்ய மட்டும் அருளிய ஆசாரியரை விட்டு நீங்காமல் சதாகாலமும் தொடர்ந்து நின்றான்.

மர்க்கடநியாயம் – குரங்கின் குட்டி தன் தாய்க் குரங்கு எங்கே தாவினும், தான் அதனை விடாது பற்றி நிற்றல், மார்ச்சால நியாயம் – தாய்ப்பூனை தன்குட்டிகள் கிடக்கும் இடம் தேடிக் காப்பாற்றுதல். வேறு இடத்திற்கு செல்ல வேண்டுமானால் தன் வாயிற் கௌவி எடுத்துக் கொண்டு போகும். (2)

ஆசிரியர் சீடனை அனுபவம் வினாதல்.

**111. சந்ததம் புருடன் தன்னைச்**
**சாயைபோல் விடாமல் அன்பாய்**
**மைந்தனை நோக்கிச் சாட்சி**
**மாத்திர மாய்நின் றாயோ**
**சிந்தையில் ஐயம் எல்லாம்**
**தீர்ந்தவோ தெளிவின் உள்ளே**
**அந்தரங் கலந்த துண்டோ**
**அனுபவம் உரைசெய் வாயே.**

எப்பொழுதும் ஒரு புருடனை விட்டு நீங்காத சாயை போல ஆசாரியரை விட்டு நீங்காமல் அன்புருவமாய் நிற்கின்ற சீடனை அருட்கண் சாத்திப் பிரத்யேகாத்ம சொரூபமாக நிற்கின்றாயா? மனத்தின்கண் உள்ள சமுசயங்கள் அனைத்தும் நீங்கினவோ? தெளிவின்கண் சீவ ஈஸ்வர சகத்பேதம் சேர்ந்ததும் உளதோ? உனது அனுபவத்தைச் சொல்வாய். சமுசயம் – ஐயம்.

பேதமின்றித் தெளிவாகச் சுவானுபவமாய் விளங்குகின்றாயா? என மூவகையாக வினாவினதாம் (3)

முன் வினா மூன்றற்கும் விடை கூறல்.

**112. எனவுரைத்(து) அருளும் ஆசான்**
**இருபதம் வணங்கி எந்தாய்**

சனனவன் காட்டின் மோகத்
தமத்தெழு பேதப் பேய்கள்
உனதருள் உதய வெற்பில்
உபதேச அருக்கன் தோன்றி
மன்விழி தெரிய ஞான
வான்கதிர் பரந்தால் உண்டோ.

என்று கேட்டருளிய தேசிகருடைய உபய பாதங்களைப் பணிந்து, என்னுடைய பிதாவே! வலிமையாகிய சனன ஆரண்யத்திலிருக்கும் அஞ்ஞானமாகிய இருளில் தோன்றுகின்ற பேதங்கள் என்னும் பிசாசங்கள், தேவரீரது கருணை என்னும் உதயகிரியில், பிரமோ பதேசம் என்னும் சூரியன் உதித்து, அகக்கண் விளங்க மேலான சிற்பிரகாசமானது வியாபித்தால் இருக்குமோ?

சாட்சி மாத்திரமாய் விளங்குகின்றது என்பார் ''உபதேச அருக்கன் தோன்றி'' எனவும் சிந்தையில் ஐயம் எல்லாம் தீர்ந்தது என்பார். ''மனவிழி தெரிய'' எனவும், அந்தரமான பேதம் உதிக்கவில்லை என்பார், ''ஞானவான் கதிர் பரந்தால் உண்டோ'' எனவும் கூறினார்.

தனது அனுபவத்தில் சந்தேக விபரீதம் இன்றென்பதை அறிவித்ததாம். (4)

சமாதியில் தடை இன்றாயினும் சகசத்தில் அவையின்றி நிற்பதற்கு வினாவ வேண்டுவது உண்டெனல்.

113. மந்திர மூர்த்தி தன்னால்
மாற்றிய பேய்போ னாலும்
எந்திரம் எழுதிக் கட்டி
இனிவரா வகைசெய் வார்போல்
முந்தியுன் உபதே சத்தால்
மோகம்போ னாலும் ஐயா
புந்திநின் றுரைக்க இன்னம்
புகலும்விண் ணப்பம் உண்டே.

எனது ஆசிரியரே! மாந்திரிகனால் நீக்கப்பட்ட பிசாசமானது நீங்கினாலும், எந்திர ஸ்தாபனம் செய்து மேல்வராத வண்ணம் செய்பவர்களைப் போல, முன்னமே தேவரீர் அனுக்கிரகத்தினால் மயக்கம் நீங்கினாலும் அறிவு நிலைபெறும் பொருட்டு மேலும் அடியேன் கேட்கும் விண்ணப்பம் உளது.

சகசத்துக்குத் தடையாய் உள்ள சந்தேகங்களை நீக்கும் பொருட்டு வினாவத் தொடங்கினதாம், சகசம் – இயற்கையானது. சமாதி – மனத்தைப் பரம் பொருளோடு ஐக்கியப் படுத்தி நிறுத்துதல். (5)

சீடன் தனக்கு அனுபவமான பிரமவஸ்து மனோவாக்குகளுக்கு அகோசரமா? கோசரமா? என அறியும் நிமித்தமும் அங்ஙனம் கூறும் சுருதி வாக்கியத்தை இரண்டு சங்கையாக வினாதல். கோசரம் – பொறியுணர்வு. சங்கை – ஐயம்.

**114. ஆகமப் பிரமா ணத்தால்**
**அறிஎன்றும் வாக்குக்(கு) எட்டா**
**தேகமாம் பிரமம் என்றும்**
**இதயத்தால் உணர்வாய் என்றும்**
**சோகமாம் மனத்திற்(கு) எட்டாச்**
**சுயஞ்சோதி என்றும் சொன்னீர்**
**மோகமாம் இரண்டு சங்கை**
**முளைத்தன பறித்தி டீரே.**

அத்துவிதப் பிரமத்தை வேதமுடிவான மகாவாக்கியப் பிரமாணத்தினால் அறிவாய் எனவும் இவ்வேத வாக்கியத்துக்கு எட்ட மாட்டாது எனவும், இச்சுயம் பிரகாசத்தை மனதினால் அறிவாய் எனவும் துன்பமான மனதிற்கு அறிதற்கு அரியது எனவும் அருளினீர், மயக்கமாகி இரண்டு சங்கைகள் உளவாயின, அவைகளைக் களைந்திடீர்.

பிரமவஸ்து மனோவாக்குகளுக்கு அகோசரமும் கோசரமுமாம் என் வேதம் கூறுவதை ஆசிரியர் கூறினதாக் கொண்டு வினாவினது என்க.

ஆசங்கை –ஐயம்.

ஆகமம் – முதல்வன் வாக்கு; தரும நூல். (6)

முதற் சங்கையில் பிரமம் சுருதிக்கு அகோசரமாம் என்றதற்கு உத்தரங் கூறல்.

**115. மற்றைமுப் பிரமா ணத்தால்**
**வஸ்துநிர் ணயங்கூ டாதே**
**உற்றதோர் விடயம் பூதம்**
**உபயமன்(று) ஆத லாலே**
**குற்றமாம் குணவி சேடம்**
**கூடாமல் இருக்கை யாலே**
**இற்றது வாக்குக்(கு) எட்டாது**
**என்பதும் அறிவாய் நீயே**

பரப்பிரமமானது பஞ்சேந்திரியங்களுக்கு விஷயமான சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகிய ஐந்தும், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்ச பூதங்களும் உபமான உபமேயங்களாகிய இரண்டும் அன்று ஆகலான் பிரத்யட்சம் அனுமானம், உபமானம் என்னும் மூன்று பிரமாணங்களாலும் பிரம சொரூப நிச்சயம் செய்தல் கூடாது. இத் தன்மைத்தான பரப்பிரமம் குற்றமுள்ள குணவிசேஷங் களைப் பொருந்தாமல் இருத்தலாலே சத்த ரூபமாகிய வேதத்துக்கு எட்டாது என்று நீ அறியக் கடவாய்.

பிரமம் அகோசரம் என்பதை உறுதிப் படுத்தும் நிமித்தம் ஆகமம் முதலிய நான்கு பிரமாணங்களினாலும் அறியக் கூடாதது என அறிவித்ததாம். சுருதி–எழுதாமறை, (7)

அச் சங்கையில் பிரமம் சுருதிக்குக் கோசரமாம் என்பதற்கு உத்தரம்,

**116. வாக்கியம் தனக்(கு) எட்டாத**
**வஸ்துஎன்(று) உரைத்த வேதம்**

**வாக்கிய விருத்தி யால்அவ்**
**வஸ்துவைக் காட்டிற்(று) அன்றோ**
**வாக்கியங் களிலே மானம்**
**ஆவதே(து) என்றா யாகில்**
**வாக்கியம் இரண்டும் மெய்யெ**
**மறைகள்பொய் யாநீ கேளாய்.**

வாக்குக்கு எட்டாத பொருள் என்று சொன்ன வேதமானது மகாவாக்கிய விசாரத்தால் அப் பிரமப் பொருளைக் காட்டியது; இவ்விரண்டு வாக்கியங்களில் பிரமாணமாவது யாது? என்று கேட்பாயாகில், இவ் இரண்டு வாக்கியமும் உண்மையே! வேதங்கள் அசத்தியம் உரையா; ஆகையால் அதை நீ கேட்பாய். **அன்றோ** என்பது அசை. (8)

பிரமம் சுருதி வாக்கியங்களுக்கு அகோசரமும் கோசரமும் ஆமெனக் கூறுதல். (கோசரம்–பொறியுணர்வு).

117. **தன்பதி யல்லாப் பேர்கள்**
**தமையல்லன் அல்லன் என்றாள்**
**அன்பனைக் கேட்ட நேரம்**
**அவள்வெட்கி மௌனம் ஆனாள்**
**என்பது போல நீக்கி**
**இதன்றிதன்(று) எனச்சே டித்த**
**பின்பரப் பிரமந் தன்னைப்**
**பேசாமல் பேசும் வேதம்.**

தன் நாயகன் அல்லாதவர்களை இவன் அல்லன் இவன் அல்லன் எனக் கூறின தலைவி, நாயகனைக் காட்டிக் கேட்டபோது அத் தலைவியானவள் வெட்கமுற்றுப் பேசாதிருந்தாள் என்பது போல, இது அன்று இது அன்று என்று தள்ளிப் பின்பு சேஷித்து நின்ற பரப்பிரம்ம வஸ்துவை வேதமானது சொல்லாமற் சொல்லும்.

சுருதி சப்த ரூபத்தால் அறிவிக்காமல் அருத்த ரூபத்தால் அறிவிக்கும் என்பதாம் – சேஷித்து நின்ற – எஞ்சி நின்ற. (9)

இரண்டாம் சங்கையில் பிரமம் மனத்திற்கு எட்டும் எட்டாது என்பதற்கு உத்தரம் கூறுவான் தொடங்கி மனோ உற்பத்தியின் காரணம் கூறுகின்றார். சங்கை – ஐயம், சந்தேகம்.

**118. முந்திய சங்கை தீர**
**மொழிந்ததை அறிந்து கொள்வாய்**
**பிந்திய சங்கை தீரப்**
**பேசும்உத் தரம்நீ கேளாய்**
**இந்தியங் களுக்(கு)இ ராசன்**
**இதயமாம் அதின்எண் ணங்கள்**
**புத்தியும் மனமும் என்றே**
**புறத்தகத்(து) உலாவி ஆடும்.**

முதற்சங்கை தீரும்படி சொன்னதைத் தெரிந்துகொள்வாயாக; இரண்டாம் சங்கை தீரும்படி சொல்லும் உத்தரத்தையும் நீ கேட்பாய்; மனம் முதலிய இந்திரியங்களுக்குத் தலைவன் ஞானமாம்; அதின் நினைவுகள் புத்தி எனவும் மனம் எனவும் புறம்பிலும் உள்ளிலும் சஞ்சரிக்கும்.

ஞானஸ்மரணமே மனமும் புத்தியுமாம்.

**விளக்கம்:** ஜாக்கிர அவஸ்தையில் நகம் நுனி முதல் சிகை வரையிலும் சரீரத்தில் வியாபித்து கர்த்தா வடிவமாய் இருப்பது புத்தியாம்.

தேகத்தில் யான் என்பதையும் வீடு முதலியவற்றில் எனது என்பதையும் செய்து கொண்டு இந்திரிய வாயிலாக வெளியே செல்வதாய்க் கரண வடிவமாய் இருப்பது மனமாம். (10)

அந்தக் கரணத்தின் பரிணாமமாகிய புத்திமனம் என்னும் விருத்தி இரண்டனுள் புத்தி ஞானத்திற்கு ஆசிரிய கர்த்தாவாம்; மனம் அதற்குக் காரணமாம்.

இதுவுமது

119. உன்முகம் போற்கண் ணாடிக்(கு)
உள்ளொரு முகம்கண் டாற்போல்
சின்மய வடிவில் சாயை
சித்துப்போற் புத்தி தோன்றும்
நின்மல விருத்தி யந்த
நிழல்வழி யாய்உ லாவும்
தன்மநன் மகளே இத்தைத்
தானன்றோ ஞானம் என்பார்.

தர்மவடிவாகிய சற்புத்திரா! உன்னுடைய முகம் போல எதிரிட்ட கண்ணாடிக்குள்ளே ஒரு முகங்கண்டது போலச் சைதன்னிய சொரூபச் சாயையே அறிவைப் போலப் புத்தியில் பிரதிபலிக்கும். நின்மல விருத்தியானது அச்சாயையின் மார்க்கமாகச் சஞ்சரிக்கும். இவ் விருத்தியை அன்றோ அறிவென்று சத்துக்கள் சொல்லுவார்கள்.

விருத்தி ஞானமும் சிதாபாசனும் இத்தன்மையவெனக் கூறினதாம். (11)

இதுவுமது

120. உருக்கிய தராநீர் நானா
உருவங்கள் ஆனாற் போல
விருத்திகள் கடப டாதி
விடயமாய்ப் பரிண மிக்கும்
அரும்பல விடயம் எல்லால்
ஆபாசன் தோற்று விக்கும்
இருட்டினில் விளக்கும் கண்ணும்
இல்லாமல் பொருள்கா ணாதே.

குகையில் வைத்துருக்கிய தரா நீரானது பலவடிவமானது போல அந்தக்கரண விருத்திகளானவை கடபட முதலிய ஆகாரங்களாக வேறுபடும் விடயங்கள் அனைத்தையும் அரும்பலம் என்னப்பட்ட சிதாபாசன் தெரிவிக்கும்; தீபமும் விழியும் இன்றி இருளில் இருக்கும் வஸ்து தெரியமாட்டாது.

சிற்சாயையே சகத்தாகத் தோற்றுதலின், "விருத்தியே கடபடாதி விடயமாய்ப் பரிணமிக்கும்" என்றார்,

தரா–பொன் முதலிய உலோகங்களுள் ஒன்று.

**விளக்கம்:** மூசையில் இட்டு உலையில் வைத்து உருக்கிய தரா நீரானது அச்சுக் கருவிகளில் வார்த்தபோது அவ் அச்சுக் கருவிகளுக்குச் சமானமாய்ப் பல உருவங்கள் ஆனாற்போல் தேக மத்தியினின்னும் நேத்திராதி இந்திரியங்களின் வாயிலாக வெளிப்படும் அந்தக்கரண விருத்திகளும் கட படாதி விஷயங்களின் சமானா காரமாய்ப் பரிணாமத்தை அடைகின்றன. பரிணாமம்–உள்ளது சிறத்தல்; நிலைமாறுதல். (12)

இதுவுமது

**121. எரிகின்ற விளக்கால் கண்ணால்**
**இருட்பொருள் காணல் வேண்டும்**
**தெரிகின்ற பரிதி காணச்**
**சென்றிடின் கண்ணே போதும்**
**விரிகின்ற சகத்தைக் காண**
**விருத்தியும் பலமும் வேண்டும்**
**புரிகின்ற விருத்தி யொன்றே**
**போதும்மெய்ப் பொருள்காண் போர்க்கே.**

பிரகாசிக்கின்ற தீபத்தினாலும் விழியினாலும் இருட்டின்கண் உள்ள வஸ்துவைப் பார்க்க வேண்டும். தெரியா நின்ற சூரியனைப் பார்க்கச் சென்றால் நேத்திரம் ஒன்றுமே போதும்; அவை போலப் பரந்த உலகத்தைப் பார்க்க விருத்தியும் பலமும் வேண்டும்; உண்மையான பிரம வஸ்துவைத் தரிசிப்பவர்களுக்கு முன் சொல்லிய விருத்தி யொன்றுமே போதும்.

விஷய அஞ்ஞானத்தைப் போக்குவதற்கு விருத்தி ஞானமும் அதை அறிதற்குப் பல ரூபமான சிதாபாசனும் வேண்டும் என்பார் 'சகத்தைக் காண விருத்தியும் பலமும் வேண்டும்' என்றார்.

ஆத்மாவைத் தரிசிப்பதற்கு விசார ரூபமான விருத்தி ஞானம் வேண்டும் என்பார் 'விருத்தியொன்றே போதும் மெய்ப்பொருள் காண்போர்க்கு' எனவும் கூறினார்.

லோகாந்த குந்தம் போல ஆதாரமான விருத்தி ஞானமும் ஆதேயமான சிதாபாசனுமாகிய இவ்விரண்டின் இலக்கணமும் கூறியதாம்.

ஆதாரம் – பற்றுக் கோடு
ஆதேயம் – தாங்கப்படுவது. (13)

மனத்தின் உருவம் கூறல்

**122. விருத்தியும் பலமும் கூடும்**
**விகாரமே மனம்என் பார்கள்**
**கருத்தெழும் விருத்திவேண்டும்**
**கணக்கினான் மனத்திற்(கு) எட்டும்**
**வருத்திய பலமாம் இந்த**
**மனத்திற்(கு) எட் டாது கண்டாய்**
**அருத்தம்இப் படியென்(று) ஐயம்**
**அகன்றுநீ தெளிந்தி டாயே.**

விருத்தியும் பலமும் சேர்ந்த விகார ரூபமே மனம் என்று சத்துக்கள் சொல்வார்கள்; பகுத்தறியும் நினைவில் உண்டாகும் விசார ஞானமானது சித்தை அறிதற்கு ஒரு தலையாக வேண்டுதலின் அவ் விருத்தி ரூபமான மனத்திற்குச் சித்து எட்டும். வருத்துகின்ற விஷயத்தை அறியும் பல ரூபமான இம் மனத்திற்குச் சித்து எட்டாது. முன் சொல்லிய இரண்டுக்கும் பொருள் இவ் வண்ணம் என்றறிந்து சந்தேகம் நீங்கி நீ தெளியக் கடவாய்.

சித்து சம்பந்த ஞானம் விருத்தியும், சட சம்பந்த ஞானம் பலமும் எனக் கொள்க.

சித்து – அறிவுப் பொருள்; ஆன்மா.

சடம் – அறிவில்லாத பொருள்; உடல்.

அகமுகமுள்ள மனதிற்கு பிரமம் அறியப்படும் எனவும் பகிர் முகமுள்ள மனதிற்கு அறியப்படாதெனவும் தெரிவித்ததாம். (14)

முற்கூறிய கடாவிடைகளால் கோசர அகோசரம் இன்றி, சுத்தப் பிரமமான சுவானுபூதியே தான் என்று அறிந்து அதில் உதிக்கும் மனதை அதிற் கரைக்கும் பொருட்டு ஒரு சங்கை வினாதல்.

123. வஞ்சகம்இல் பரமார்த்த குருவே சொன்ன
வழிகள்அறிந் தேன்இனியோர் வசனம் கேளீர்
சஞ்சலம்அற்(று) அகண்டபூ ரணமாய்ச் சித்தம்
ததாகாரம் ஆவதன்றோ சமாதி யோகம்
உஞ்சலையொத்(து) அலைவதுதன் சுபாவ மாகி
ஒருகணத்திற் பலவுலகாய் உதிக்கும் இந்த
நெஞ்சகம்வஸ் துவில் அசையா நிவாத தீப
நிலையடைவ(து) எப்படியோ நீர்சொல் வீரே.

வஞ்சனையின்றி யதார்த்தமாக விளங்கிய ஆசாரியரே! தேவரீர் அனுக்கிரகித்த மார்க்கங்களைத் தெரிந்து கொண்டேன்; இன்னும் ஒரு விண்ணப்பம் கேட்க வேண்டும். மனமானது சலனம் இன்றி அகண்ட பரிபூரண சொரூபமாய்த் தன்மயம் ஆவது அன்றோ நிஷ்டையில் உதிக்கும் ஞானம்? ஊசலைப்போலச் சஞ்சலப் படுவது தனது இயல்பாய் ஒரு க்ஷணத்தில் நானா உலகமாய்த் தோன்றுகின்ற இந்த மனம் பிரமத்தில் சலனம் இன்றிக் காற்றில்லாத விளக்கைப் போல நிலை பெறுவது எவ் வண்ணம்? தேவரீர் அருள் செய்வீராக. (15)

மனத்தின் முக்குணமும் அவைகளால் உண்டாகும் பயனும் கூறல்.

124. கருதுமனோ குணமூன்றாம் மூன்றில் ஒன்று
கதித்தெழுந்தால் மற்றிரண்டும் கரந்து நிற்கும்
தருமமிகு சத்துவமே லான போது
சன்மார்க்க மானதெய்வ சம்பத் துண்டாம்.
மருவும்இரா சதமாகில் உலக தேக
வாதனையாம் சாத்திரவா தனையு மாகும்

**அருமகனே தாமதமே லான போதில்**
**அசுரசம்பத்(து) உண்டாகும் அறிந்து கொள்ளே.**

நினைக்கின்ற மனத்திற்குத் திரிகுணமாம்; அம் மூன்று குணங்களில் ஒன்று மிகுந்தெழுமாயின் மற்ற இரண்டு குணங்களும் மறைந்திருக்கும்; சற்கருமத்திற்கு ஏதுவாகிய உயர்ந்த சத்துவ குணமானது மிகுந்த போது சன்மார்க்கமாகிய தெய்வ சம்பத்து உண்டாகும். பொருந்திய ரசோகுணம் மிகுமாயின் லோகவாதனையும் தேகவாதனையும் சாஸ்திரவாதனையும் உண்டாகும். தமோ குணம் மிகுந்த போதில் அசுரச் செல்வம் உண்டாகும். தெரிந்து கொள்வாயாக.

முக்கூறுடைய நெருஞ்சி முள்ளில் ஒரு கூறு மேற்பட்டிருக்கும் போது மற்றை இருகூறும் கீழ்பட்டிருப்பது போல மனத்தின் முக்குணங்களில் ஒரு குணம் மேற்பட்டிருக்கும் போது மற்றை இருகுணம் கீழ்ப்பட்டிருக்கும் என்க. (16)

சித்தம் சமான சத்துவம் சேடிக்கின் மனம் சித்தில் அசைவின்றி இருக்கும்.

125. **மனதுசத் துவசொரூபம் மற்றி ரண்டும்**
**வந்துகலந் தனவற்றை மாற்றி னாற்போம்**
**தனதுசன்மார்க் கத்தைவிடா திருந்த போது**
**தாமதமும் இரர்சதமும் சமிக்கும் பின்னைக்**
**கனபரிணா மம்சலனம் போம்போ னக்கால்**
**களங்கமற்று நின்றவா காயம் போலும்**
**நினதுளம்அப் படியாமப் பிரமத் தொன்றாய்**
**நிருவிகற்ப சமாதியிலே நிற்குந் தானே.**

மனமானது சத்துவ வடிவமாம்; மற்ற ரசோ தமோ குணங்களாகிய இரண்டும் வந்து சேர்ந்தவைகளாம். அவ்விரண்டு குணங்களையும் நீக்கிடின் நீங்கும். தனது சன்மார்க்கமான சத்துவ குணத்தை விடாமல் இருந்தபோது தமோ குணமும் ரசோ குணமும் ரசிக்கும். பின்பு கனமான திரிசியமாதலும் அதிற் சலனமடைதலும்

நீங்கும். அவை நீங்கினால் நிர்மலமாயிருந்த ஆகாயத்தைப் போலும் உன் மனமானது அவ்வண்ணமாம். அப் பிரம சொரூபத்தில் ஏகமாய் நிருவிகற்ப சமாதியிலே நிலை பெற்றிருக்கும்.

**விளக்கம்:** மனது சத்துவ குணத்தின் காரியமாய் இருத்தலின் பொன்னினின்றும் உண்டாகிய கடகம் பொன் சொரூபமாகவே இருப்பது போல அதனது சொரூபம் சத்துவ குணமேயாம். ஏனைய இரு குணங்களும் அம்மனத்தினிடத்து இடையே வந்து கலந்திருப்பன வாகலின் அவற்றை நீக்கினால் அவை நீங்கிப்போம். (17)

இதுவுமது,

126. **களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர்**
**களங்கமற்ற கண்ணாடி காட்டும் போது**
**விளங்கியதன் மயமாகி அபேத மாகி**
**விகற்பமின்றி நிருவிகற்ப மானாற் போல**
**அளந்தறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச் சித்தாய்**
**ஆனந்த மாம்பிரமத் தைக்கிய மான**
**உளந்தெளிந்த படியிருந்தால் உலகம் எங்கே**
**உலைவெங்கே யென்றுசங்கை ஒழித்தி டாயே.**

நிர்மலமாகிய கண்ணாடி முன் மற்றொரு நிர்மலமாகிய கண்ணாடியைக் காண்பிக்கும்போது பிரகாசியா நின்ற தனது சொரூபமாய்ப் பேதம் இறந்ததாகி வேறு பாடின்றி ஒன்றாவது போல அளவிட்டு அறியக் கூடாத வியாபகமாகியும் சத்தாகியும் சித்தாகியும் ஆனந்தமாகியும் விளங்குகின்ற பிரம சொரூபத்தில் கரைந்த மனமானது பிரமமாகத் தெளிந்த வண்ணம் விளங்கி நின்றால், திரிஸ்யமான சகத்து இன்று; அதைப்பற்றிய சஞ்சலம் இன்று என்று சங்கையை நீக்குவாய்,

சித்தம் சமானமனம் சித்தாகவே விளங்கின் சகமாதலும் அதிற் சலனம் அடைதலும் அதற்கு இன்றென அறிவித்ததாம். (18)

முற்கூறிய உத்தரத்தினால் சித்தம் சமான மனமும் சித்தே ஆயிற்று என அறிந்து, மேற்சடாம்சமான மனமும் அதன் தொழிலும்

எவ்விதமாயின என்பதை அறியும் நிமித்தம் மனம் சித்தில் இறக்கில் சீவன் முத்தர் எங்ஙனமும் சஞ்சரிப்பார் எனல்.

127. ஏகமாய் மனம்இறந்தால் சீவன் முத்தர்
இருக்குமட்டும் பிராரத்தம் எதினால் உண்பார்
போகமா னதுபுசித்துத் தொலைப்ப தன்றோ
புசித்தாலும் மனந்தானும் போன தன்றே
சோகமா மனமிறந்தால் போகம் இல்லை
தோன்றுமெனின் முத்தரென்று சொலக்கூ டாதே
மோகமாம் இதுதெளியக் குருவே நன்றா
மொழிந்தருள வேண்டுமென்றான் முழுதும்
(ஆனோன்.

ஆசாரியரே! பிரம்ம சொரூபமாகி மனம் நசிக்கின் சீவன் முக்தர்கள் இருக்கும் அளவும் பிராரத்த கன்மங்களை யாதினால் அனுபவிப்பார்கள்? போகங்களை அனுபவித்து நீக்கவேண்டு மன்றோ? அனுபவிக்கின் மனம் இறந்ததன்றே? துன்பமாகிய மனம் இறக்கின் போக அனுபவம் இல்லை; மனம் உதிக்குமாயின் சீவன் முத்தரென்று உரைத்தல் கூடாதே; மயக்கமான இச் சங்கை தெளியுமாறு யாவுமான சீடன் தெளிவாகச் சொல்ல வேண்டு மென்று கேட்டான்.

சீவன் முத்தர்–இம்மையில் முத்தி நிலையடைந்தவர். (19)

அச் சங்கைக்கு உத்தரம் கூறுவான் தொடங்கி மனோ நாசம் இருவிதமாகக் கூறுகின்றார்.

128. மன்நாசம் சொரூபமென்றும் அரூபம் என்றும்
வகுத்துரைப்பார் இருவகையாய் வரும்இ வற்றில்
வினவாத சீவன்முத்தர் இடத்தில் ஒன்றும்
விதேகமுத்தர் இடத்திலொன்றும் மேவு மைந்தா
தனதான சத்துவமாய் மனம்சே டித்துத்
தாமதம்ரா சதநசித்தல் சொரூப நாசம்
அனகாசத் துவந்தானும் இலிங்க தேகம்
அடங்கும்போ(து) அடங்குவதே அரூப நாசம்.

மாணாக்கனே! மனோ நாசமானது உருவநாசம் எனவும் அருவ நாசம் எனவும் வகுத்துச் சொல்வார்கள். இரண்டு விதமாக வருகின்றவைகளில் சங்கையறத் தெளிந்த சீவன் முக்தர்கள் இடத்து உருவநாசம் ஒன்றும் விதேக முத்தர்களிடத்தில் அருவ நாசம் ஒன்றும், உண்டாகும். தனது சுபாவமான சத்துவ குணமாக மனம் சேஷித்து, தமோ ரசோ குணங்கள் தாமே நசிக்கும். அப்படி நசித்தலே உருவ நாசமாம். அச் சத்துவ குணமும் சூக்கும சரீரம் நசிக்கும்போது ஒக்க நசிக்கும். அப்படி நசித்தலே அருவ நாசமாம்.

மனம் உருவ நாசமாயின் சீவன் முத்தியும், சீவன் அருவ நாசமாயின் விதேக முத்தியும் ஆமெனக் கூறினதாம். (20)

உருவம் இன்றி அருவமாய் அறிவுருவமான மனதினால் யாவும் அனுபவிக்கலாம் எனல்.

**129. சுத்தமாம் சத்துவமே உண்மை யாகும்**
**துகளிருள்போ னால் மனம்என் சொல்லும் போம்**
**வர்த்தமானத் தில்வந்த உணவை உண்பார் (போம்**
**வருவதும்போ வதுநினைந்து மகிழார் வாடார்**
**கர்த்தராம் அகந்தையைவிட் டகர்த்த ராகிக்**
**கரணவிருத் திகள் அவத்தை காண்பா ராகி**
**முத்தராய் இருக்கலுமாம் புசிப்பும் கூடும்**
**முட்டிலையென்(று) அறிந்து சங்கை மோசிப் பாயே.**

களங்கமற்ற சத்துவகுணமே தத்துவமாம்; ரசோதமோ குணங்கள் நீங்கினால் மனம் என்று உரைப்பது நீங்கும்; நிகழ் காலத்தில் கிடைத்த உண்டியைப் புசிப்பார். எதிர் காலத்து வரும் பொருளையும் கருதி மகிழார். செல் காலத்தில் போன பொருளையும் கருதி வாடார். யான் என்று என்னும் அகந்தையை நீக்கி, அகர்த்தரார் அந்தக்கரண விருத்திகளையும் அவஸ்தாத் திரயங்களையும் பார்ப்பவர்களாகிச் சீவன் முத்தருமாய் இருக்கலுமாம். எல்லாவற்றையும் அனுபவிக்கவும் கூடும். தடையில்லையென்றறிந்து சங்கையை நீக்குவாய்.

சத்துவமான மனதினால் எவற்றைப் புசிக்கினும் அலைவகளால் வரும் சுக துக்கம் இவர்க்கில்லை என்பதாம். (21)

மனம் சத்துவமாக விவகரிக்கின் சமாதி எங்ஙனம் கூடும் என்ற வினாவிற்கு உத்தரம்.

**130. விவகார வேளையெல்லாம் சமாதி என்றால்**
**விகற்பமன்றோ மனம் அலைந்து விடாதோ**
**அவதானம் நழுவுமன்றோ! என்றா யாகில் (விட்டால்**
**அதற்கொரு திட் டாந்தங்கேள் ஆசை கொண்டு**
**நவமாகப் பரபுருடன் தன்னைக் கூடி**
**நயந்துசுகம் அனுபவித்த நாரி நெஞ்சம்**
**தவமான மனைத்தொழில்கள் செய்யும் போதும்**
**தழுவியனு பவித்தசுகம் தனைவி டாதே.**

விவகரிக்கும் காலங்கள் அனைத்தும் சமாதி என்று சொன்னால் இவ் விவகாரம் திரிசிய வேறுபாட்டைத் தோற்றுவிக்கும், அன்றோ? அங்ஙனம் ஆயின் மனம் சஞ்சலத்தை அடையாதோ? அங்ஙனம் சஞ்சலத்தை அடையுமாயின் ஞானம் நழுவும் அன்றோ? என்று கேட்பாயாகில், அத்தாட்டந்தத்திற்கு யாம் ஒரு திட்டாந்தம் சொல்லுவோம் கேட்பாய், காமமுற்று நூதனமான சோரபுருடனை இன்புற்றுப் புணர்ந்து விடயானந்தத்தை அனுபவித்த பெண்ணின் மனமானது தவத்துக்குரிய இல்வாழ்க்கைக்குத் தக்க செயல்களைச் செய்யுங் காலத்தும் முன்கூடி அனுபவித்த விடயானந்தத்தை நீங்காது. அவதானம்–மறப்பின்மை.

நெஞ்சும் சுகந்தனை விடாதென்பதைச் சுகம் நெஞ்சத்தனை விடாதெனப் பொருள் கொள்க. மனதை விழுங்குவது சுகமாதலின்.

விவகாரங்களைச் சத்துவத்தின் உதயமான சுகபோதம் விழுங்கிக் கோடலின் அவ் விவகாரம் சமாதியே ஆம் என்பதாம். (22)

விவகாரங்களில் அகம்பாவம் நீங்குதற்பொருட்டுச் சிற்சுகமான சீவன் முத்தரது சத்துவமான மனதிற்கு அகங் கூடுமோ? என்ற வினாவிற்கு உத்தரமாக விரதத் திரயம் கூறல்.

திரயம் – மூன்று

131. தேகத்தன் அலனாகி அகர்த்த னாகிச்
சீவனின்றிப் பிரமமாய்த் தெளிந்த முத்தன்
போகத்தை உண்பனென்றால் கருத்தா வாமே
பூரணமாம் அகர்த்தனுக்குப் போகம் உண்டோ?
சோகத்தை அறுத்தருளும் குருவே இந்தத்
துகளறுக்க வேண்டுமென்று சொன்னா யாகில்
மாகர்த்தன் மாபோகி மாத்தி யாகி
வகைமூன்றாய் அவரிருக்கும் மகிமை கேளாய்.

துன்பத்தைக் கெடுத்து இன்பத்தைக் கொடுக்கின்ற ஆசாரியரே! உடலை நான் என்பது அல்லாதவனாய் அகர்த்தாவாய்ச் சீவ ஈஸ்வரத்துவம் இல்லாமல் கூடஸ்த பிரம ஐக்கியமாகித் தெளிந்த சீவன் முத்தன் ஆனவன் விடய போகங்களைப் புசிப்பான் என்றால் யான் என்பவன் ஆமே, பரிபூரணமான அகர்த்தாவுக்கு விடய போக முளவோ, இக்குற்றத்தை நீக்க வேண்டுமென்று கேட்பாயாகில், மாகர்த்தனும் மாபோகியும் மாத்தியாகியும் ஆகிய மூன்று விதமாக அச் சீவன் முத்தர்கள் இருக்கின்ற பெருமையைக் கேட்பாய்.

கர்த்தத்துவம் இன்றி அகர்த்தத்துவமான சீவன் முத்தருக்குப் போகம் கூடும் தன்மை எங்ஙனம் என்ற வினாவிற்கு உத்தரம் கூறத் தொடங்கினதாம்,

**விளக்கம்:** ஜீவன் முக்தர் மாகர்த்தன், மாபோகி, மாத்தியாகி என முத்திறத்தராவர்; அவரது மகிமை பின் வரும் பாடல்களில் கூறப்படுகின்றது. (23)

மாகர்த்தன் இலக்கணம் கூறல்.

132. செய்கையும்செய் விக்கையும்மற் றிருக்கும் காந்தச்
சிலைமலைமுன் இரும்புகள் சேட்டிக்கு மாபோல்
செய்கையும்செய் விக்கையும்மற் றிருக்கும் என்முன்
சடமான வுலகமெல்லாம் சேட்டை செய்யும்

மெய்கலந்த இந்திரிய விகார ரூப
விவகார விருத்திக்கு விருத்தி தானா
மெய்கலந்த சமாதிக்கும் சாட்சி யேநான்
வெயில்போலென்(று) உரைத்தவனே விபுமா
(கர்த்தன்.

தொழில் செய்தலும் தொழில் செய்வித்தலும் இல்லாதிருக்கின்ற காந்தக் கல்லின்முன் இரும்புகள் அசையுமாறு போலப் பிரேரகப் பிரேரியங்கள் இல்லாதிருக்கின்ற என்முன் சடமாய் உள்ள சகங்கள் அனைத்தும் அசைந்து கொண்டிருக்கும்; தேகத்திற் சேர்ந்த ஞானேந்திரிய கன்மேந்திரிய பேத ரூபங்களான பிரேரகம் பிரேரியமான விருத்திகளுக்கும் அவ் விருத்திகள் அடங்கித் தன் மயமான உண்மை கலந்திருக்கும் சொரூப சமாதிக்கும் சூரிய கிரணத்தைப் போலச் சர்வ சாட்சியே நானென்று ஸ்திரமானவனே சர்வ வியாபகமாகிய மாகர்த்தனாம்.

அத்துவிதமான எனது சந்நிதியில் நடக்கும் தேக முதலிய விவகாரங்களுக்கும் இவைகள் இறந்து நின்ற ஞான சமாதிக்கும் சாட்சி நானே என்று அவைகளோடுங் கூடாமல் கூடியிருப்பவனே மாகர்த்தன் என்பதாம். (24)

மாபோகி, மாத்தியாகிகளின் இலக்கணங் கூறல்.

133. அறுசுவையின் குணங்குற்றம் அசுத்தம்சுத்தம்
அபத்தியம்பத் தியமெனவூண் ஆய்ந்திடாமல்
பொறுமையுடன் கிட்டினதைக் காட்டுத் தீப்போல்
போகங்கள் புசிப்பவன்மா போகி யாகும்
சிறிதுவலி துகள்தனதன் னியங்கள் நன்மை
தீமைகள்சே ரினும்படிகச் செயல்போற் சித்தம்
வெறிதிருக்கும் அவனேமாத் தியாகி யாவன்
விரதம்இம்மூன் றுள்ளவரே வீடுள் ளோரே

அறுவகை ரசங்களின் குணாகுணங்களைச் சுத்த அசுத்தங்கள் பத்திய அபத்தியங்கள் என உணவை ஆராய்ந்து பாராமல் சாந்தத்

தோடும் நேரிட்டதைக் காட்டுத் தீப்போலப் போகங்களை அனுபவிப்பவன் மாபோகியாம்; அற்பமும் மகத்துமானவைகளும், தன்னுடையதும் பிறருடையதுமானவைகளும் புண்ணிய பாவங் களும் ஆகிய இவைகள் அடைந்தாலும் படிகத்தின் தன்மையைப் போலச் சித்தமானது பற்றின்றி நிற்பவனே மாத்தியாகியாவான். இம் மூன்று விரதங்களும் உடையவர்களே முத்தியையுடைய சீவன் முத்தர்கள்.

உணவின் ரசாரசங்களைப் பாராமல் தனது ரசமாக யாவையும் புசிப்பவனே மாபோகி எனவும், தன்னிடத்தில் தனக்கு அன்னியமான வைகள் யாது பற்றினும் தான் பற்றின்றிச் சுயமா விள்ங்குகின்றவனே மாத்தியாகி எனவும் கூறினதாம்.

**விளக்கம்:** மாகர்த்தன், மாபோகி, மாத்தியாகி என்னும் இம் மூன்று விரதமும் உடையவரே ஜீவன் முத்தராவர். இவ்வாறுள்ள அவர் போகானுபவத்தால் கர்த்தராவதெப்படி? அன்பனே! அதனை நீயே ஆராய்ந்து பார். அதனைப் பின்வரும் பாட்டுக்களில் காணலாம். வேதாந்த நூல்கள் இவர்களைப் பற்றி விரிவாய் பேசுகின்றன. (25)

சீவன் முத்தன் விவகரித்துக் கொண்டிருக்க அஃதின்றிக் கிருத கிருத்தியனானது எங்ஙனம்? என வினாதல்.

அறுசீர் விருத்தம்

134. மெய்யுங் கொண்டு பிராரத் தந்தரு
விதிவழி நின்றிடவும்
உய்யுங் கர்மிக ளுக்கநு குணமா
உறுதொழில் செய்திடவும்
செய்யும் செய்கை முடிந்தவன் என்றுரை
செப்புவ தெப்படியோ
நையுந் துன்பம் அகற்றிய குருவே
நலமா அருள்வீரே.

வருந்தும் பவத்துன்பத்தை நீக்கிய ஆசாரியரே! தேகத்தைத் தாங்கிக்கொண்டு பிராரத்த கன்மம் கொடுக்கின்ற நியதி மார்க்கத்தில் நிற்கவும் முமுட்சுக்களுக்கு அனுகூலமாகப் பொருந்திய சிரவணாதி களைச் செய்து கொண்டிருக்கவும் கிருத கிருத்தியன் என்று சொல்வது எங்ஙனம்? நன்றாகச் சொல்வீர்.

கிருத கிருத்தியன் – செய்யும் செய்கை முடிந்தவன். (26)

மேல் வினாவிற்கு உத்தரங் கூறல்.

135. **ஆடவர் செய்தொழில் மூவகை யாகும்**
**அவித்தை வசத்துறுநாள்**
**ஈடணை மமதை அகந்தையு ளார்க்கே**
**இகபர விவகாரம்**
**வீடணு குவம்எனும் இச்சையு ளார்க்கே**
**வித்தை படிப்பதெலாம்**
**பாடல் மிகுந்தொழி லாற்பலன் உண்டோ**
**பரிபூ ரணமானால்.**

புருஷர்கள் செய்கின்ற கிரியையானது மூன்று விதமாம் அஞ்ஞான வசமாய்ச் செய்கின்ற காலத்தினால் ஈஷணாத் திரயமும் மம்தையும் அகந்தையும் உள்ளவர்களுக்கே இகலோக பரலோக விவகாரங்கள் உளவாம். முமுட்சுகளுக்குச் சடசித்தைப் பகுத்தறியும் சாஸ்திரங்கள் அனைத்தையும் அப்பியாசித்தல் உளவாம். பரிபூரண மானவர்களுக்கு மிகுந்த சாஸ்திர அப்பியாசத்தினால் பயனுளதோ?

அஞ்ஞான திசையில் உலக விவகாரங்களும் முமுட்சு திசையில் சிரவணாதி விவகாரங்களும் உளவாம்; முத்தித் திசையில் பல வியாப்தியின்றி விர்த்தியாப்தியாக விவகாரங்களைச் செய்தலின் அவையும் செய்தும் செய்திலர் என்பதாம்.

ஈடணை – ஆசை.

**விளக்கம்:** புருஷர்கள் செய்யத்தக்க கிருத்தியம் மூன்று அவையாவன:

1. உழவாதி: போகத்தில் இச்சையும் குடும்பத்தில் எனதென்னும் அபிமானமும், தேகத்தில் யான் என்னும் அபிமானமும் கொண்டது.

2. யஞ்ஞாதி: பரலோக போக சாதனமானது. அதற்கு வேண்டுவன செய்தல்.

3. முமுட்சு: யாம் மோட்சம் அடையக் கடவோம் என்னும் இச்சையுள்ளவர். அதற்குச் சிரவணாதி சாதனம் அனைத்தும் செய்யத்தக்கன.

முமுட்சு – மோட்ச விருப்பன், துறவு,

ஈஷணாத்திரயம் – மூவகை ஆசை: மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்பனவாம். (27)

சீவன் முக்தர்க்கு உலக விவகாரங்கள் இலவாயினும் சிரவணாதி விவகாரங்கள் வேண்டாவோ என வினாதல்.

**136. குரவர் சிகாமணி யேகே ளீர்நீர்**
**கூறின வழியொக்கும்**
**பரமுடன் இகமும் இழந்தவர் அன்றோ**
**பழகுவர் மெய்ஞ்ஞானம்**
**விரவு முயற்சியின் மீண்டவர் அதையினி**
**வேண்டுவ ரோவேண்டார்**
**சிரவண மனனா திகள்வேண் டாவோ**
**சித்தம் உரைத்திடவே.**

தேசிக சிரோத்தினமே! கேட்டருள்வீர்; தேவரீர் அருளிச் செய்த முறை சரியே. பரலோக இச்சையோடும் இகலோக இச்சையையும் நீங்கின முமுட்சுக்கள் அன்றோ உண்மை ஞானத்தை அப்பியசிப்பார்கள்? கலக்கின்ற முயற்சியில் நின்று நீங்கினவர்கள் அவ் இகலோக பரலோக இச்சையை விரும்புவார்களோ? விரும்பார்கள், ஆயினும், மனம் நிலைபெறும் பொருட்டுச் சிரவணமனன முதலிய ஐந்தும் வேண்டாவோ?

1. சிரவணம் – கேட்டல்

2. மனனம் – மனப்பாடம் செய்தல்

3. நிருத்தியாசனம் – இடைவிடாத் தியானம். (28)

மேல் வினாவிற்கு உத்தரங் கூறல்.

**137. கிளர்மக னேகேள் தத்துவம் அறியார்**
**கேட்டல் செயக்கடனே**
**தளர்வறு சிந்தித் தலின்முயல் வார்சிலர்**
**சந்தே கங்களுளார்**
**தெளிதலில் நிற்பார் விபரீ தப்பேய்**
**தீரா வாதனையோர்**
**வெளியுரு வாயறி வாய்நிறை வாயினர்**
**வேண்டுவ தொன்றுண்டோ.**

விளங்காநின்ற புத்திரனே! கேட்கக்கடவாய்; உண்மை ஞானத்தைத் தெரியாதவர்கள் சிரவணஞ் செய்ய வேண்டியது கடமையாம். கேட்ட வஸ்து நிச்சயத்தில் சந்தேகம் உள்ளவர்களாகிய சிலர் தளர்வற்றிருக்கும்படி மனனம் செய்தலின் முயற்சி செய்வார்கள். ஒன்றை ஒன்றாக அறியும் நீங்காத வாதனையை உடையவர்கள் நிருத்தியாசனத்தைக் கொண்டு சமாதியில் இருப்பார்கள். பரமாகாசமாய் அபரோட்ச ஞானமாய்ப் பரிபூரண மானவர்கள் விரும்புவது ஒன்றுளதோ?

கேட்டல் முதலிய மூன்று விவகாரங்களும் அஞ்ஞானம் முதலிய மூன்றும் உள்ள மட்டும் வேண்டுமேயன்றி மேல் வேண்டப்படுவன அல்ல என்றதாம். (29)

விவகார நீங்கில் சீவன் முத்தர்க்கு எங்ஙனம் அகம் பாவம் உண்டாதல் கூடும்? என வினாதல்,

**138. ஐயாகேளீர் தத்துவ ஞானியும்**
**அஞ்ஞா னிகள் போலச்**

செய்யா நின்றேன் கண்டேன் உண்டேன்
சென்றேன் எனலாமோ
பொய்யாம் விபரீ தங்கள் அவர்க்குப்
போயின என்றீரே
மெய்யாம் பிரம விசாரம் இதன்றே
வெளியா வுரையீரே.

எனது ஆசிரியரே! கேட்டருள்வீர்! மெய்யுணர்வுடைய சீவன் முத்தனும் அஞ்ஞானிகளைப் போல இதைச் செய்கிறேன், இதைப் பார்த்தேன், இதைப் புசித்தேன், இங்ஙனம் சென்றேன் என்று சொல்லலாமா? அச் சீவன் முத்தர்களுக்கு அசத்தியமான பேத பாவனைகள் நீங்கின என்று அருளினீரே, தத்துவமான பிரம விகாரமானது இஃதன்றோ, நன்றாகத் தெரியும்படி சொல்வீர்.

சீவன்முத்தர் அஞ்ஞானிகளைப் போல் விவகரிக்கின் அவர்களுக்கு விபரீதம் எங்ஙனம் நீங்கிற்று என வினாவினதாம். (30)

மேல் வினாவிற்கு உத்தரங் கூறல்.

139. ஒய்ந்த கனாவிற் கண்ட பழங்கதை
ஓதுவன் வாதனையால்
ஆய்ந்தறி வுற்றவன் அப்படி செப்புவன்
ஆபா சனுமாகான்
மாய்ந்ததன் உடல்வேம் அளவும் விண்ணவன்
மானுடன் எனப்படுவான்
வீய்ந்த சிதாபா சன்போம் அளவும்
விவகா ரம்தொடரும்.

இந்திரியங்கள் ஒழிந்த சொப்பனத்தில் கண்ட பழங்கதையை வாசனையால் சாக்கிரத்தில் ஒருவன் சொல்லுவன்; வேத முடிவான மகா வாக்கியார்த்தத்தை ஆராய்ந்து தன்னையறிந்த சீவன்முக்தன் அத் தன்மையாகவே பூர்வ அஞ்ஞான வாசனையாய் இதைச் செய்கிறேன், இதைப் பார்த்தேன், இதைப்புசித்தேன், இங்ஙனம்

சென்றேன் என்று சொல்லுவான். அப்படிச் சொல்வான் ஆயினும் சிதாபாசன் ஆகான். தேவனாயினோன் தேவதத்துவம் அடைவோம் என்று அக்கினியிற் பிரவேசமாய் மாய்ந்த தன் தேகம் வெந்து நீறாகும் அளவும் மனிதனென்று சொல்லப்படுவான். சித்துருவமாக நசித்த சிதாபாசன் விதேக முத்தியை அடையுமளவும் விவகாரம் தொடர்ந்து வரும்.

**விளக்கம்:** எங்ஙனம் இல்வணன் என்னும் அரசன் யான் சொப்பனத்தில் புலையனாகிப் பலவிதமாக வருந்தி இறக்கத் துணிந்தேன் என்று மந்திரிகளிடத்தில் கூறினும் அவன் புலையன் ஆகாமல் அரசனாகவேயிருந்தானோ, அங்ஙனமே ஞானியும் அஞ்ஞானியைப் போல வியவகரிக்கினும் அவன் அஞ்ஞானி யாகாது ஞானியாகவேயிருக்கின்றான் என்பது ஈண்டு அறியத்தக்கது. (31)

சகத் விவகாரம் நீங்கச் சமாதி செய்யின் அச்செயலும் ஒரு விவகாரம் ஆதலின் அவன் எங்ஙனம் நிர்விவகாரியாவன்? எனல்.

**140. ஆனால் ஐயா குருவே காண்பது**
**அசத்தியம் என்றாலும்**
**நானா விவகா ரந்துயர் அலவோ**
**ஞான சுகந்தருமோ**
**போனால் அன்றோ நன்றா நிட்டை**
**பொருந்திடல் வேண்டாவோ**
**தானா நிட்டை புரிந்தாற் செய்கை**
**தவிர்ந்தவன் எப்படியோ.**

தானா நிட்டை புரிந்தவன் – கிருத கிருத்தியன். அப்படி விவகாரம் விதேக கைவல்ய மட்டும் தொடருமானால், ஐயா ஆசிரியரே! திரிசியம் பொய்யாயினும், அதைப்பற்றிய பல தொழில்கள் துன்பத்தைத் தருபவை அல்லவா? சிதாநந்தத்தைக் கொடுக்குமா? அத்தொழில் நீங்கினால் அல்லவா நன்மையாம்? அவை நீங்கும் பொருட்டுச் சமாதி செய்ய வேண்டாவோ? தன் மயமாகும் சமாதி

செய்தால் எவ்விதம் தொழில் விட்டவன். கிருத கிருத்தியன்–செய்தற்குரிய கடமையைச் செய்து முடித்தவன். (32)

மேல் வினாவிற்கு உத்தரம் கூறல்.

**141. தெரிதரு மகனே ஆரம் பத்தோடு**
**தீரும் விவகாரம்**
**உரியச மாதியும் விவகா ரங்களும்**
**உள்ளத் தொழிலன்றோ**
**துரிய பரம்பொருள் ஆனவர் வேறொரு**
**தொழில்செய் வதுமுண்டோ**
**அரியச மாதிகள் பழகுவ னேல்அவன்**
**ஆரு டனுமன்றே.**

உண்மையை அறிகின்ற புத்திரா! தனக்குரிய நிட்டையும் சகத் தொழில்களும் மனோ விவகாரங்கள் ஆதலால், பிராரத்த கர்மத்துடனே அத் தொழில்களும் சிரவணாதிகளால் தீரும். துரியமான பிரமவஸ்துவானவர்கள் மற்றொரு கிரியையைச் செய்வதும் உளதோ? அருமையான ஞான நிட்டைகளை அப்பியாசிப்பானாகில் அவ் அப்பியாசி அனுபவியல்லன்.

சகத் விவகாரம் சமாதியிலும் சமாதி விவகாரம் சாட்சாத் காரத்தினும் நீங்குமெனக் கொள்க.

சித்து விவகாரமான சமாதியும் அப்பியாசிக்கே அன்றி ஆரூடனுக்கு இன்று என்பதாம். (33)

ஆரூடர்களிலும் சிலர் சமாதி முதலியவற்றைச் செய்வது என்னை? என வினாதலுக்கு உத்தரம்.

**142. உத்தம குருவே ஆரூ டருமாய்**
**ஒரு தொழில் அற்றவருள்**
**சித்தம டங்குதி யானா திகள்சிலர்**
**செய்குவ தென்னென்றால்**

**இத்தல மருவும் பிராரத் தப்பிரி(வு)**
**எப்படி அப்படியே**
**முத்தரும் வெகுவிதம் ஆகுவர் என்பது**
**முன்னே சொன்னேனே.**

மேன்மை தங்கிய தேசிகரே! சுவானுபவம் உள்ளவர்களுமாய், ஒரு கிரியையும் இல்லாதவர்களுக்குள் மனம் அடங்குகின்ற சமாதி முதலியவைகளைச் சிலர் செய்வது என்னென்று கேட்பாயாகில், இப் பூமியிற் பொருந்தும் பிராரத்த கன்மப் பகுப்பு எவ்விதமோ அவ்விதமே யாம், சீவன் முத்தரும் நானாவிதமாய் இருப்பார்கள் என்பதை முந்திய தத்துவ விளக்கப்படலத்தில் 'பேத கன்மத்தால் வந்து' என்னும் பாடலில் சொன்னேன்.

ஆரூடன் தொழில் பிராரத்த கன்மமென அறிக என்பதாம். உலகநிலை தோன்றாமல் ஆத்ம ஞானத்தால் உடனே முத்தி அடைபவனே ஆரூடனாம். (34)

இதுவுமது.

143. **நல்லவ னேகேள் உலகுப கார**
**ஞானிகள் விவகாரம்**
**அல்லது வேறொரு பெறுபே றுமிலை**
**அதனால் பிணியுமிலை**
**வல்லசி ருட்டிமு தற்பல தொழிலால்**
**வருபுண் ணியபாவம்**
**எல்லவ ருக்கும்அ னுக்கிர கஞ்செயும்**
**ஈசன்அ டைந்திலனே.**

நல்ல மாணாக்கனே! கேட்பாய், ஞானவான்கள் செய்யும் தொழில் லோகோபகார நிமித்தமேயன்றி, அதனால் தாங்கள் வேறே அடையக் கடவதாய பயன் ஒன்றும் இல்லை; அக் கிரியையினால் துன்பமும் இல்லை; அஃது எங்ஙனமெனின், வல்லமையான சிருட்டியாதி நானாவித கிருத்தியங்களினால் வராநின்ற தரும

அதருமத்தை யாவருக்கும் அனுக்கிரகம் செய்கின்ற ஈசன் அடைகிலன்.

ஆரூடன் செய்யும் தொழில் ஈசனைப் போல உலகோபகார நிமித்தமே அன்றித் தன்னிமித்தம் அன்று என்பதாம். (35)

'வஞ்சகம் இல்' என்ற 15ஆவது செய்யுள் முதல் இதுகாறுஞ் சித்தில் உதித்த மனம் சலனமின்றிச் சித்தாக விளங்குகிறது என்பதை விளக்கி, இனிச் சித்து வியாபகத்தை விளக்கும் பொருட்டு அம் மனமுள்ள ஞானவான் ஈசனுக்கு ஒப்பாவான் என்ற வினாவுக்கு உத்தரம் கூறல்.

**144. ஈசனு மாய்அரு வாய்உரு வாகி**
**எழுந்தரு ளுங்குருவே**
**ஈசனும் ஞானியும் ஒப்பென் றீரே**
**எப்படி ஒப்பென்றால்**
**ஈசனும் ஞானியும் மமதைஅ கந்தை**
**இகந்ததி னால்ஒப்பாம்**
**ஈசனும் ஆம்பல சீவரும் ஆம்உல(கு)**
**எல்லாம் இவனாமே.**

நிஷ்களமாய் மும்மூர்த்தியுமாய் மானிட வடிவுமாய் எழுந்தருளிய ஆசிரியரே! மாயா ரகிதரான மும்மூர்த்திகளும் ஞானவானும் சமானம் என்றீரே, எவ்விதம் சமானம் ஆவர்? என்று கேட்பாயாகில், ஈஸ்வரனும் ஞானவானும் மமதையும் அகந்தையும் நீங்கி நிற்றலால் சமானமாவர். இந்த ஞானி மும்மூர்த்தியுமாவன். அனந்த சீவர்களும் சகங்கள் அனைத்தும் ஆவான்.

அறிஞன் ஈசனுக்கு ஒப்பாவான் என்பதற்கு ஏது கூறி, மற்றும் சீவேஸ்வர சகத்தாகவும் விளங்குவான் எனக் கூறினதாம்.

யான் என்பது அகந்தை. எனது என்பது மமதை. இவ்வை இரண்டையும் விட்டிருத்தலான் ஈசனும் ஞானியும் ஒப்பாவர். (36)

அறிஞன் எங்ஙனம் சீவர்களாக விளங்குவான்? என வினாதல்.

145. எல்லாச் சீவரும் இவனாம் என்றீர்
இவன்தான் முத்தியடைந்(து)
எல்லாச் சீவரும் முத்திபெ றாமல்
இருப்பா னேன்ஐயா
எல்லாச் சீவரும் வெவ்வே றானால்
இவன்எல் லாம்அவனே
எல்லாப் பொருளும் உரைத்தருள் குருவே
இதைநீர் மொழியீரே.

ஆசிரியரே! சகல சீவர்களும் இந்த ஞானியாவான் என்று சொன்னீர். இந்த ஞானி வீடு அடையச் சகல சீவர்களும் வீடு அடையாமல் இருப்பதென்ன? சகல ஜீவர்களும் தனித்தனியாய் இருப்பாராயின் இந்த ஞானி அனைத்தும் ஆகானே! சர்வார்த்தங் களையும் அருளுகின்ற தேசிகரே! இச் சங்கைக்கு உத்தரம் தேவரீர் அருள் செய்வீராக.

முத்தி அடைய என்பது அடைந்தெனத் திரிந்து நின்றது. ஞானவானாகிய ஒருவன் பெற்ற பேறு ஏனைய உயிர்கள் பெறாமையால், இவனே எல்லாமாவான் என்பது எங்ஙனம் கூடும்? என வினாவினதாம். (37)

மேல் வினாவிற்கு உத்தரங் கூறல்.

146. அகமெனும் ஆன்மா பூரணம் ஏகம்
அநேக விதஞ்சீவன்
அகமெனும் அந்தக் கரணஉ பாதிகள்
அளவிலை ஆதலினால்
சகமுழு துங்குளிர் சந்திரன் ஏகம்
சலசந் திரர்பலவாம்
சகமதில் ஏரிகு ளஞ்சிறு குழிசால்
சட்டிகு டம்பலவால்.

நான் என்னும் ஆத்மாவானது பரிபூரணமான ஒன்றாம். நான் என்கிற மனோவுபாதிகள் மட்டில்லை; ஆதலால் சிதாபாசன் நானா

விதங்களாம், உலகமனைத்தும் குளிர்ச்சி செய்கின்ற மதி ஒன்று. உலகத்தின்கண் ஏரிகளும், தடாகங்களும் சிறிய பள்ளங்களும், சால்களும் சட்டிகளும் குடங்களும் பல ஆதலால் சலப் பிரதி பிம்பமான சந்திரர்களும் அனந்தமாம்.

உத்தரம் – மறுமொழி (பதில்) உபாதி – வேதனை. மதி – சந்திரன். (38)

இதுவுமது

**147. சட்டிகு டங்களில் ஒன்றுந சித்திட**
**அதனுள் சலசந்திரன்**
**ஒட்டுமு தற்சந் திரனோடு கூடும்**
**ஒழிந்தவை கூடாவே**
**கட்டும்உ பாதி நசித்திடு சீவன்**
**காரண ஆன்மாவில்**
**கிட்டும் ஐக்கியம் உபாதி கெடாதவர்**
**கேவலம் ஆகாரே.**

சட்டி கடம் முதலியவைகளில் ஒன்று கெட அதற்குள் தோன்றிய பிரதிபிம்ப சந்திரன்தான் பொருந்துதற்குரிய முதற்காரண சந்திர னோடும் சேரும். ஏனைய பிரதிபிம்ப சந்திரர்கள் அங்ஙனம் ஏகமாகக் கூடாவாம். அதுபோலப் பந்தித்திருக்கும் அறியாமை இறந்த சீவன் தனக்கு ஆதாரமான ஆத்ம சொரூபத்தில் ஐக்கியமாம். அவித்தை நீங்காத சீவர்கள் கைவல்லியத்தை அடையமாட்டார்கள்.

அவித்தை – அறியாமை; மாயை.

ஒரு கடசலம் நசிக்கில் அதில் பிரதிபிம்பித்த சந்திரன் பிம்பசந்திரன் ஆவனன்றி ஏனைய பிரதிபிம்ப சந்திரர்கள் ஆகார்;

அதுபோல ஓர் அவித்தை நசிக்கில் அதில் தோன்றிய சீவன் சிவமாவனே அன்றி ஏனைய சீவர்கள் ஆகார் என்பதாம். (39)

முன்பு அறிஞன் ஈசனுக்கு ஒப்பென்றீர். அங்ஙனமாயின் அவர் மகிமை இவனுக்கு ஏன் இன்று? என வினாதல்.

148. இவன்அயன் மால்சிவன் ஆகிய ஈசரோ(டு)
எப்படி ஒப்பாகும்
சிவன்முதல் மூவரும் அகில சிருட்டி
திதிநாசங் கள்செய்வார்
அவர்பிறர் மதிகளும் முக்கா லங்களும்
அறிவார் விபுவாவார்
தவமிகு குருவே இவனுக்கு அவைபோல்
சற்றுங் காணேனே.

தவத்தின் மிகுந்த ஆசிரியரே! இந்த ஞானி பிரம விஷ்ணு ருத்திரராகிய மும்மூர்த்திகளுடன் எவ்விதம் சமானமாவான்? உருத்திரன் முதலிய மும்மூர்த்திகளும் சகத்தை உண்டாக்குதலும் இரட்சித்தலும் அழித்தலும் செய்வார்கள். அவ் ஈஸ்வரர் பிறர் அறிவையும் திரிகாலங்களையும் தெரிவார். வியாபகம் ஆவார்கள்; இந்த ஞானிக்கு அவற்றைப் போல எவ்வளவும் பார்த்திலேன்.

விபு – எங்கும் பரவியது; கடவுள்.

| | முத்தொழில் | | மும்மூர்த்திகள் | | வடசொல் |
|---|---|---|---|---|---|
| 1. | ஆக்கல் | – | அயன் | – | சிருஷ்டி |
| 2. | அளித்தல் | – | அரி | – | ஸ்திதி |
| 3. | அழித்தல் | – | அரன் | – | சம்ஹாரம் |

(40)

மேல்வினாவிற்கு உத்தரம்.

149. தடத்து நீர்நிலாத் திரிஎரி உபயமும்
தழுவும்ஊர் தனைக்காக்கும்
குடத்துநீர் விளக்கினில் ஒளியி ரண்டும்ஓர்
குடும்பமாத் திரங்காக்கும்
அடுத்த மைந்தனே ஞானியும் ஈசனும்
அறிவினால் பிரிவில்லை

**கெடுத்த மாயையின் குணங்களால் மேலென்றுங்**
**கீழென்றும் பிரிவாமால்.**

சத்துக்களையடைந்த புத்திரா! தடாகத்து சலமும் பகல் வர்த்தியுமாகிய இரண்டும் பொருந்திய ஓர் ஊரைக் காக்கும், கடத்து சலமும் தீப்பிரகாசமுமாகிய உபயமும் ஒரு குடும்பத்தை மாத்திரம் காக்கும். ஞானவானும் ஈஸ்வரனும் ஞானத்தினால் வேறுபாடிலர். ஒன்று படாமற் கெடுத்த மாயையின் தன்மைகளால் உயாவென்றும் தாழ்வென்றும் வேறாகும்.

ஏரிநீர் ஊரையும், கடநீர் இல்லத்தையும் காக்கும் இடத்தில் சிறிது பெரிதென்னும் தொழிற்பேதமேயன்றிக் காக்கும் தன்மை ஒன்றாதல் போல, ஈசனுக்கும் ஞானிக்கும் மாயை அவித்தைகளால் தாரதம்மியம் இருக்கினும் அறிவின் தன்மையால் பேதமின்று என்பதாம்.

ஈசன் – சத்துவகுணம் – மாயை
ஞானி – ரசோ குணம் – அவித்தை (41)

இதுவுமது

**150. நரரின் மன்னனைச் சித்தரைப் போலவே**
**நாரணன் முதலான**
**சுரர்கண் மாயைவல் லவர்அணி மாதிகள்**
**தொக்கமா தவம்மிக்கோர்**
**தரணி மானிடர்க்(கு) அவைகள்இல் லாமையால்**
**தாழ்வுள ரானாலும்**
**பிரம பாவனை யால்இவர் அவர்எனும்**
**பேதமொன்(று) இலைபாராய்.**

மானிடரில் அரசனும் சித்துப்புருடனும் எங்ஙனம் அதிகாரத் தானும் மகிமையாலும் மேலிட்டார்களோ அவர் போலவே திருமால் முதலிய தேவர்களும் மாயையில் வல்லமை உடையவர்கள். ஆதலால் அணிமா முதலிய அட்ட சித்திகள் நிறைந்த மகா தவத்தில் மிகுந்தவர் ஆவர்; பூமியிலுள்ள மனிதர்களுக்கு அவை

இல்லாமையால் தாழ்வை உடையவர்கள் ஆனாலும், பிரம சிருஷ்டியினால் இவர்கள் மானிடரெனவும் அவர்கள் தேவர்கள் எனவும் வேறுபாடு ஒன்றிலர் எனக் காண்பாய்,

அட்டமா சித்திகளாவன. **அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம். ஈசத்துவம், வசித்துவம்** என்பவைகளாம்.

மானிடரில் சித்தருக்குள்ள மகிமைகள் மற்றவர்களுக்கு இன்றாயினும், அம் மானிடத்தன்மையில் ஒப்பாவதுபோலச் சித்துருவமான திரிமூர்த்திகளும் சீவன் முக்தர்களும் தேவத்தன்மை மானிடத் தன்மைகளால் வேற்றுமை உள்ளோராயினும் சித்துத் தன்மையில் ஒப்பார் என்பதாம். (42)

அணிமாதிகள் ஈசனது ஆயின் அறிஞனுக்கு எங்ஙனம் உண்டாயிற்று? எனில் அவரை நோக்கி உபாசனை செய்ததனால் ஆம் எனக்கூறல்.

151. **முத்தி நல்கிய சற்குரு வேபல**
**முனிகளுக்கு அணிமாதி**
**சித்தி பூமியிற் கண்டிருக் கவும்அந்தச்**
**செல்வம்ஈ சனதுஎன்றீர்**
**புத்தி ஒத்திட உரைத்தருள் என்றிடின்**
**புகழும்ஈ சனைவேண்டிப்**
**பத்தி செய்திடும் தவத்தினால் யோகத்தால்**
**பலித்ததென் (று) அறிவாயே.**

வீடு அருளிச் செய்த ஞான தேசிகரே! வியாசர் முதலாய பல இருடிகளுக்கு அணிமா முதலிய அஷ்டமா சித்திகள் உண்டாயிருப்பதை இவ்வுலகத்தில் பார்த்திருக்கவும், அச் செல்வமானது ஈஸ்வரனது என்று சொன்னீர். அச் செல்வம் அவர்களுக்கு எவ்வாறு உற்றனவாயின என்பதை என் புத்தி ஒத்திருக்கும்படி சொல்லவேண்டும் என்றும் கேட்பாயாகில், துதியா நின்ற ஈஸ்வரனை நாடி, மனமொழி மெய்களால் செய்யா நிற்கும் வழிப்பாட்டினாலும், சாந்திராயணாதி தவங்களாலும், அஷ்டாங்க யோகத்தினாலும் கிடைத்தது என்று அறிந்துகொள்வாய்.

சாந்திராயணம் – சந்திரன் கலை தேயத்தேய உணவில் ஒவ்வொரு கவளமாய்க் குறைத்து உண்டு, அது வளர வளர ஒவ்வொன்றாய் உயர்த்தி உண்பதாகிய ஒரு விரதம் சந்திர+அயநம் எனப்பிரியும். அயநம் – ஓட்டம். சந்திரனுடைய கதியைப் பற்றியது எனப் பொருள்படும்.

அஷ்டாங்க யோகமாவது: இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, ஸ்தம்பனம், சமாதி என்பனவாம்.

வசிஷ்டரையும் சிலர் இப் பட்டியலில் சேர்த்துள்ளனர். (43)

முன்புள்ள ஞானிகளைப்போல இவர்களுக்கு அணிமாதிகள் ஏன் இல்லை? என வினாதல்,

**152. சிவசொ ரூபமாம் தேசிக மூர்த்தியே**
**சித்திமுத் திகள் இரண்டும்**
**தவமுளோர் அடைகுவர் எனில்அ வர்கள்போல்**
**சகலமும் அடைவாரோ**
**அவர்கள் பூருவ சித்தியும் ஞானமும்**
**அடைந்ததும் கண்டோமே**
**இவர்கள் ஞானிகள் என்றிடின் சித்திகள்**
**இவர்க்கிலா வகையேதோ.**

சிவாகாரமாகிய குருமூர்த்தியே! அணிமாதி சித்தியும் மோட்சமும் ஆகிய இரண்டையும் தவத்தை உடையவர்கள் அடைவார்கள் என்றால், வியாசர் முதலான தவத்தரைப்போல இக்காலத்துள்ள ஞானிகள் அனைவரும் அடைவார்களா? அத் தவம் உடையவர்கள் முன்புள்ள அணிமாதி சித்தியும் முத்தியும் பெற்றது ஆகமப் பிரமாணத்தால் பார்த்தோம்; இவர்களை ஞானவான்கள் என்று சொன்னால் அணிமாதி சித்திகள் இவர்களுக்கு இல்லாத விதம் யாது?

முத்தி – மோட்சம்; சித்தி – அற்புத வன்மை; சுருதி – எழுதாமறை, ஆகமம் – முதல்வன் வாக்கு; தருமநூல் (44)

மேல் வினாவிற்கு உத்தரம்,

153. காமி யத்தவம் காமியம் ஒன்றையும்
கருதிடாத் தவமென்றும்
பூமி யில்தவம் இருவகைச் சித்தியும்
போதமும் தருமைந்தா
ஆமி வற்றிலொன்(று) இயற்றினார் ஒன்றையே
அடைகுவர் இதுதீர்வை
யாமு ரைத்தஅவ் இரண்டையும் இயற்றினார்
அன்றுள பெரியோரே.

மாணாக்கனே! இச்சிக்கப்படும் பொருளை அடையக் கருதுவதான காமியத்தவம் எனவும், அப்படி இச்சிக்கப்படும் பொருள் ஒன்றையும் அடையக் கருதாததான நிஷ்காமியத்தவம் எனவும் உலகத்தில் தவம் இரண்டு விதமாம். அவற்றுள் காமியத்தவம் சித்தியையும், நிஷ்காமியத்தவம் முத்தியையும் கொடுக்கும்; ஆகிய இவ்விரண்டில் ஒன்றை அப்பியாசம் செய்தவர்கள் அவ் ஒன்றினையே அடைவார்கள்; இது நிச்சயமாம், பூர்வத்திலுள்ள வியாசர் முதலான மகான்கள் நாம் சொன்ன அக் காமியத்தவம் நிஷ்காமியத்தவம் இர்ண்டிலும் முயற்சி செய்தார்கள்.

முன்புள்ள ஞானவான்களில் சிலர் இரண்டு தவத்தையும் அனுசந்தித்ததனால் சித்தி முத்திகள் இரண்டனையும் பெற்றார்கள் என்பதாம்.

காமியத்தவம் – பயன்நோக்கிச் செய்யும் தவம்.

நிஷ்காமியத்தவம் – பயன்நோக்காது செய்யும் தவம். (45)

இதுவுமது

154. அனக மைந்தனே, முத்திஞா னத்தையே
அடைந்தனர் அல்லாமல்

**சௌகன் மாவலி பகீரதன் முதலினோர்**
**சித்திகள் படித்தாரோ**
**இனிய சித்தியை விரும்பினார் சிலர்சிலர்**
**இரண்டையும் முயன்றார்கள்**
**முனிவர் சித்திகள் விநோதமாத் திரந்தரும்**
**முத்தியைத் தாராவே.**

களங்கமற்ற மகனே! சனகராசன், மகாபலிச்சக்கரவர்த்தி, பகீரதராசன் முதலானவர்கள் ஞானத்தை அப்பியசித்து மோட்சத்தைப் பெற்றார்களேயன்றி, அணிமாதி சித்தியை அப்பியாசம் செய்தார்களா? சில முனிவர்கள் இனிமையான அணிமாதி சித்தியை மாத்திரம் விரும்பினார்கள். சில முனிவர்கள் சித்தி முத்திகள் இரண்டனையும் அப்பியசித்தார்கள். முனிவர் அப்பியசித்த அணிமாதி சித்திகளானவை காலம் போக்கும் விளையாடலை மாத்திரம் கொடுக்கும்; மோட்சத்தைக் கொடுக்க மாட்டா.

யோகத்தினால் அணிமாதிகளைப் பெற்றும் அவைகளால் பயன்படாமல் பின்னர் ஞானப்பற்றினால் முத்தியைப் பெற்றார்கள். ஆதலால் அச் சித்திகளை ஞானிகள் விரும்பவில்லை.

மேற்கண்ட மன்னர் (ஞானியர்) பட்டியலில் ஜடபரதரையும் சிலர் சேர்த்துள்ளனர்.

அனகம் – பாவமற்றது. (46)

சித்திகளில் பயன் இன்று என்பது தெரிந்தும் சிவஞானிகள் ஏன் அதை விரும்புகிறார்கள்? என வினாதலுக்கு உத்தரம்.

155. **யோக ஞானமே முத்தியைத் தருமெனில்**
**ஒழிந்தசித் திகள்வேண்டி**
**மோக மாயுடல் வருந்தினார் சிலசில**
**முத்தர்கள் ஏனென்றால்**
**போக மாய்வரும் பிராரத்த கன்மங்கள்**
**புசித்தன்றோ நசித்தேகும்**

**ஆகை யால் அந்தச் சித்திகள் பிராரத்தம்**
**ஆகும்என் றறிவாயே.**

ஐக்கிய மான அத்துவித ஞானமே மோட்சத்தைக் கொடுக்கு மாயின் அது நீங்கிய அணிமாதி சித்திகளை விரும்பிச் சில சீவன் முத்தர்கள் தேக வருத்தமுற்றார்கள். அவ்வாறு வருந்தியது யாதினால் என்னில். அனுபோக மாய் வருகின்ற பிராரத்த கன்மங்கள் ஆனவை புசித்தல்லவா கெட்டுப்போம். ஆதலால், அவர்கள் பெற்ற அணிமாதி சித்திகள் இச்சா பிராரத்தமாகுமென்று அறிந்து கொள்வாயாக.

சித்தியை விரும்புவது பிராரத்த கன்மம் என்பதாம். சூடாலை முதலிய சிற்சில ஜீவன் முத்தர்கள் மோட்சத்தை தருதல் ஒழிந்த அணிமாதி சித்திகளை மோகங்கொண்டு விரும்பி உடல் வருந்தினர் என்பர். அவ்வாறு செய்ததற்கு அவர்களுடைய பிராரத்த கர்மமே காரணமாம். யோக ஞானம் - யோகத்தின் வாயிலாக உண்டாகும் தத்துவ ஞானம். (47)

ஐயந்தெளிவித்த ஆசிரியரை அன்பின் வியந்து துதித்தல்

156. **இலக்கம் ஆயிரம் சுருதியால் ஊகத்தால்**
**என்மனம் அசையாமல்**
**பிலக்க வேண்டுமென் (று) அருள்குரு வேயகப்**
**பிராந்திபோய்த் தெளிவானேன்**
**துலக்க மானகண் ணாடியை அடிக்கடி**
**துலக்கினால் பழுதன்றே**
**அலக்கண் மாற்றிய தேவரீர் எனக்குரை**
**அமுதங்கள் தெவிட்டாவே.**

அளவிறந்த வேதங்களினாலும் யுத்தியினாலும் என் மனமானது சலனமின்றி ஸ்திரமாயிருக்க வேண்டும் என்று எனது சங்கைகள் தீரும்படி உத்தரம் அருளிய தேசிகரே! எனது மனதின் கண்ணுள்ள மயக்கம் நீங்கித் தெளிவையடைந்தேன். விளக்கமான கண்ணாடியை மேலும் மேலும் விளக்கினால் குற்றமல்லவே; எனது பவத் துன்பத்தை

நீக்கிய சுவாமிகளே! அடியேனுக்கு அருளிய உபதேச அமுதங்கள் புசிக்கப் புசிக்கத் தெவிட்டாவாம். அலக்கண் – துன்பம்; பவம் – பிறப்பு, பிராந்தி – மயக்கம். பிலக்க வேண்டும் – ஸ்திரமாயிருக்க வேண்டும். சங்கை – ஐயம். (48)

கிரம சிருஷ்டியான சீவேஸ்வர சகத் விவகாரங்கள் அறிஞனது பிராரத்தம் என்று அறிந்த சீடன் அதற்கு வித்தாக உபகற்ப சிருட்டியினால் அமைந்து கிடக்கின்ற சஞ்சிதத்தைக் கெடுக்கும் பொருட்டு அஃது நசிக்கும் என்ற இரண்டு வகையில் யாது உண்மை? என வினாதல்.

**157. கைத வங்களைச் சாத்திரஞ் சொல்லுமோ**
**கருணையால் எனையாளும்**
**ஐய னேகுரு வேஎவ ராகிலும்**
**அனுபவத் தாலன்றிச்**
**செய்த கன்மங்கள் விடாதென்ற வசனமும்**
**சென்மசஞ் சிதம்வேகத்**
**துய்ய ஞானத்தீ சுடுமென்ற வசனமும்**
**துணிவதெப் படிநானே.**

கிருபையினால் அடியேனை ஆளாநின்ற என்னையாளும் ஆசிரியரே! எனது குரு சுவாமியே! அசத்தியங்களை நூல்கள் உரைக்குமோ? யாவராகிலும் தாங்கள் செய்த கர்ம பலன்கள் அனுபவித்து ஒழித்தால் அல்லது நீங்காதென்ற வாக்கியமும் அனந்த சனனங்கட்குச் காரணமான சஞ்சித கருமங்கள் வெந்து நீறாகும்படி பரிசுத்தமான ஞானாக்கினியானது எரிக்கும் என்ற வாக்கியமும் ஆகிய இவ்விரண்டில் இது வாஸ்தவம் இது அன்று என அடியேன் தெளிவது எவ்விதம் என்றவாறு.

சஞ்சித கன்மம் அனுபவித்தால் தீரும், ஞானத்தால் தீரும் என்ற வசனங்களில் யாது உறுதி? என வினாவினதாம்.

கைதவம் – பொய்; சூது; துன்பம். (49)

மேல் வினாவிற்கு உத்தரம்.

158. சீவ பேதங்கள் அளவிலை மைந்தனே
செய்கையும் அளவில்லை
ஆவ வாம்அவர் அவர்அதி காரங்கள்
அறிந்துபக் குவநோக்கிப்
பூவ லர்ந்துபின் பலங்கள்காட் டுவனபோல்
பூருவம் சித்தாந்தம்
காவல் வேதங்கள் இரண்டையும் வசனிக்கும்
காண்டமூ வகையாலே.

மாணாக்கனே! சீவர்களுடைய வேறுபாடுகள் மட்டில்லை. அவர்கள் செயலும் மட்டில்லை; அவரவர்களுக்கு ஆவன ஆம்; ஆதலால் அவர்களது அதிகாரம் தெரிந்து பருவம் பார்த்து, மலரானது விகசித்துப் பின்பு பலனைக் கொடுப்பது போல, நம்மைக் காக்கின்ற சுருதிகள் கர்ம காண்டம், பத்தி காண்டம், ஞான காண்டம் என்னும் மூன்று பகுப்பினால் பூருவபட்ச வாக்கியமும் சித்தாந்த வாக்கியமும் ஆகிய இரண்டு வகையும் சொல்லும்.

சீடனது பக்குவத்திற்கு ஏற்கப் பூருவபட்சம் சித்தாந்தம் இரண்டாக வேதம் கூறும் என்பதாம், விகசித்து – மலர்ந்து.

1. எவராகிலும் அனுபவித்தாலன்றிச் செய்த கருமங்கள் விடா என்பது பூர்வபக்கம்.
2. சென்ம சஞ்சிதம் வேவத் துய்ய ஞானத் தீச் சுடும் என்பது சித்தாந்தம். (50)

இதுவுமது

159. ஆன பாவிகள் அடைவன நரகங்கள்
அவசியம் ஆனாலும்
தான மந்திர விரதஓ மங்களால்
தவிரும்என் பதுபொய்யோ
ஈன மாம்பல சன்மசஞ் சிதவினை
எத்தனை யானாலும்

**ஞான மாங்கனல் சுடுமென்ற மறைமொழி**
**நம்பினால் வீடுண்டே.**

கொடிதான பாவிகள் நரகங்களை அடைவது உண்மை யானாலும், தானங்களினாலும் மந்திரங்களினாலும் விரதங்களினாலும் யாகங்களினாலும் ஒழியும் என்பது அசத்தியமா? இழிவாகிய அனந்த சனனத்தைக் கொடுக்கும் சஞ்சித கன்மம் எவ்வளவு சேர்ந்திருக்கினும் ஞானாக்கினியானது எரிக்கும் என்ற வேத வாக்கியத்தை நம்புவான் ஆனால் முத்தி உண்டாகும்.

அனுபவித்துத் தீரும் என்ற பட்சத்தை நீக்கி, அறிவினால் கெடும் என்ற சித்தாந்தத்தைக் கொண்டு அறிவை வளர்க்கில் அதனால் சஞ்சிதம் கெடும் என்பதாம்.

சஞ்சிதம் – அனுபவித்தது போக எஞ்சியுள்ள கருமம்.

சித்தாந்தம் – முடிந்த முடிவு.

நரகம் – பாதாளம்

பட்சம் – பக்கம்; கட்சி

பாவநாசத்தின் பொருட்டு விதிக்கப்பட்ட கர்மம் பிராயச்சித்தம் எனப்படும். அவை: கோதானம் முதலியன செய்தல், பஞ்சாட்சரம் முதலிய மந்திர ஜபம், கிருச்சிரம் சாந்திராயணம் முதலிய விரதங்களைப் புரிதல், அசுவமேதாதி யாகங்களை இயற்றல் முதலியனவாம். ஈசுவர நாம உச்சாரணம், கங்கா ஸ்நானமும் கொள்க. (51)

சஞ்சிதத்தைக் கெடுக்கும் ஞானம் இருக்கக் கன்மத்தை விரும்புவது ஏன்? என வினாதல்.

**160. என்ம னந்திருக் கோயிலாத் தினங்குடி**
**யிருந்தருள் குருமூர்த்தி**
**சென்ம சஞ்சித வினைகள்வேர் அறுத்திடும்**
**தேவரீர் மெய்ஞ் ஞானம்**

**தன்ம யந்தரு மகிமையை விபுதராம்**
**சமர்த்தரும் அறியாமல்**
**கன்ம மாங்குழி யினில்விழுந் தழிகின்ற**
**காரணம் உரையீரே.**

அடியேன் இதயாம்பரமே சிறந்த கோயிலாக எப்போதும் குடிகொண்டிரா நின்ற தேசிக மூர்த்தியே! சுவாமிகள் போதிக்கும் உண்மை ஞானமானது சனனத்திற்குக் காரணமான சஞ்சித கர்மங்களின் மூலமாகிய அவித்தையை அறியா நிற்கும். சமஸ்தமும் தனது சொரூபம் ஆகும்படி செய்யும் பெருமையை வானவரும் உலகத்தாரும் தெரியாமல் கிரியா மார்க்கம் என்கிற படுகுழியில் வீழ்ந்து கெடுகின்ற காரணத்தைச் சொல்வீர்.

இதய அம்பரம் – மனம். விபுதரர், சகத்துளோர் எனவும் பாடம்.
(52)

மேல் வினாவிற்கு உத்தரம்

161. **அழிவி லாததற் பதந்தனை மைந்தனே**
**அகமுகத் தவர்சேர்வார்**
**வழிந டப்பவர் பராமுகம் ஆகினான்**
**மலர்ந்தகண் இருந்தாலும்**
**குழியில் வீழ்வர்காண் அப்படி வெளிமுகம்**
**கொண்டுகா மிகளானோர்**
**பழித ரும்பிற விக்கடல் உழலுவார்**
**பரகதி அடையாரே.**

புத்திரா! கெடாத பிரமபதத்தை அந்தர் முகமுடையவர்கள் அடைவார்கள்; மார்க்கத்தில் செல்கின்றவர்கள் பாராமுகமானால் விகசிதமான நேத்திரங்கள் இருக்கினும் பள்ளத்தில் விழுவார்கள். அவ்வண்ணம் பகிர்முகமே தமக்குப் பயனாகக் கொண்டு விடயப் பயிற்சியை உடையவர்களாய் உழலும் காமிகள் பழியைக் கொடுக்கின்ற பிறவிக் கடலுள் உழல்வார்கள்; முத்தியைப் பெற மாட்டார்கள்.

அகமும் இன்றிப் பகிர்முகமாகச் செல்லுதலே கன்மங்களில் செல்லுதற்கு ஏது என்பதாம்.

பகிர்முகப் படுதலாவது அடங்காச் சித்தமுடையவராதல். சொரூப நாட்டமாவது திருசியம் அனைத்தையும் அஸ்தி பாதிப்பிரிய (சச்சிதாநந்த) வடிவமாகக் காண்டல். விகசிதம் – மலர்ச்சி. (53)

சீவச்செயல் இவை, சிவச் செயல் இவை எனத் தெளியும் நிமித்தம், சீவன் பகிர்முகமாதல் ஈசன் செய்விக்கும் செயலேயன்றிச் சீவர்கள் என் செய்வார்கள்? என்ற வினாவிற்கு உத்தரம்.

**162. சிறந்த நன்மையும் தீமையும் ஈசனார்**
**செய்விக்கும் செயல்அன்றோ**
**பிறந்த சீவர்கள் என்செய்வார் அவர்கள்மேல்**
**பிழைசொலும் வகையேதோ**
**துறந்த தேசிக மூர்த்தியே என்றிடில்**
**சுருதிநூற் பொருண்மார்க்கம்**
**மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண்**
**மைந்தனே அதுகேளாய்.**

சகல பற்றுக்களையும் நீத்த குருவே! சிறப்பான நன்மையும் தீமையும் ஈசனார் செய்விக்கும் செய்கை அல்லவா? சனித்த சீவர்கள் என்ன செய்வார்கள்? அச்சீவர்கள்மேல் குற்றம் கூறற்குக் காரணம் என்ன என்று கேட்பாயாகில் வேத சாஸ்திரார்த்த வழியை மறந்த அஞ்ஞானிகள் சொல்லுகிற மயக்கம்; புத்திரனே! அதைக் கேட்பாய். (54)

இதுவுமது

**163. திகழ்ந்த ஈசனார் சிருட்டியும் சீவனார்**
**சிருட்டியும் வெவ்வேறே**
**சகந்த னிற்பொது ஈசனார் சிருட்டிகள்**
**சராசரப் பொருளெல்லாம்**

அகந்தை யாம்அபி மானங்கள் கோபங்கள்
ஆசைகள் இவையெல்லாம்
நிகழ்ந்த சீவனார் சிருட்டிகள் ஆகுங்காண்
நிமலனார் செயலன்றே.

சுத்தப் பிரமமாக விளங்கா நின்ற ஈஸ்வர சிருட்டியும் சீவ சிருட்டியும் வேறு வேறாம். உலகத்தில் யாவர்க்கும் பொதுவான தாவர சங்கமங்கள் அனைத்தும் ஈஸ்வர சிருஷ்டிகளாம். நான் என்னும் அகந்தையாகிய அபிமானங்களும் துவேஷங்களும் ஆசைகளும் ஆகிய இவைகள் அனைத்தும் விளங்கிய சீவ சிருட்டிகளாம். நின்மலமான ஈஸ்வர சிருஷ்டி சீவ சிருட்டிகள் அல்ல.

ஈஸ்வர சிருஷ்டி சீவ சிருஷ்டிகள் இவையெனப் பகுத்துக் கூறினதாம்.

தாவர சங்கமங்கள் – அசையாப் பொருள்களும் அசையும் பொருள்களுமாம். (55)

இதுவுமது

164. மூவ ராம்பரன் சிருட்டிகள் உயிர்க்கெலாம்
முத்திசா தனமாகும்
சீவ னாரது சிருட்டிகள் தங்களைச்
செனிப்பிக்கும் பிணியாகும்
தாவ ராதிகள் நசித்திடின் ஒருவர்க்கும்
சனனங்கள் நசியாவாம்
கோப மாதிகள் நசித்திடின் பந்தமாம்
கொடும்பிற விகள்போமே.

திரிமூர்த்தி ரூபமான ஈஸ்வரனுடைய சிருட்டிகள் சீவர்கள் அனைவர்க்கும் வீடு அடைதற்குச் சாதனமாம். சீவ சிருட்டிகள் ஆனவை சீவர்களைப் பிறப்பிக்கின்ற சஞ்சித ரோகமாம். ஈஸ்வர சிருட்டியாகிய தரு முதலிய பஞ்ச பூத பௌதிக வடிவங்கள் நசிக்கில்

யாதோர் உயிர்க்கும் ஜனனம் இறக்கின் பந்தமான கொடிய ஜனனங்கள் நசிக்கும்.

செனனங்கள் – பிறவிகள். நசிக்கும் – இல்லாமற் போகும்.

ஈஸ்வர சிருட்டியான பஞ்சபூத பௌதிக முதலிய தத்துவங்கள் முக்திக்குச் சாதனமும் சீவ சிருட்டியான காமக் குரோதாதிகள் பவத்திற்கு ஏதுவுமாம் என்பதற்கு உத்தி கூறினதாம்.

ஆகவே ஈசுர சிருட்டி மோட்ச சாதனமும், ஜீவ சிருஷ்டி பந்த சாதனமுமாம். சீவர்கள் மோட்சம் அடைவதற்கு ஈஸ்வர சிருஷ்டி தவிர வேறு வழியில்லையாம். இதனை நீ யூகித்துப்பார். (56)

இதுவுமது

165. ஈசர் காரியம் பிரளயத்(து) ஒழியவும்
எவர்பவம் ஒழிந்தார்கள்
தேச காலதே காதிகள் இருக்கவும்
சீவகா ரியமோகம்
நாச மாகிஅவ் விவேகத்தின் உயிரொடு
ஞானமுத் தர்களானார்
பாச மோகங்கள் பசுக்களின் செயலன்றிப்
பசுபதி செயலன்றே.

ஈஸ்வர சிருட்டியான பஞ்சபூத பௌதிகங்கள் பிரளய காலத்தில் நாசமாகவும் யாவர் பிறவியை ஒழிந்தார்கள். தேசம் காலம் தேகம் முதலிய ஈஸ்வர சிருட்டி அழியா திருக்கும் போதே சீவ சிருட்டியான காமம் முதலியன நசிப்பித்து விவேகத்தினால் சீவன் முத்தர்கள் ஆனார்கள். ஆதலால் காம வெகுளி மயக்கங்கள் சீவச் செயலேயன்றிச் சிவச்செயல் அன்று.

ஈஸ்வர சிருஷ்டியிருக்கச் சீவ சிருஷ்டி நசிக்கின் அப்போதே வீடு அடைதலால் காமாதிகள் சீவச் செயலேயன்றிச் சிவச்செயலன்று. பசுபதி – ஈஸ்வரன். (57)

இதுவமது

166. அச்சு வத்தமென்(று) ஒருமரம் அதிலிரண்டு
அரும்பறவை கள்வாழும்
நச்சும் அங்கொரு பறவைஅம் மரக்கனி
நன்றுநன் றெனத்தின்னும்
மெச்சும் அங்கொரு பறவைதின் னாதென
விளங்கிஅப் பொருளாக
வைச்சு மாமறை சீவனை ஈசனை
வகுத்தவா(று) அறிவாயே.

அரசென்று சொல்லப்பட்ட விருட்சம் ஒன்றுள்ளது. அத் தருவில் அரிய பட்சிகள் இரண்டு வாழ்ந்து கொண்டிருக்கும் அவ்விடத்து (போகத்தை) விரும்புகிற ஒரு பட்சியானது அத்தருவின் பழத்தை நல்லது என்று புசிக்கும்; அதன்கண் துதிக்கப் பெற்ற மற்றொரு பட்சியானது புசியாது என்று அப்பட்சிகளைக் குறிப்புப் பொருளாக வைத்து மகாவேதமானது சீவனையும் ஈசனையும் பகுத்த வண்ணம் நீ விசாரித்து அறியக் கடவாய்.

அச்சுவத்தம் என்பது தலைகீழான மாயா விருட்சம். எனக் கொள்க. மாயை—மூலப் பொருள்; பொய்த் தோற்றம்.

மாயையில் வாழ்கின்ற சிவேஸ்வரர்களின் தாரதம்மியம் இஃதெனப் பகுத்துக் கூறினதாம். (58)

இதுவுமது

167. இந்தச் சீவனால் வரும்அறு பகையெலாம்
இவன் செயல் அல்லாமல்
அந்தத் தேவனால் வருமென்ற மூடர்கள்
அதோகதி அடைவார்கள்
இந்தச் சீவனால் வரும்அறு பகையெலாம்
இவன்செயல் அல்லாமல்
அந்தத் தேவனால் அன்றெனும் விவேகியே
அமலவீ(டு) அடைவாரே.

இச் சீவனால் உண்டான காமம் முதலிய பகைகள் ஆறும் இவன் செயலால் உண்டாகுமே அன்றி அவ் ஈசனால் உண்டாகும் என்ற அறிவிலிகள் நரகத்தை அடைவார்கள். இச் சீவனால் உண்டாகும் சட்பகைக்ள் முதலிய அனைத்தும் இச் சீவ சிருஷ்டியே அன்றி அவ் ஈசனால் வந்தன அல்ல,என்னும் விவேகிகளே நின்மலமான மோட்சத்தை அடைவார்கள்.

காமாதிகளை ஈஸ்வர சிருஷ்டியெனக் கருதாமல் சீவசிருஷ்டி யெனக் கொண்டு அவற்றை விசாரத்தால் கெடுப்பின்முக்தி உண்டாம் என்பதாம்.

சட்பகைகள்; காமாதி பகையாறு;

1. காமம், 2. குரோதம், 3. உலோபம், 4. மோகம், 5. மதம், 6.மாச்சரியம்.

**விளக்கம்:** காமாதிகளை ஈஸ்வர சிருஷ்டி என்று விபரீதமாக உணர்ந்து அவற்றை நீக்காதிருப்பவர் நரகம் அடைவர். அவற்றைச் சீவசிருஷ்டி என்று விபரீதமின்றியுணர்ந்து நீக்க முயல்பவர் மோட்ச மடைவர் என்பது இங்கு உணரற்பாலதாம். (59)

முன்பு ஈஸ்வர சிருஷ்டி பொது என்றமையால் அவரும் பொதுவாக வேண்டுமே. அங்ஙனமாயின் சீவர்களிடத்தில் பட்சபாதம் வருவானேன் என்ற வினாவிற்கு உத்தரம்.

**168. நலமெய் ஐயனே எல்லவர்க் கும்தெய்வ**
**நாயகன் பொதுவானால்**
**சிலரை வாழ்வித்தும் சிலரொடு கோபித்தும்**
**செய்வதேன் என்றாயேல்**
**குலவு மைந்தரைத் தந்தைபோல் சிட்டரைக்**
**குளிர்ந்துதுட் டரைக்காய்வன்**
**கலைகள் நல்வழி வரச்செயும் தண்டமும்**
**கருணையென்(று) அறிவாயே.**

உண்மையே திருவுருக் கொண்டு வந்த ஆசிரியரே! அனைவர்க்கும் ஈஸ்வரன் பொதுமையானால் சிலரை இன்புறவும் சிலரைத் துன்புறவும் செய்வது என்னை என்று கேட்பாயாகில், குலவா நின்ற புத்திரர்களைப் பிதா தக்கபடி நேசிப்பதும் கோபிப்பதும் போல அவ் ஈஸ்வரன் சற்சனருக்கு இன்பம் செய்து துர்ச்சனருக்குத் துன்பம் செய்வன். சாஸ்திரங்களின் விதிவழி ஒக்கும்படி சீவர்களைச் செய்யும சிட்சையும் கிருபையினால் என்று உணர்வாய்.

சீவர்கள் சுகப்படும் பொருட்டு வருத்திய அஃதும் கருணையன்றிப் பட்சபாதமன்று என்பதாம். (60)

அங்ஙனம் ஆயின் ஈசன் யாவரையும் ஏன் இரட்சிக்க வில்லை? என வரும் சங்கைக்கு உத்தரம்.

169. **மனைவி லங்கறு மைந்தனே கற்பக**
**மரம்கனல் புனல்மூன்றும்**
**தனைய டைந்தவர் வறுமையும் சீதமும்**
**தாகமும் தவிர்த்தாளும்**
**அனைய ஈசனும் அடைந்தவர்க்(கு) அருள்செய்வான்**
**அகன்றவர்க்(கு) அருள்செய்யான்**
**இனைய குற்றங்கள் எவர்குற்றம் ஆகுமென்(று)**
**எண்ணிநீ அறிவாயே.**

சம்சார விலங்கு நீங்கிய புத்திரா! கற்பக விருட்சமும் அக்கினியும் சலமும் ஆகிய இவை மூன்றும் தம்மைச் சேர்ந்தவர் களது தரித்திரத்தையும், குளிரையும், தாகத்தையும் நீக்கி இரட்சிக்கும். அத்தன்மையினவாக ஈஸ்வரனும் தன்னை அடைந்த வர்களுக்குக் கிருபை செய்வார். அடையாதவர்களுக்குக் கிருபை செய்யார். இத்தன்மையான குற்றங்கள் யாவர் குற்றமாம் என்று ஆலோசித்து நீ தெரிந்து கொள்வாய்.

கற்பக விருட்சம் முதலியவற்றைச் சார்ந்தவர்களுக்குத் துன்பம் நீங்கி இன்பம் உண்டாவதைப்போல், ஈசனைச் சார்ந்தவர்களுக்குப்

பவத் துன்பம் நீங்கி வீட்டின்பம் உண்டாவது உண்மையென அறிந்து அவனைச் சார முயற்சி செய்யாதது இவன் குற்றமே என அறிக.

மனை விலங்கு – சம்சார் விலங்கு. (61)

ஞானம் உண்டாகச் சீவன் முயலும் மரபு கூறல்.

170. **ஒன்று கேள்மகனே பூமான் முயற்சியால்**
**உரைத்துமா னிடர்க்குஈசன்**
**நன்று செய்யவே காட்டிய நூல்வழி**
**நடந்துநல் லவர்பின்னே**
**சென்று துட்டவா தனைவிட்டு விவேகியாய்ச்**
**செனித்தமா யையைத்தள்ளி**
**நின்று ஞானத்தை யடைந்தவன் பவங்கள்போம்**
**நிச்சயம் இதுதானே.**

புத்திரா! ஒரு வசனம் கேட்பாய், புருஷ பிரயத்தனத்தால் அன்றி வேறொன்றால் ஆகாதென முன்னர்க் கூறி, பின்பு ஈஸ்வரன் மனிதர்கள் நன்மையைச் செய்யும் பொருட்டுக் காண்பித்த சுருதி மார்க்கத்தில் சென்று, சத்துக்கள் பின் திரிந்து முன்னுள்ள குரோதாதியான அசுத்த வாசனையை நீக்கி, ஆன்மா, அனான்மா என்கிற சிற்சடங்களைப் பகுத்தறியும் விவேகத்தையுடையவனாய், கற்பனையாக உதித்த சடமான மாயையை நீக்கி, விலட்சணமான கூடஸ்தனாயிருந்து பிரம சைதன்னியத்தைப் பெற்றவனுடைய பிறவிகள் நீங்கும்; இதுவே சத்தியமாம்.

சீவன் தனது முயற்சியினால் ஈஸ்வர அனுக்கிரகம் பெற்று, அவன் வாக்கியமான வேதாந்த முடிவைக் குரு முகமாக விசாரித்து, அதனால் விவேகமுண்டாய் அஞ்ஞானம் நீங்கி ஞானம் உதயமாகில் பவம் நீங்கும். (62)

யாதினால் இந்த ஞானம் உதிக்கும்? என்ற வினாவிற்கு உத்தரம்.

171. **இந்த ஞானந்தான் வருவதெப் படியெனில்**
**இடைவிடா விசாரத்தால்**

**வந்த டைந்திடும் விசாரந்தான் ஏதெனின்**
**மனாதியாம் சரீரத்தில்**
**இந்த நானெவன் சித்தெது சடமெது**
**இரண்டுமொன்றாக்கூடும்**
**பந்த மேதுவீ டேதென உசாவுதல்**
**விசாரமென்(று) அறிவாயே.**

இப்பிரம ஞானமானது உதிப்பது எவ்வண்ணம் என்று கேட்பாயாகில் இடையறாத ஆத்ம விசாரணையால் வரும்; விசாரணையாவது யாதுஎனில் மனம் முதலிய தேகத்தில் இருக்கின்ற இந்த நான் யாவன்? சித்தென்பது யாது? சடமென்பது யாது? சித்தும் சடமும் ஆகிய இரண்டும் ஒன்றாகக் கூடப்பெற்ற பந்தம் யாது? அதனை விடப் பெற்ற முத்தி யாது? என விசாரித்தல் விசாரணையென்று அறிந்து கொள்வாய்.

சிற்சட இலக்கணங்களைப் பகுத்தறியும் விசாரமே ஞானம் உதிப்பதற்கு மூலம் என்பதாம். (63)

கன்மம் முக்கியம் என்னும் கொள்கை நீங்கும் பொருட்டு ஞானம் உதிப்பதற்குச் சற்கருமம் இருக்க விசாரம் யாதுக்கு? என்ற வினாவிற்கு உத்தரம்.

**172. போன சன்மங்கள் தமில் அனுட் டித்தநற்**
**புண்ணிய பரிபாகம்**
**ஞான மாகுமே விசாரமேன் என்றிடில்**
**நாம்உரைத் திடக்கேளாய்**
**ஆன புண்ணியம் ஈசுரார்ப் பணஞ்செயின்**
**அசுசிபோம் சுசியாகும்**
**மான தம், பினை விசாரித்து ஞானத்தை**
**மருவும்என் றறிவாயே.**

முன் சனனங்களில் அப்பியாசஞ் செய்த சற்கரும பரிபாகத்தால் ஞானம் உதிக்குமே, ஆன்மா அனான்மா என்கிற விசாரணை யாதுக்கு? என்றாயாகில், யாம் சொல்லுகிற உத்தரத்தைக் கேட்பாய்.

தத்தம் வருண ஆச்சிரமங்கட்குரிய சற்கருமத்தை பல அபேட்சை யின்றி ஈஸ்வரப் பிரீதி செய்யில் அந்தக் கரணத்திலுள்ள அசுத்தம் நீங்கும், சித்த சுத்தி வரும்; அம் மனம் பின்பு சிற்சட விசாரஞ்செய்து ஞானத்தைப் பொருந்தா நிற்கும் என்று தெரிந்துகொள்.

நிஷ்காமியமாகச் செய்யும் சற்கருமம் சித்த சுத்தியையும் விசாரம் ஞானத்தையும் கொடுக்கும்; ஆதலால் விசாரமே வேண்டும்.

மானதம் –. மனம்; பினை – பி(ன்)னை; பொருந்தா நிற்கும் – பொருந்தும். (64)

பலபேற்றையும் தரத்தக்க வலியுள்ள கன்மம் ஞானத்தைத் தராதோ? விசாரம் யாதுக்கு? என வினாதல்.

**173. பத்தி யும்வயி ராக்கிய மும்பர**
**லோகமும் அணிமாதி**
**சித்தி யும்தவ நிட்டையும் யோகமும்**
**தியானமும் சாரூப**
**முத்தி யும்தரும் விசித்திர கருமங்கள்**
**மோகமாத் திரந்தள்ளும்**
**புத்தி யும்தரல் அருமையோ விசாரமேன்**
**புண்ணிய குருமூர்த்தி.**

தரும சொரூபமான ஆசிரியரே! ஈஸ்வர பத்தியையும் நிராசையையும் சுவர்க்காதி லோகங்களையும், அணிமா முதலிய அஷ்டமா சித்திகளையும், தவமும், சமாதியையும் தியானங்களையும் சாரூப பத முத்தியையும் ஆகிய இவற்றைக் கொடுக்கின்ற பல சத்தியுள்ள கன்மங்களானவை அஞ்ஞானத்தைக் கெடுக்கின்ற அறிவையும் கொடுப்பது அரியதோ? விசாரணை யாதுக்கு? (65)

மேல்வினாவிற்கு உத்தரம் கூறுவான் தொடங்கித் திருஷ்டாந்தம் கூறல்.

**174. வேட மாறிய பேர்களை யறியவே**
**வேண்டினேன் மகனேகேள்**

**கூட மாம்அவர் சுபாவங்கள் சீலங்கள்**
**குறிகளாய்ந்(து) அறியாமல்**
**ஓடி யுங்குதித் தும்தலை கீழ்நின்றும்**
**உயர்ந்தகம் பத்தேறி**
**ஆடி யும்பல கன்மங்கள் செய்யினும்**
**அவருண்மை தெரியாதே.**

மாணாக்கனே! கேட்பாயாக; மாறுவேடங் கொண்டவர்களையறிய விரும்பினால் மறைந்து இருப்பவைகளான அவர்களுடைய குணங்களையும் நடைகளையும் அடையாளங்களையும் ஆராய்ந்து அவர் இனையர் என்று அறியாமல் ஓடியும் குதித்தும் தலைகீழாக நின்றும் உன்னதமான ஸ்தம்பத்திலேறி ஆடியும் இவ்வாறான பல கன்மங்கள் செய்தாலும், அவர்களது யாதார்த்த வடிவம் தெரியமாட்டாது. (66)

தாட்டாந்தங்கூறல் (தாட்டாந்தம் – உபமேயம்)

175. **இன்ன வாறந்தப் பிரமத்தை அறிவிக்கும்**
**இலக்கணத் தால்வேதம்**
**சொன்ன ஞானமும் விசாரத்தால் வருமன்றிச்**
**சுருதிநூல் படித்தாலும்**
**அன்ன தானங்கள் தவங்கள் மந்திரங்கள்**
**ஆசாரங்கள் யாகங்கள்**
**என்ன செய்யினும் தன்னைத்தான் அறிகின்ற(து)**
**இவைகளால் வாராதே.**

இத்தன்மையைப் போலப் பிரம சொருபத்தைத் தெரிவிக்கும் லட்சணத்தால் சுருதி சொல்லிய பிரம ஞானமும் விசாரணையினால் வருமேயல்லாமல், வேத சாஸ்திரங்களை வாசித்தாலும் அன்னதானங்களும் தவங்களும் மந்திரங்களும் ஆசார்ங்களும் வேள்விகளுமாகிய இவைகளில் எந்தக் கருமங்களைச் செய்தாலும் ஆத்மாவாகிய தன்னைத் தெரிந்துகொள்வது இக்கன்மங்களால் வரமாட்டாது.

ஒருவன் உண்மையைத் தெரிவிக்கும் சத்தி உணர்வுக்கேயன்றித் தொழிற்கு இன்மை போல, ஞானத்தை அறிவிக்கும் சத்தி விசாரத்திற்கே யன்றிக் கன்மத்துக்கு இன்று என்பதாம் (67)

ஞானம் உதிப்பதற்கு நீங்க வேண்டிய அஞ்ஞானம் கருமத்தால் அன்றி விசாரத்தால் எங்ஙனம் நீங்கும் எனல்.

**176. துளங்கு தர்ப்பணம் அழுக்கறக் கைக்கொண்டு**
**துலக்கினால் போம் அன்றி**
**விளங்கு புத்தியால் உலகிலார் துலக்கினார்**
**விமலதே சிகமூர்த்தி**
**களங்கம் ஆகும் அஞ் ஞானமும் அப்படிக்**
**கருமத்தால் கழுவாமல்**
**உளங்கு றித்தஞா னத்தினால் எப்படி**
**ஒழியும்ஈ(து) அருள்வீரே.**

நின்மலமான குருமூர்த்தியே! விளங்கா நின்ற செப்புக் கண்ணாடியில் உள்ள களங்கம் அறும்படி கையால் விளக்கினால் போமேயல்லாமல் ஜகத்தின்கண் விளங்கா நின்ற அறிவினால் எவர்கள் விளக்கினார்கள்? அவ்வண்ணமே களங்கமாகிய அஞ்ஞானத்தையும் சற்கன்மத்தினால் நீக்கப்படாமல் மனதிற் குறிக்கப்பட்ட அறிவினால் எங்ஙனம் நீங்கும்? இதைச் சொல்வீர்.

அஞ்ஞானத்தைக் 'களங்கம்' என்றது ஆன்மாவை மறைத்தலினால் என்க. (68)

ஞானம் உதிப்பதற்கு அஞ்ஞானத்தை நீக்குதல் விசாரத்தால் அன்றிக் கன்மத்தால் கூடாது எனல்.

**177. தற்ப ணத்தினிற் களிம்புவாஸ் தவமலம்**
**சகசமா தலின்மைந்தா**
**கற்ப ளிங்கினில் கருநிறம் சகசமாக்**
**கறுத்ததன் றாரோபம்**

**தற்ப ணத்தினில் அழுக்கற வேண்டினால்**
**சாதனத் தொழில்வேண்டும்**
**கற்ப ளிங்கில்ஆ ரோபமே கறுப்பெனக்**
**கண்டிட மனம்போதும்.**

மகனே! செப்புக் கண்ணாடியில் களிம்பாகிய உண்மையான அழுக்கானது சுபாவம்; ஆதலால் படிகக் கல்லில் தோன்றிய கருமை நிறமானது சுபாவமாகக் கறுத்ததன்று. கற்பிதமாம். செப்புக் கண்ணாடியில் களங்கம் அறும்படி விரும்பினால் கருவிகளாற் செய்யும் செயல்கள் வேண்டும். படிகக் கல்லில் தோற்றிய கருநிறம் கற்பிதமே என்று பார்த்திட மனமே போதும்.

ஆரோபம் – பொய்த் தோற்றம். (69)

மேல் உத்தரத்திற்கு உபமேயங் கூறல்.

178. **இங்கும் அப்படிச் சச்சிதா னந்தத்தில்**
**இடர்சடம் பொய்மூன்றும்**
**தங்கு மாயையின் கற்பிதம் அன்றியே**
**சகஜவாஸ் தவமன்றே**
**பங்க மாகும் அஞ் ஞானத்தைக் கருமங்கள்**
**பகைசெயா(து) உறவாக்கும்**
**துங்க ஞானமே கருமஅஞ் ஞானத்தைச்**
**சுடுகின்ற நெருப்பாமே.**

இத் தாஷ்டாந்தத்தினும் அத் திருஷ்டாந்தத்தைப் போல அஸ்தி பாதிப் பிரிய ரூபமாகிய தன்னில் அனுர்தம் சடம் துக்கம் ஆகிய மூன்றும் தங்கா நின்ற மாயா கற்பிதமேயல்லாமல் சுபாவமாய் உள்ளதன்று; பழுதான அஞ்ஞானத்தை புண்ணிய கன்மங்கள் ஆனவை பகை பண்ணாமல் நட்பாக்கும்; மேலான ஞானமே கன்ம ரூபமாகிய அஞ்ஞானத்தை எரிக்கின்ற அக்கினியாம்.

அனுர்தம் – அசத்து.

செம்பில் களிம்பு போல ஆத்மாவுக்கு அஞ்ஞானம் சகசமாகாமல் பளிங்கில் பஞ்ச வன்னம் போலப் பிராந்தியாதலால் அங்ஙனம் தோற்றும் கன்ம சம்பந்தமான அஞ்ஞானத்தைக் கெடுப்பது விசார ரூபமான ஞானமே ஆம். (70)

மேற்கூறியதை வற்புறுத்தல்.

179. மனைக்குள் வைத்தபண் டங்களை மறந்தவன்
வருடம்நூ(று) அழுதாலும்
நினைத்து ணர்ந்தபின் கிட்டும்அப் படியிந்த
நிருமல ஆன்மாவும்
அனர்த்தம் ஆனதன் மறதியைக் கெடுக்கும்தன்
அறிவினால் காணாமல்
கனத்த கன்மங்கள் நூறுகம் செய்யினும்
காணுமோ காணாதே.

வீட்டிற்குள் வைத்த வஸ்துக்களை வைத்த இடம் தெரியாமல் மறந்தவன் நூறாண்டு துக்கித்தாலும் முன்வைத்த இடத்தை ஞாபகம் செய்து அறிந்தபின் அவைகள் கிடைக்கும். அதுபோல் இந்த நிருமலமான ஆத்ம ஞானமும் துக்கத்திற்குக் காரணமாகிய தனது அறியாமையைப் போக்கும் தனது அறிவினால் தரிசிக்கப்படாமல் கனமான கன்மங்களை அநேக யுகம் செய்தாலும் காணப்படுமோ? காணப்படாது.

ஞாபகத்தால் மறதி நீங்கின் முன் வைத்த பொருள் வெளிப்படும் அல்லது தொழிலால் வெளிப்படாதது போல விசார ஞானத்தால் அஞ்ஞானம் நீங்கின் முன்னுள்ள பிரமப் பொருள் வெளிப்படும் அல்லது கன்மத்தால் வெளிப்படாது.

நூறுகம் – நூறு + உகம் – அநேக காலம். (71)

பிரம சுகத்தை விசார ஞானம் கொடுக்கும் என்ற வேதம் அச் சுகத்தைக் கன்மமும் கொடுக்கும் என்பது யாது? என வினாதல்.

180. நன்மை யாங்குரு வேசுகந் தருவது
ஞானமே எனும்வேதம்

தன்ம பாவம்இச் சிரங்களால் தேவர்கள்
தருவிலங்கு கள்மாந்தர்
சென்ம மாகுவ சாதிஆ சாரமே
செய்தவஞ் சகமென்று
கன்ம காண்டத்தில் விதிப்பதேன் விதித்துள
காரணம் உரையீரே.

நல்ல ஆசிரியரே! பிரம ஆனந்தத்தைக் கொடுப்பது அறிவே என்கிற சுருதியானது, புண்ணிய கன்மங்களால் தேவர்களும் பாவ கன்மங்களால் விருட்ச முதல் மிருகம் ஈறாகிய ஐவகைத் தோற்றமும், மிஸ்ர கன்மங்களால் மனிதர்களுமாகிய ஜனனம் ஆவன என்றும் வருண ஆசிரம தருமப்படி செய்கிற தவமே சுகம் எனவும் கிரியா காண்டத்தில் விதித்ததென்ன? அங்ஙனம் விதியாநின்ற காரணத்தைச் சொல்வீர்.

**விளக்கம்:**

| கருமம் | ஜன்மங்கள் |
|---|---|
| 1. புண்ணியம் | – தேவர்கள் |
| 2. பாவம் | – விருட்சம் முதல் மிருகம் ஈறாகிய ஐவகைத் தோற்றமும். |
| 3. மிசிரம் (கலப்பு) | – மனிதர்கள். |

ஐவகைத் தோற்றம் – காட்சி, உயர்ச்சி, உண்டாக்கம், உற்பத்தி, தன்மை. (72)

அங்ஙனம் விதித்த வேதத்தின் அபிப்பிராயம் வேறு எனக் கூறல்.

181. தினமும் மண்ணுகர் பிள்ளைநோய்க்(கு) இரங்கியே
தீம்பண்டம் எதிர்காட்டிக்
கனம ருந்துகள் ஒளித்துவைத்(து) அழைக்கின்ற
கருணையாம் தாய்போல்

மனைஅ றங்கள்செய் மகங்கள்செய் நன்றென்று
மலர்ந்தவா சகம்சொல்லும்
நினைவு வேறுகாண் சுவர்க்ககா மிகள்அந்த
நிர்ணயந் தெரியாரே.

நாள்தோறும் மண்ணைப் புசிக்கின்ற குழந்தையின் வியாதிக்கு இரக்கமுற்று, கனமான ஒளஷதங்களை மறைத்து வைத்து, தித்திப்புள்ள வஸ்துக்களை எதிரே காண்பித்து, அக்குழந்தையைக் கூப்பிடுகின்ற கிருபையுள்ள தாயைப் போல, இல்லற தருமங்களைச் செய், யாகங்களைச் செய் அஃது நன்மையென்று விகசிதமான வேதவாக்கியம் சொல்லுகின்ற கருத்து வேறாகும்; சுவர்க்க விருப்பமுள்ளவர்கள் அக்கருத்தின் நிண்ணயத்தை அறியார்கள். விகசிதம் – மலர்ச்சி.

'மண்ணுகர் பிள்ளை' என்பதனால் விடயத்தை நுகரும் அறிவிலி என்பதும், 'நோய்' என்பதனால் பிறவித் துன்பம் என்பதும். 'இரங்கி' என்பதனால் அருளுற்று என்பதும், 'தீம்பண்டங்காட்டி' என்பதனால் சுவர்க்காதிபதங்களைக் காட்டும் என்பதும், 'மருத்துகள் ஒளித்து வைத்து' என்பதனால் ஞான அமுதத்தை ஒளித்து வைத்து எனவும், 'அழைக்கின்ற தாய்' என்றதனால் அவ் அமுதத்தைப் கொடுக்க வேதம் விளிக்கும் என்பதும் கொள்ளக் கிடந்தன.

வேதம் இம்மை இன்பத்தை நீக்குவான் மறுமை இன்பத்தைக் கூறி அஃது நீங்கினபின் இதையும் நீக்கிப் பரம சுகமாக்கும் பொருட்டு அங்ஙனம் கூறினது என்பதாம். (73)

வேதம் போக போக்கியங்களை அனுபவிக்க விதியாது என்பதற்கு உவமை கூறல்.

182. போக மாருயிர் கண்டதை யுண்பதும்
புணர்வதும் இயல்பேகாண்
ஆக மங்களும் சுபாவத்தை விதிக்குமோ
அத்தனை தெரியாதோ

**காக மேகறுத் திடுநெருப் பேசுடு(ம்)**
**கசந்திடு வேம்பேநீ**
**வேக வாயுவே அசையென ஒருவரும்**
**விதித்திடல் வேண்டாவே.**

போகத்தைப் புசிக்கின்ற சீவர்களுக்கு நேர்ந்த பதார்த்தங்களை அருந்துதலும், நேரிட்ட பெண்களைப் பொருந்துதலும் சுபாவ மேயாம். வேதங்களும் சுபாவத்தை நியமிக்குமோ? அவ்வளவு தெரியாதா? காக்கையே! நீ கறுத்திடுவாய், அக்கினியே! நீ சுடுவாய், வேம்பே! நீ கசந்திடு, அதிவேகமுள்ள காற்றே! நீ சலிப்பாய், என்று ஒருவரும் நியமிக்க வேண்டுவதில்லையே.

அறிவின்மையால் உயிர்கட்கு இயல்பான அருந்தல் பொருந்தல் என்னும் வாசனையை வேதம் விலக்குமேயன்றி விதிக்குமோ என்பார், 'போக மாருயிர் கண்டதையுண்பதும் புணர்வதும் இயல்பே காண், ஆகமங்களும் சுபாவத்தை விதிக்குமோ' எனக் கூறினார்.

வேதம் போக போக்கியமே பயனான கன்மத்தை விலக்கினதே அன்றி விதித்ததன்று என்பதாம். (74)

கன்ம காண்ட வாக்கியம் பூருவபட்சம் என்பதற்கு உத்தி கூறல்.

**183. கள்ளும் ஊனும்நீ விரும்பினால் மகங்கள்செய்**
**காமத்தின் மனதானால்**
**கொள்ளும் பெண்டொடு கலவிசெய் எனில்அவன்**
**குறையெலாம் தொடான்என்றே**
**தள்ளும் வேதத்தின் சம்மதம் சகலமும்**
**தவிர்வதே கருத்தாகும்**
**விள்ளும் இவ்விதி என்எனில் பூருவ**
**நியமமாம் விதியன்றே.**

மதுவையும் மாமிசத்தையும் நீ உண்ண இச்சித்தால் யாகங்களைச் செய்து புசிப்பாய்; காம வேட்கையுண்டானால் விவாகம் செய்யும் மனைவியோடு புணர்ச்சி செய்வாய் என்றால், இக்

காமி மற்றவைகள் அனைத்தையும் தீண்டாது நீக்குவதே வேதத்தினுடைய சம்மதம்; அப்படி அனைத்தும் நீங்குவதே அதன் அபிப்பிராயமாகும்; சொல்லா நின்ற இக் கன்ம காண்ட விதி என்ன வென்றால் பூருவபட்சமாக நியமித்த விதியாம்.

பூர்வம் – ஆதி (முதன்மை) பழைமை, முன் நிகழ்வது.

உத்தரம் – பின் நிகழ்வது. (75)

இவ் விதி பூருவபட்சம் என்பதை வற்புறுத்தல்.

**184. மதுஇ றைச்சிகள் உண்ணென்ற சுருதிபின்**
**மணந்துபார் எனல்பாராய்**
**மிதுன இச்சையும் புத்திரோற் பத்தியால்**
**விரும்பென்ற விதிபாராய்**
**இதையும் விட்டொழி அதிநயிட்ட கவன்னிக்கு**
**இகழ்ச்சியற் றதும்பாராய்**
**அதைய றிந்துகன் மங்கள்ஆ சைகள்ஒழிந்(து)**
**ஆனந்தம் அடைவாயே.**

மது மாமிசங்களைப் புசியென்ற வேதமானது பின்பு ஆக்கிராணம் செய்தாற் போதும் என்பதைப் பார், மனைவியோடு புணர்ச்சி இன்பமும் மகப்பேறு உண்டாம் பொருட்டு இச்சிப்பாய் என்ற விதியைப் பார். இவ்விதியையும் விட்டொழிந்த சந்நியாசிக்கும் நைஷ்டிகப் பிரமசாரிக்கும் நிந்தையில்லாததும் பார். அக் கருத்தை உணர்ந்து கன்மங்களின் மேல் வைத்த இச்சைகள் நீங்கி ஞானத்தால் பிரமானந்தத்தை அடைவாய்.

வேதம் கன்ம காண்டத்தில் கூறும் வருணாச்சிரம கன்மங்கள் அதனால் உண்டாகும் போக இன்பங்கள் அனைத்தும் பின்பு துன்பங்களாக வருத்துதலைக் கண்டு, அவற்றை விடுத்துப் பரம சுகத்தைத் தேட வேண்டும் என்பது அதன் அபிப்பிராயம்; ஆதலால், இவற்றை ஒழித்துச் சுகத்தைத் தேடல் வேண்டும் என்பதாம். அதாவது

பரமாத்மாவை ஞானத்தாலன்றிக் கர்மத்தால் அடையற்பாற்றன்று எனக் கூறினதாம்.

இம்மைப் பயனாகிய மாதர் போகமும் மறுமைப் பயனாகிய சுவர்க்க போகமும் நசித்துப் போகும் தன்மையுடையவாதலின், அவற்றை விரும்பாதேயென்று சுருதி கூறிற்றென்க.

நைட்டிக வன்னி – மரண பரியந்தம் பிரம்மச்சாரியாகவே இருப்பவன் நைஷ்டிக பிரம்மச்சாரி யென்று சொல்லப்படுவான்.

ஆக்கிராணம் – மோந்து பார்த்தல் (மணந்து பார்).

மிதுன இச்சை – புணர்ச்சி இன்பம். (76)

முற்கூறிய வண்ணம் ஞானம் அஞ்ஞானத்துக்குச் சத்துருவாயின் அஃது இஃதோடும் சேர்ந்து ஒரு தொழிலைச் செய்யலாமோ என வினாதல்.

**185. உலக மானஅஞ் ஞானமும் கருமமும்**
**உறவென்ற வழிகூடும்**
**பலவுமானஅஞ் ஞானமும் ஞானமும்**
**பகையென்ப(து) உளதானால்**
**நிலவி லேமறுப் போல அஞ் ஞானமும்**
**நிமலஞா னத்தோடே**
**குலவி நின்றிந்தச் சிருட்டிகள் செய்யவும்**
**கூடுமோ குருமூர்த்தி.**

ஆசிரியரே! சத்து உருவமான அறியாமையும் சற்கருமங்களும் நட்பென்ற மார்க்கம் ஒக்கும், நாளா விதமான அஞ்ஞானமும் ஏகமான ஞானமும் சத்துரு என்பது உள்ளதானால் சந்திரனிடத்தில் களங்கம் இருப்பதுபோல அஞ்ஞானமானது களங்கமற்ற ஞானத்தோடும் சேர்ந்திருந்து இச் சிருஷ்டியாதிகளைச் செய்யவுங் கூடுமா?

தமப் பிரகாசங்கள் தம்மின் விரோதிகள் ஆகலின் இரண்டு கூடி நிற்றல் கூடாதென்பது சீடன் கருத்து. (77)

மேல் வினாவிற்கு உத்தரங் கூறல்

186. சொரூப ஞானமும் விருத்திஞா னமும்என்று
சோதிஞான மும்இரண்டாம்
சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாய்த்
தோன்றும்வே றிலைமைந்தா
சொரூப ஞானம்அஞ் ஞானசத் துருவென்று
சுழுத்தியில் கண்டாய்
சொரூப ஞானத்தின் மருவும்அஞ் ஞானத்தைச்
சுடும்விருத் தியின்ஞானம்.

மாணாக்கனே! சுயம் பிரகாசமான சைதன்னியமே சொரூப ஞானம் எனவும், விருத்தி ஞானம் எனவும் என இருவகையாம். சொரூப ஞானமே விருத்தி ஞானமாய்த் தோன்றுமேயன்றி மற்றொன்றில்லையாம். சொரூப ஞானமானது அஞ்ஞானத்துக்குப் பகையென்று சுழுத்தி அவத்தையில் பார்க்கின்றாயே; சொரூப ஞானத்தில் கூடியிருந்த அறியாமையைச் சமாதியிலுதித்த விருத்தி ஞானமானது எரிக்கும்.

ஆத்ம சங்கற்பமான அறிவிற்கு உண்டான அறியாமை அவ்வறிவில் உதயமான அனுபூதியினால் கெடும் என்பதாம்.

சுழுத்தி அவத்தை – தூக்க நிலை.

அனுபூதி – அனுபவ அறிவு.

கோர நித்திரை விட்டெழுந்தவன் 'நான் சுகமாய்த் தூங்கினேன், ஒன்றும் தெரியவில்லை' என்று அறிகிறான். இந்த ஞானத்திற்குச் சுகமும் அஞ்ஞானமும் விஷயங்களாம். (78)

காரணத்தால் கெடாத அஞ்ஞானம் காரியத்தால் எங்ஙனம் கெடும்? என்ற வினாவிற்கு உத்தரம்.

187. துருத்தி மாயையைச் சுழுத்தியிற் சுடாதது
சொரூபஞா னந்தானே

விருத்தி ஞானமாய்ச் சுட்டதெப் படியெனில்
வெய்யிலால் உலகெங்கும்
பரித்த சூரியன் சூரியகாந் தத்தில்
பற்றிஅக் கினியாகி
எரித்த வாறுபோல் சமாதியில் விருத்தியால்
எரிக்கும்என் (று) அறிவாயே.

துருத்தியைப் போல உசுவாச நிசுவாசங்களையுடைய சடமாகிய அஞ்ஞானத்தைச் சுழுத்தியின் கண்ணே கெடுக்காதது சொரூப ஞானந்தானே. அதுவே விருத்தி ஞானரூபமாய் எரித்தது எங்ஙனம் எனின், சகத்தில் எவ்விடத்தும் வியாபித்த தனது உஷ்ண கிரணத்தினால் எரிக்காமல் சூரியனானவன் சூரிய காந்தக் கல்லிற் பற்றி அக்கினிரூபமாய்ச் சகல வஸ்துக்களையும் தகித்த தன்மை போல நிஷ்டையின் கண் உதிக்கும் பூரண விருத்தி ஞானத்தினால் திரிசிய ரூபமான அஞ்ஞானத்தைக் கெடுக்கும் என்று உணர்வாய்.

காரணமான கிரணத்தால் கெடாத பொருள்கள் காரியமான அக்கினியால் கெடுவதுபோல, சொரூப ஞானத்தால் கெடாத அஞ்ஞானம் அதில் உதயமான பூரண விருத்தி ஞானத்தால் கெடும் என்பதாம்.

நிஷ்டை – தியானம். (79)

விருத்தி ஞானம் அந்தக்கரண காரியம் ஆகலின் அதைக் கருமம் எனப்படாதோ? என வினாதல்.

188. அருளும் ஐயனே திரிவித கரணத்தால்
ஆகிய தொழில் எல்லாம்
கருமம் அல்லவோ விருத்திஞா னமும்அந்தக்
கரணகா ரியமன்றே
உரிய கன்மம்அஞ் ஞானத்தைக் கெடுக்குமென்(று)
ஓதினால் ஆகாதோ
பெரிய ஞானமென்(று) அதற்கொரு பேரிட்ட
பெருமையை உரையீரே.

அடியேன் சங்கைக்கு எல்லாம் தக்கவிடை அனுக்கிரகஞ் செய்யாநின்ற எனது குருவே! மனம் வாக்குக் காயம் என்கின்ற முக்கரணங்களால் உண்டான கிரியைகள் அனைத்தும் கன்மங்கள் அல்லவா? அகம் பிரம்மம் என்னும் விருத்தி ஞானமும் அந்தக் கரணத்தின் பரிணாமம் ஆதலின் அதன் காரியம் அல்லவா? இங்ஙனம் காரியமாக்கற்கு உரிய விருத்தி ஞானமென்னும் மானச கன்மமானது அஞ்ஞானத்தை நசிப்பிக்கும் என்று உரைக்கின் ஆகாதா? மகத்தான ஞானமென்று அக் கன்மத்திற்கு ஒரு நாமம் தரித்த மகிமையைச் சொல்வீர்.

சங்கை – சந்தேகம் (80)

மேல் வினாவிற்கு உத்தரம்

**189. விருத்தி ஞானம்அந் தக்கர ணத்தொடு**
**விருத்தியா கிலும்மைந்தா**
**ஒருத்தி மக்களே தங்களிற் பகைக்கின்ற(து)**
**உலகெங்கும் கண்டோமே**
**கருத்த னாகிய புருடதந் திரங்களாம்**
**கருமங்கள் அவைபோல**
**வருத்த ஞானமோ புருடதந் திரமன்று**
**வஸ்துதந் திரமாமே.**

மாணாக்கனே! நான் பிரமம் ஆகின்றேன் என்னும் விருத்தி ஞானமானது மனத்தினுடைய விருத்தியானாலும், ஒரு தாயின் புத்திரர்கள் தங்களுக்குள்ளே பகைக்கின்றதை சகம் எங்கும் பார்த்திருக்கின்றோம் கன்மங்களானவை அகம் பாவமுள்ள புருட தந்திரங்களேயாம். விசாரப் பிரயத்தனத்தால் உளதாகா நிற்கும் விவேக ஞானமானது அவற்றைப் போல புருட தந்திரம் அன்றாம், வஸ்துவினது தந்திரமாம்.

விருத்தி ஞானமும் கன்மமும் அந்தக்கரண காரியம் ஆயினும், புருட தந்திரத்தால் மனதில் உதிக்கும் கன்மத்தை வஸ்து தந்திரத்தால்

மனதில் உதிக்கும் பூரணவிருத்தி ஞானம் கெடுக்குமாதலின் அவ் விருத்தி ஞானம் கன்மம் ஆகாது என்பதாம். (81)

போன சன்மங்கள் (64) என்ற செய்யுள் முதல் இதுகாறும் கன்மமானது ஞானம் உதிப்பதற்கு ஏது அன்றென அதை விசார ஞானத்தால் நீக்கி, மேல் அவ் விசார ஞானத்தையும் நீக்குவான் தொடங்கி, அதை யோக ஞானமும் விவேக ஞானமும் என இரு திறனாகக் கூறுகின்றார்.

**190. வகுத்த கன்மங்கள் செய்யவும் தவிரவும்**
**மற்றொன்றாக் கவுங்கூடும்**
**மிகுந்த ஞானம்அப் படியன்று தியானமும்**
**விவேகஞா னமும்வேறே**
**செகத்தில் ஒன்றையொன் றாஇவன் பாவிக்கும்**
**தியானம்கற் பிதயோகம்**
**முகத்த மாய்க்கண்ட ஞானமே வாஸ்தவம்**
**மோகமாய் மயங்காதே.**

புருடர்களால் வகுக்கப்பட்ட கன்மங்களானவை விதித்தபடி செய்தற்கும் ஒழிதற்கும் மற்றொரு விதமாக விரும்பியபடி செய்தற்கும் ஆம். பூரண ஞானமானது அத் தன்மையுடையதன்று. தியானமும் விவேக ஞானமும் வேறாகும். உலகத்தின்கண் ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவாக இப் புருடன் பாவிக்கின்ற கற்பனா யோகமானது தியானமாம். பிரத்யட்சமாகத் தரிசித்த ஞானமே உண்மையான விவேக ஞானமாம், இவற்றில் அறியாமை யுடையவனாய் மயங்காதே.

யோக ஞானம் கற்பிதமான பரோட்சமும், விவேக ஞானம் உண்மையான அபரோட்சமும் ஆம் என்பதாம்.

பரோட்சம்–கண்ணுக்கு எட்டாதது.

அபரோட்சம்–கண்ணுக்கு எட்டியது. (82)

இதுவுமது.

191. கண்ட றிந்தது ஞானங்கேட் டதுதனைக்
கருதுபா வனையோகம்
கண்ட பேர்சொலக் கேட்டது மறந்துபோம்
கண்டது மறவாதே
கண்ட வஸ்துமெய் தியானவஸ் துக்கள்பொய்
கருவிஅஞ் ஞானத்தைக்
கண்ட அக்கணம் கொல்வது ஞானமே
கருமம் அன்றறிவாயே.

அனுபவமாகப் பார்த்து உணர்ந்தது ஞானமாம்; கேட்டதைத் தியானிக்கின்ற பாவனையானது யோகமாம்; பார்த்தவர்கள் சொல்லக் கேட்ட பொருள் மறந்துபோம்; பார்த்தது மறக்காது. பார்த்த பொருளானது உண்மையாம். பாவிக்கின்ற பொருள்களானவை மித்தையாம். கோபித்து அறியாமையைப் பார்த்த அந்த க்ஷணத்தில் கெடுப்பது ஞானமேயன்றிக் கன்மம் அன்று; இதனையுணர்வாயாக.

தியான யோகம் கேட்ட வண்ணம் பாவித்தலும், விவேக ஞானம் பாவித்த வண்ணம் காண்டலும் ஆதலால் இஃதே உண்மை என்பதாம். மித்தை—பொய். (83)

தியான யோகம் கற்பிதம் எனின் அதில் உதிக்கும் முத்தியும் கற்பிதம் அன்றோ? என்னும் வினாவிற்கு உத்தரம்.

192. சருவ முத்தியைத் தருகின்ற தியானமும்
சத்தியம் அன்றென்றால்
சருவ முத்தியும் சத்தியம் அன்றென்று
சங்கியா தேநீகேள்
உருவம் கேட்டவன் தியானிக்கும் பொழுதில்அவ்
உருவம்வாஸ் தவமன்றே
உருவம் ஆகும்அப் பொழுதுகண் ணாற்கண்ட
உருவம்வாஸ் தவமாமே.

சர்வம் பிரம மயம் என்னும் வீட்டைக் கொடுக்கின்ற தியானத்தையும் உண்மை அன்றென்று சொன்னால், அத் தியானத்தில்

வரும் பூரண அனுபவமும் உண்மை அன்று என்று நீ சங்கியாதே; அதற்குச் சமாதானம் சொல்வோம். கேட்பாயாக. பிரம சொரூபத்தைக் கேள்வியுற்றவன் சிந்திக்கும் போது அப் பாவனா ரூபமாகிய சொரூபம் உண்மை அன்று; அப் பாவனையானது அந்த சொரூபம் ஆகும் போது ஞான திருஷ்டியினால் பார்த்த சொரூப மானது உண்மையாம்.

பாவனை கற்பிதமும் அதில் நின்று அதைக் கரைத்து எழாநின்ற பாவிப்பவன் உண்மையும் ஆதலால் அப்பாவனை மித்தையே, அதனால் உதயமாகும் முத்தி சத்தியமே ஆம் என்பதாம்.

சங்கை–ஐயம்.

பாவனை–நினைவு, தியானம், அபிநயம். (84)

பொய்க்கு மெய்யை உதிப்பிக்கும் சத்தி ஏது? என்ற வினாவிற்கு உத்தரம். உதிப்பு–தோற்றம், ஞானம்.

**193. சடம(து) ஆகிய தியானமெய் யாகிய**
**சர்வமுத் தியைநல்கும்**
**திடம தானதெப் படியெனில் அவரவர்**
**தியானமே பிறப்பாகும்**
**உடலம் ஆசையால் தியானிக்கில் தியானித்த**
**உடல்களா குவர்மைந்தா**
**தொடர்ப வங்கெடச் சொரூபமே தியானிக்கில்**
**சொரூபமா குவர்மெய்யே.**

மாணாக்கனே! பொய்யாகிய தியானமானது சத்தியமாகிய பரிபூரணமான கைவல்யத்தைக் கொடுக்கின்ற திடத்தையுடையதா யிருப்பது எங்ஙனம்? என்று கேட்கில் அவரவர் மரண காலத்திலே சிந்திக்கிற ரூபமாகவே மறுசனனம் உண்டாகும். ஆகையால் தேக இச்சையினால் சிந்திக்கச் சிந்தித்த வடிவமாவார்கள். தொன்றுதொட்டு வருகின்ற சனனம் மீண்டும் உண்டாகாமல் கெடும் பொருட்டு ஆத்ம சொரூபத்தைச் சிந்திக்க அச் சொரூபமே ஆவார்கள்; இஃது உண்மையாம்.

தியானம் சிற்சடவுருவமாகும் என்பார், 'தியானித்த உடல்கள் ஆகுவர்' எனவும், 'சொரூப மாகுவர்' எனவும் கூறினார்.

தியானத்திற்குக் காரண உருவம் சத்தும், காரிய உருவம் அசத்தும், ஆதலின், அதற்கு அந்தச் சத்தை அறிவிக்கும் வல்லமை உண்டாயிற்று என்பதாம்.

'குந்தி புத்திரா! எவன் மரண காலத்தில் எந்தெந்த வடிவத்தை நினைக்கின்றவனாய்த் தேகத்தை விடுகின்றானோ அவன் எப்போதும் அந்தந்த வடிவத்தின் நினைப்புடையவனாய் அந்தந்த வடிவத்தையே அடைகின்றான்' என்று பகவத் கீதை கூறுவதறிக.

குந்தி புத்திரன்–அர்ச்சுனன். சனனம்–பிறப்பு. (85)

தியானத்திற்கு இச் சத்தியிருக்க விசார ஞானம் யாதுக்கு? என்ற வினாவிற்கு உத்தரம்.

**194. பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும்**
**பிரமமா குவர்என்றால்**
**நரச ரீரமாம் குரவனே விசாரமேன்**
**ஞானமேன் என்னாதே**
**பரம பாவனை பரோட்சமாம் பின்பந்தப்**
**பரோட்சமே அபரோட்சம்**
**திரவி சாரமா ஞானமே முத்தியாம்**
**தீர்வைஈ (து) அறிவாயே.**

மானிட வடிவமாக எழுந்தருளிய குருவே! பிரம சொரூபத்தைச் சிந்தித்தவர்களும் அப் பிரமமே ஆவார்கள் என்று சொன்னால், விசாரம் யாதினுக்கு? ஞானம் யாதினுக்கு? என்று கேளாதே; பிரமத் தியானமானது முன்னே தியானிக்கும் போது பரோட்ச ஞானமாம்; அத் தியானம் பரிபாகமான பின்பு அந்தப் பரோட்ச ஞானமே உபாசனா வீட்சண்யத்தால் அபரோட்ச ஞானமாம். திடமான விசாரத்தினால் உதிப்பதான அந்த அபரோட்ச ஞானமே மோட்சமாம். ஆதலால் இதுவே முடிவென்று அறிவாயாக.

தியானத்தின் காரியம் யோகமும் காரணம் விசார ஞானமும் ஆதலால் அவ் விசார ஞானமே வீடு அடைவதற்கு வேண்டும் என்பதாம்.

பரிபாகம்–முதிர்ச்சி; பக்குவம்;

அபரோட்சம்–பிரத்யட்சம்; (86)

முன்பு தியான யோகத்தை நீக்கி மேல் விசார ஞானத்தை நீக்குவான் விருத்திஞானம் இருக்கின் சுபானுபவம் எங்ஙனம் கூடும்? என்ற வினாவிற்கு உத்தரம்.

**195. வீட தாம்பரி பூரண சொரூபத்தில்**
**விருத்திஞா னமுங்கூடி**
**சேட மாகினால் அகண்டமாம் அனுபவ**
**சித்திஎப் படியென்றால்**
**சாடி நீர் மண்ணைப் பிரித்ததேற் றாம்பொடி**
**தானும்மண் ணொடுமாயும்**
**ஊடி ஞானமும் அறிவிலா மையைக்கெடுத்(து)**
**ஒக்கவே கெடுந்தானே.**

முத்தி ரூபமாகிய பரிபூரணமான பிரம்ம சொரூபத்தில் அந்தக் கரணத்தின் விருத்தி ரூபமான தத்துவ ஞானமும் சேர்ந்து விசேடமானால் அகண்டாகார அனுபவம் சித்திப்பது எங்ஙனம்? என்னின், சாடியிலிருக்கும் சலத்தின்கண் உள்ள சேற்றை வேறு செய்த தேற்றாங் கொட்டைத் தூளும் அச் சேற்றோடும் கெடும். அதுபோல விருத்தி ஞானமும் பகைத்து அஞ்ஞானத்தைக் கெடுத்துத் தானும் கூடவே நசிக்கும்.

விசார ஞானம், அறிவு உதயமாம் பொருட்டு அறிவின்மையைக் கெடுத்து, அதனோடும் கெடுவதே அன்றிச் சேடிக்கமாட்டாது என்பதாம்.

விசாரஞானம் – ஆராய்ச்சி மெய்யுணர்வு.

விருத்திஞானம் – வளர்ச்சி மெய்யுணர்வு.

அகண்ட – துண்டுபடாதது; பெரியது; எல்லாம்.

சேடித்தல் – தொழிற்படுதல்

பரிபூரணமான பிரம சொரூபம்–**அகம் பிரம்மாஸ்மி**–நான் பிரமமாய் இருக்கின்றேன் என்னும் நிச்சய வடிவம்.

சர்வகர்ம பரித்தியாகம் செய்து பிரம்ம சொரூபமாக நிலைத்தல் பிரம்ம நிஷ்டையாம்.

நிஷ்டை–தியானம். (87)

கைதவங்கள் என்ற செய்யுள் முதல் (49) இதுகாறும் உபகற்பங்கள் (பல யுகங்கள்) சிருட்டியால் உண்டான சஞ்சிதம் பரஞானத்தால் கெடும் எனவும் அதனால் உண்டான மனோகாரியமான கன்மத்தை அதன் காரணமான விசார ஞானம் கெடுத்து, அஃதும் இதனோடும் கெடும், எனவும் கூறி, இச் செய்யுளில் அவ் அனுபவமுள்ள சீவன் முத்தர் இலக்கணங்கூறல்,

**196. இந்த நிச்சய முத்தருள் அனுபவம்**
**இருப்பதுஎப் படியென்றால்**
**சிந்தை யற்றபூ மண்டல இர்ாசனும்**
**சிசுவும்போல் சுகமாவர்**
**பந்த முத்திகள் மறந்துபோம் உண்டென்று**
**பலர்சொலின் நகையாவர்**
**அந்த ரத்தைஉண்(டு) உமிழ்ந்ததோர் கொதுகெனும்**
**அவர்களை நகையாரோ.**

இந்த நிச்சய ரூபமான அகண்ட அனுபவமானது சீவன் முத்தருக்குள்ளே அனுபவமாக இருக்கின்றது எவ்வண்ணம்? என்றால் பகைவர் உளரெனும் சிந்தையின்றிப் பூவுலகமுழுவதும் ஆளுகின்ற சக்கரவர்த்தியையும் நன்கு தீது என்று அறியாத குழந்தைகளையும் போல அவர்கள் சுக சொரூபமாயிருப்பார். பந்த முத்திரூபமான பாவனா விகற்பங்கள் ஒழிந்துபோம்; அவை உளவாம் என்று அநேகர்

உரைக்கில் சிரிப்பார், ஒரு கொசுவானது ஆகாயத்தை விழுங்கிக் கக்கிற்று என்னும் அவர்களை யார் தான் நகையார்கள்?

சுவானுபூதி எப்போதும் ஒரு தன்மையாக விளங்குகின்ற தனக்கு அறியாமையால் பந்தமும் அதன் நிவர்த்தியான வீடும் இப்போது உண்டானது இன்று என்பார், ''பந்த முத்திக்கண் மறந்துபோம் உண்டென்று பலர் சொல்லின் நகையாவர்'' எனக் கூறினார்.

அறிவு அறியாமை இன்றி முன்னுள்ள சத்த மாத்திரமாக விளங்கிச் சுகித்திருப்பவனே சீவன் முத்தன் என்பதாம். (88)

மத்தியில் அவாந்தரமாகத் தோன்றும் கற்பனையில் மயங்கா மைக்கு ஓர் கதை கூறல். அவாந்தரம் – இடையில் நிற்பது. உதவியின்மை; ஒழிவு; வெறுவெளி.

197. **மலடி மைந்தனும் தாணுவின் புருடனும்**
**வான்மலர் முடிசூடி**
**இலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை**
**யிரசதம் விலைபேசிக்**
**கலக மாயினார் இடையினில் கயிற்றராக்**
**கடித்துஇரு வரும்மாண்டார்**
**அலகை ஆயினார் எனும்விவ காரத்தை**
**அறிந்தவன் மயங்கானே.**

மலடிபுத்திரனும் குற்றியில் தோன்றிய புருடனும் ஆகாயத் தாமரைப் பூவைச் சிரசில் தரித்து, விளங்காநின்ற கந்தர்வ நகரத்திலே கிளிஞ்சில் வெள்ளியை விலைபேசி பிணக்கு அடைந்தார்கள் நடுவில் பழுதைப் பாம்பு தீண்டி முன் சொன்ன இரண்டு பேர்களும் இறந்து போயினார்கள் என்கிற கதையினது நியாயத்தைத் தெரிந்தவன் மயங்கமாட்டான்.

கற்பனையின் மூலம் தெரிந்தவன் அதனிடத்தில் மயங்கான் என்பதாம். சுத்திகை இரசிதம்–கிளிஞ்சல் வெள்ளி. (89)

இதுகாறும் காரிய உபாதியான அவித்தையினால், உண்டான மயக்கத்தை நீக்கி மேற்காரண உபாதியான மாயையினால் உண்டாகும் மயக்கத்தைக் களைதற் பொருட்டு, அஃதும் மித்தையாதலின் அதனால் வரும் பலப்பிராப்திகளும் மித்தை என்று அகற்றி நீ சுவானுபூதியாக விளங்குவாய் எனக் கூறல்.

உபாதி–வேதனை.

**198. மாயை என்பது பொய்எனில் அதுபெற்ற**
**வகையெலாம் பொய்யாமே**
**தாயை யன்றிமக் களுக்கொரு பிறவியும்**
**சாதியும் வேறுண்டோ**
**சேய சொர்க்கமும் நரகமும் நன்மையும்**
**தீமையும் பாராமல்**
**தூய சத்துச்சித் தானந்த பூரண**
**சொரூபமாய் இருப்பாயே.**

மாயையென்று சொல்லப்படுவது மித்தையென்றால் அதனால் உண்டான பொருளனைத்தும் மித்தையேயாம். எங்ஙனமெனின் தாயின் பிறப்பும் சாதியும் அன்றி அவள் புத்திரர்க்கு வேறு ஒரு பிறப்பும் குலமும் உண்டோ? இல்லை. ஆதலால் செவ்விதான சுவர்க்காதி பதங்களும், ரௌரவாதி நரகங்களும் நன்கு என்பவையும் தீங்கு என்பவையும் இவையெனப் பாராமலே பரிசுத்தமான சச்சிதானந்த மாகிய பரிபூரண சொரூபமாக இருப்பாய்.

மாயை மித்தையாதலின் அதன் காரியங்கள் அனைத்தும் மித்தையே ஆம். சச்சிதானந்தம் – சத்து சித்து ஆனந்தம். (90)

மாயா காரியம் மித்தை யாயின் பிரமன் முதலிய அனைத்தும் மித்தையாமே? அங்ஙனம் கூறின் குற்றம் வாராவோ என வினாதல்.

**199. பங்க யாசனன் முதற்பல தேவரும்**
**பாருள பெரியோரும்**

**கங்கை யாதியாம் தீர்த்தமும் தேசமும்**
**காலமும் மறைநாலும்**
**அங்கம் ஆறும்மந் திரங்களும் தவங்களும்**
**அசத்தியம் எனச்சொன்னால்**
**எங்கள் நாயக னேஅத னால்குற்றம்**
**இல்லையோ மொழியீரே.**

எமது ஆண்டவரே! பிரமன் முதலிய சமஸ்த தேவர்களும், பூமியின் கண்ணுள்ள மகான்களும், பாகீரதி முதலிய தீர்த்தங்களும் புண்ணிய தேசங்களும், திரி காலங்களும் வேதங்கள் நான்கும் சாத்திரங்கள் ஆறும், பிரணவாதி மகா மந்திரங்களும் தவங்களும் மித்தை என்று உரைக்கில் அங்ஙனம் சொல்லுவதனால் பிழைகள் இல்லையோ சொல்லீர்.

நான்கு வேதங்கள் : இருக்கு, யசுர், சாமம், அதர்வணம்.

வேதாங்கம் ஆறு : சந்தசு, கற்பம், வியாகரணம், சிட்சை, சோதிடம், நிருத்தம்.

தவங்கள் : கிருச்சிரம், சாந்திராயணம்.

புண்ணிய காலங்கள்
அர்த்தோதயம், மகோதயம்.

பிரமன் முதல் தவங்கள் ஈறாயுள்ளன தம்மை வழிபடுவோர்க்கு நன்மை தருவனவாயிருத்தலின் அவற்றை மித்தையெனல் தோஷமாகாதோ என வினாவினான் என்க. (91)

மேல் வினாவிற்கு உத்தரம்.

**200. சொற்ப னந்தனில் கண்டதைப் பொய்யென்று**
**சொல்வது பிழையானால்**
**அற்ப மாயையில் தோன்றிய சகங்களை**
**அசத்தெனல் பிழையாமே**

சொற்ப னந்தனில் கண்டதைப் பொய்யென்று
சொல்லலா மெனில்மைந்தா
அற்ப மாயையில் தோன்றிய சகமெலாம்
அசத்தியம் எனலாமே.

புத்திரா! கனவில் கண்டதை மித்தையென்று சொல்வது குற்றம் ஆயின், அற்பமாகிய மாயையினிடத்தில் தோன்றிய உலகங்கள் அனைத்தும் மித்தையென்றால் குற்றமாம். கனவில் கண்டதை மித்தையென்று சொல்லலாம் எனில் சிறுமையாகிய மாயை யினிடத்தில் உண்டான உலகமனைத்தையும் மித்தையென்று உரைக்கலாம்.

சொப்பனம் போல மாயா காரியமான சகசீவ பரங்கள் என்றும் மித்தையாதலின் அவைகளின் இயல்பைக் கூறுதலால் குற்றமில்லை யென்பதாம்.

சொப்பனப் பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானம் சாக்கிரப் பிரபஞ்சம் என்பது வேதாந்திகளுள் ஏகதேசிகளது கொள்கையாம்.

ஏகதேசம் – சிறுபான்மை; அரிது; குறைவு.

அதிஷ்டானம் – நிலைக்களம். (92)

சத்து அசத்தின் உண்மை இஃதெனக் கூறல்.

201. பொய்யை மெய்யென்ற மூடர்புண் ணியரென்று
புராணம்கூப் பிடுமானால்
மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள்
விதித்தசாத் திரமுண்டோ
பொய்ய(து) ஏதெனில் நாமரூ பங்களாம்
பூதமா கியமாயை
மெய்ய(து) ஏதெனில் சச்சிதா னந்தமாய்
வியாபிக்கும் ஆன்மாவே.

மித்தையைச் சத்தியமென்ற அறிவிலாரைத் தருமவான்கள் என்று அஷ்டாதச புராணங்களும் முறையிடுமாயின், உண்மையை உண்மையென்ற ஞானவான்களுக்குக் குற்றங்களை நியமித்த நூல்களும் உளவோ? மித்தையாவது எது எனில் நாமரூப வடிவங்களான பஞ்சபூத பௌதிகங்களாகிய மாயையேயாம். தத்துவம் யாது எனில் சச்சிதானந்த சொரூபமாக வியாபித்திருக்கும் ஆத்ம சொரூபமே யாம்.

ஆத்மா அனாத்மாவின் இலக்கணம் கூறினதாம்.

அஷடாதச புராணங்கள் – பதினெட்டுப் புராணங்கள். (93)

மாயையின் தன்மை இஃதெனத் தோன்ற அறுவகையால் வினாவல்.

**202. மாயை யென்பதே(து) உடையரார் எப்படி**
**வந்தது வருவானேன்**
**மாயை என்பது பிரமத்தின் வேறெனின்**
**வஸ்துவும் இரண்டாமே**
**மாயை என்பதும் பிரமமும் ஒன்றெனின்**
**வஸ்துவும் பொய்யாமே**
**மாயை என்றமே கங்களுக்(கு) ஒருசண்ட**
**மாருத குருமூர்த்தி.**

மாயை என்கிற மேகங்களுக்கு ஒப்பற்ற பெருங்காற்றாகிய தேசிக மூர்த்தியே! மாயை என்று சொல்லுவது யாது? அதனை உடையவர் யாவர்? எவ்விதம் உதயமாயிற்று? உண்டான காரணம் என்ன? மாயை என்று சொல்வது பிரமத்துக்கு வேறானது என்றுரைக்கின் வஸ்துவும் துவிதமாமே? மாயை என்று சொல்லப்படுவதும் பிரமமென்று சொல்லப்படுவதும் ஏகம் என்றால் மாயா வஸ்துவைப் போலப் பிரம வஸ்துவும் அசத்தியமாமே! இதனை அருளுவீராக.

மாயையின் உருவத்தையும் அதை உடையவர்களையும் அதன் உற்பத்தியையும், அஃது உதித்தற்குக் காரணமும் அஃது பிரமத்திற்குப் பின்னமாயின் வஸ்து துவிதமாமே எனவும் அபின்னமாயின் வஸ்துவும் மித்தையாமே எனவும் அதன் உண்மையைத் தெரிய வினாவினதாம்.

மாயை–தமசு, மோகம், அவித்தையெனப் பலவிதமாக விவரிக்கப்படுதலின் மாயை என்னும் மேகங்களை என்று கூறப்பட்டது.

காரிய உற்பத்தி நால்வகைத்தாம். அவை விருத்தி, பரிணாமம், ஆரம்பம், விவர்த்தம் என்பனவாம். இவற்றிற்கு முறையே ஆடை வீடாதலும் பால் தயிராதலும், நூல் ஆடையாதலும், கயிற்றில் அரவு தோன்றுதலும் உதாரணங்களாம். (94)

மேற்கூறிய ஆறுவகை வினாக்களில் முதல் நான்கு வினாவிற்கு உத்தரங் கூறல்.

**203. அதனை இன்னதென்(று) உரைத்திடப் படாமையால்**
**அவாச்சிய வடிவாகும்**
**இதுத னக்குளது உடல்யான் உலகுமெய்**
**எனும்அவர் உடையோர்கள்**
**கதையி லாதபொய் வந்ததுஇப் படியென்று**
**கண்டபேர் இலைமைந்தா**
**விதன மாயையேன் வந்ததுஎன் றால்புத்தி**
**விசாரமற்(று) அதனாலே.**

மகனே! அம் மாயை இத் தன்மையுள்ளதென்று சொல்லக் கூடாமையால் அவாச்சிய உருவமாம். இஃது எனக்குள்ளது, இத் தேகம் நான், இச் சகம் சத்தியம் என்னும் அபிமானம் உடையவர்களே அதனை உடையவர்கள்; காரணமில்லாத மித்தையான மாயை உதித்தது இவ்விதமென்று பார்த்தவர்கள் இல்லை. துன்ப மயமான

மாயையானது ஏன் தோற்றிற்று எனில் ஆத்ம ஞான விசாரம் செய்யாததனால் வந்தது.

அவாச்சியம்–குற்றமற்றது

(பதசாரம்) உருவம், அருவம், உருவ அருவம் என மாயையைப் பகுத்துச் சொல்லக் கூடாது என்பார். ''அவாச்சிய வடிவு'' எனவும், தேகாதி பிரபஞ்சத்தை உண்மையொன்று கொள்பவரே அம் மாயை உடையவர் என்பார் ''உடல் யான் உலகு மெய்யெனும் அவருடை யோர்கள்'' எனவும், மித்தையாகத் தோன்றல் மாத்திரமேயன்றி உற்பத்தி இல்லை என்பார், ''பொய் வந்தது இப்படியென்று கண்ட பேரிலை'' எனவும், அங்ஙனம் தோன்றுதல் யாதினால் என விசாரிக்கும் விசாரம் இன்மையே அதன் உற்பத்திக்குக் காரணம் என்பார். ''மாயையேன் வந்ததென்றால் புத்திவிசாரம் அற்றதனாலே'' எனவும் கூறினார்.

இம் மாயையின் உருவத்தையும் அதனை உடையவர்களையும் அதன் உற்பத்தியையும், அஃது உதித்தற்குக் காரணத்தையும் இவையெனக் கூறினதாம்.

மாயை–மூலப்பொருள்; பொய்த் தோற்றம் (95)

ஐந்தாம் வினாவிற்கு உத்தரம்.

204. **அருவ மாகும்மா யாவித் தைகள்விளை**
**யாடுமுன் தெரியாவே**
**உருவ மாம்பல கந்தர்ப்ப சேனையாய்**
**உதித்தபின் வெளியாகும்**
**பிரம சத்திகள் அனந்தமாம் அதைக்கண்டு**
**பிடித்திடல் கூடாதே**
**பரவு பூதங்கள் கண்டனு மானத்தால்**
**பலருக்கும் வெளியாமே.**

இந்திர ஞாலம் செய்பவன் அருவமாகிய கந்தர்வ நகர முதலானவைகளைக் காட்டி விளையாடுதற்கு முன்பு அவன்

மாயாவித்தைகள் தோன்றாவாம். வடிவங்களாகத் தோற்றுகின்ற அனந்த கந்தர்வ சேனைகள் உண்டான பின்பு அவ் வித்தைகள் விளக்கமாகும். அதுபோல பிரமத்தினது சக்திகளானவை அநேகமாம்; அம் மாயா சக்தியைக் கண்டுபிடித்தல் கூடாததாம்; விரியும் பஞ்ச பூதங்களைப் பார்த்து அனுமானப் பிரமாணத்தால் யாவர்க்கும் அப் பிரம சக்திகள் உண்டென்று விளங்கும்.

மித்தையான சகம்தோன்றுதலின், அங்ஙனம் தோற்றுவிக்கும் மித்தையான மாயாசத்தி ஒன்று உளது என உணர வேண்டும் என்பதாம். (96)

இதுவுமது.

**205. காரி யங்களும் சத்திஆ தாரமும்**
**காணுமற் றதுமாயம்**
**பாரில் நின்றமா யாவியும் சேனையும்**
**பார்ப்பவர் கண்காணும்**
**வீரியம்திகழ் வித்தையா யினசக்தி**
**வெளிப்படா ததுபோலப்**
**பேரி யல்பிர மத்துக்கும் உலகுக்கும்**
**பிறிதுசத் திகளுண்டே.**

அச் சத்தியினது ஆதாரமான பிரமமும் சீவேஸ்வர சகத்தாகிய காரியங்களும் தோன்றும். அம் மாயா சக்தியானது மாயமாய் இருக்கும். பூமியின்கண் இருந்த மாய வித்தை செய்பவனும், அவனால் படைக்கப்பட்ட சேனைகளும் காண்பவர் கண்ணிற்குத் தோன்றும். மிடுக்காய் விளங்குகின்ற வித்தையாகிய சத்தியானது தோன்றாது. அதைப்போல மகத்துவமுள்ள பிரம சொரூபத்துக்கும் சகத்துக்கும் மத்தியில் சில சத்திகள் உளவாம்.

பிரமத்திற்கும் பிரபஞ்சத்திற்கும் மத்தியில் அவாந்தரமாகத் தோன்றுகின்ற மாயை தனியே ஒரு முதலாகிப் பிரமத்திற்கு வேறுபட்டிராது. அதனால் வத்து இரண்டாகமாட்டாது. (97)

ஆறாம் வினாவிற்கு உத்தரம்.

206. சத்தி சத்தனைத் தவிரவே றன்றுகாண்
சத்தனா மாயாவி
வித்தை காட்டியஇந்திர சாலம்போய்
வித்துவா னாம்போலப்
புத்தி மைந்தனே சத்திமா னாகிய
பூரண ஆன்மாவின்
வஸ்து நிர்ணயம் சொன்னதிட் டாந்தத்தின்
வழிகண்டு தெளிவாயே.

அறிவுள்ள மகனே! இந்திரசால சத்தியானது அதனைக் காட்டிய சாலக்காரனைவிட வேறன்றாம். சத்தியையுடையனாகிய சாலக்காரன் காண்பித்த வித்தையாகிய இந்திரசாலம் நீங்கி வித்துவானாம் வண்ணம் போல, சர்வ சத்திமானாகிய பரிபூரண ஆத்மாவின் சொரூப நிச்சயத்தைச் சொல்லிய திருஷ்டாந்தத்தினுடைய மார்க்கத்தைப் பார்த்துத் தெளிந்து கொள்வாய்.

சத்தனைத் தவிரச் சத்தி என்று ஒரு வஸ்து வேறு இன்மையானும், அச்சத்து இல்லாதவிடத்தும் சத்தன் இருக்கையானும் அச் சத்தனும் சத்தியும் எங்ஙனம் ஒன்றாம்? அங்ஙனம் ஒன்றாகாமையான் அச் சத்தியைப் போல இச் சத்தன் சத்தாகான் என்பதாம். (98)

பிரதிபிம்பமான மாயாசத்தியை நீக்கி, பிம்பமான சிற்சத்தியை வெளிப்படுத்துவான், அசத்தான மாயாசக்தி உள்ளது என்பது எங்ஙனம்? என்ற வினாவிற்கு உத்தரம்.

207. இல்லை யாகிய சத்தியை உண்டென்பது
எப்படியெனக் கேட்கில்
புல்லை ஆதியாம் அசேதனப் பொருளெலாம்
பூத்துக்காய்ப் பனபாராய்
நல்லை யாமகனே அதிலதிற் சிற்சத்தி
நடந்திடா திருந்தக்கால்

**தொல்லை யாய்வரும் சராசர உயிர்க்கெலாம்**
**சுபாவங்கள் வேறாமே.**

நற்குணங்களையுடைய புத்திரனே! மித்தையாகிய மாயா சத்தியை உளதென்பது எங்ஙனம்? என்று கேட்பாயாகில் புல் முதலியனவாகிய சடவஸ்துக்கள் அனைத்தும் அது அதற்குரிய காலத்தில் புஷ்பித்துக் காய்ப்பனவற்றைப் பார்த்திடாய்; அவ்வப் பொருள்களிற் சிற்சத்தியானது செல்லாது இருக்குமாயின் தொன்றுதொட்டு வருகின்ற தாவர சங்கமமாகிய உயிர்கள் அனைத்திற்கும் குணங்கள் மாறாம்.

சராசரம்–சர+அசரம்–அசையும் பொருள், அசையாப் பொருள். (99)

இதுவுமது

**208. கருப்பை முட்டையுள் பறவைகள் பலநிறங்**
**கலந்தசித் திரம்பாராய்**
**அருப்ப மாஞ்சத்தி நியமம்இல் லாவிடில்**
**அரசிலா நகர்போலாம்**
**நெருப்பு நீர்களாங் கசப்புமே மதுரமாம்**
**நீசனும் மறையோதும்**
**பொருப்பு மேகமாம் கடலெலாம் மண்களாம்**
**புவனம்இப் படிபோமே.**

கருப்பையிலிருக்கும் முட்டையிலுள்ள பட்சிகள் அனந்த வர்ணம் உடையதாகும் விசித்திரத்தைப் பார். அருமையான சிற்சத்தியின் நியமம் இல்லாமற்போனால் அரசன் இல்லாத பட்டணத்தைப் போல எல்லாம் மாறுபடும். அஃது எங்ஙனம் எனில் அக்கினியானது சலமாகக் குளிரும். கைப்பும் தித்திப்பாகும். சண்டாளனும் வேத அத்தியயனம் செய்வான். மலையும் மேகம்

போல் சஞ்சரிக்கும். சமுத்திரங்கள் அனைத்தும் மண்ணாகும். இவ்வண்ணம் சகத்தானது தன் சுபாவம் மாறுபடும்.

சூரிய கிரணமே பகிர்முகத்தில் மித்தையான சலமாகவும் அந்தர் முகத்தில் உண்மையான கானலாகவும் தோற்றுவன போல, பிரம பிரகாசமே பகிர்முகத்தில் மித்தையான மாயா சத்தியாகவும் அந்தர் முகத்தில் உண்மையான சிற்சத்தியாகவும் தோன்றிய இச் சத்தியே அனைத்திற்கும் உள்ளீடாயிருந்து நடாத்துதலின், இஃதின் தன்மையை அதன் மேல் வைத்துக் கூறினதே அன்றி அதற்கு இன்று என்பதாம்.

பகிர்முகம் – வெளிப்புறம். அந்தர்முகம் – உட்புறம். அருப்பம் – அருமை; (100)

இச் சக்திகள் நீங்கலும் சத்தனைத் துவிதம் இன்றித் தரிசித்தலும், முத்தியை அடைதலும் எங்ஙனம்? என்று மூன்று வகையால் வினாதல். துவைதம் – கடவுளும் உயிரும் வேறென்பது. துவிதம் – இரண்டு.

**209. ஆர்க்கும் காணவும் அறியவும் படாதென்றும்**
**அவாச்சிய வடிவென்றும்**
**சேர்க்கும் நாமரூ பப்பயிர் வித்தென்றும்**
**செப்பிய சிற்சத்தி**
**பேர்க்கு மாறெங்கன் பிரித்திடப் படாதெனின்**
**பிரமபா வனையொன்றாப்**
**பார்க்கு மாறெங்கன் முத்தியா குவதெங்ஙன்**
**பரமசற் குருமூர்த்தி**

மேலான தேசிகரே! யாவர்க்கும் பார்க்கவும் உணரவும் கூடாது எனவும் இன்னதென உணர்த்தக் கூடாத ரூபம் எனவும் கற்பனையாகச் சேர்க்கின்ற நாமரூபப் பிரபஞ்சமாகிய பயிருக்கு விதை எனவும் சொல்லிய சிற்சத்தியை நீக்குமாறு எப்படி? நீக்கக் கூடாது என்றால் சொரூப சமாதியில் அத்துவிதமாகத் தரிசிக்குமாறு எப்படி? வீடு உண்டாவது எப்படி?

அவாச்சியம் – குற்றமற்றது

நாமரூபம் – பெயரும் உருவமும்

கற்பனை – இல்லாததைக் கட்டிச் சொல்லுதல்; வருணனை.

அத்துவிதம் – பரமான்மாவும் ஜீவான்மாவும் ஒன்றென்கை.

குறிப்பு: மாயையை இப் படலத்தின் 96, 97 ஆவது செய்யுட்களில் காணவும். அறியவும் கூடாதென்றும், 95 ஆவது செய்யுளில் அவாச்சிய வடிவென்றும், 99, 100 செய்யுட்களில் நாமரூபப் பயிர் வித்தென்றும் கூறியிருப்பது அறிக. (101)

முதல் இரண்டு வினாவிற்கு உத்தரங் கூறல்

**210. வாயுத் தம்பனம் சலத்தம்ப னம்மணி**
**மந்திர மருந்தாலே**
**தேயுத் தம்பனம் செய்திடில் அதில்அதில்**
**சிறந்தசத் திகள்எங்கே**
**நீயச் சச்சிதா னந்தமாய் வேறொன்று**
**நினைந்திடா(து) இருப்பாயேல்**
**மாயச் சத்திபோம் ஈதன்றி மந்திர**
**மறைகளிற் காணோமே.**

மணிமந்திர ஔஷதங்களினால் வாயு ஸ்தம்பனமும் ஜல ஸ்தம்பனமும் அக்கினி ஸ்தம்பனமும் செய்தால் அவ்வவற்றில் சிறந்திருக்கும் சலனம் நிகழ்ச்சி உஷ்ணம் ஆகிய மூன்று சத்திகளும் எங்கேயிருக்கின்றன? நீ அந்தச் சச்சிதானந்த வடிவமாகி மற்றொன்றையும் நினையாதிருப்பாய் ஆகில் மாயா சத்தி நீங்கும்; இதைத் தவிர உபாயம் வேதங்களில் பார்த்திலம்.

குருவாக்கியப்படி உண்மையான சச்சிதானந்த சொரூபமே தானாகச் சிந்திக்கின் அதன் மயமாதலும் இல்லாததான மாயாசத்தி யில்லாததாகவே நீங்குதலும் ஆம் என்பதாம்.

நான் பிரம்மமாய் இருக்கின்றேன் என்னும் இந்த மந்திரம் பிறவித் துன்பத்தைப் போக்குவதாம்.

| பூதங்கள் | | சக்திகள் |
|---|---|---|
| 1. வாயு | – | சலனம் |
| 2. ஜலம் | – | நிகழ்ச்சி |
| 3. அக்கினி | – | உஷ்ணம் |

(102)

மூன்றாம் வினாவிற்கு உத்தரங் கூறல்.

**211. மேவு மண்ணில்அவ் வியத்தமே வியத்தமாம்**
**விவகரித்திட வேண்டின்**
**நாவி னால்மண்ணைக் குடமென்பர் அக்குடம்**
**நசிப்பது நாவாலே**
**பாவு நாமரூ பங்களை மறந்துமண்**
**பார்ப்பதே பரமார்த்தம்**
**சீவ பேதகற் பிதங்களை மறந்துநீ**
**சின்மயம் ஆவாயே.**

கடக சத்தி தங்கிய மண்ணில் அக் கடம் ரூபிகரிக்கு மட்டும் மறைபட்டிருந்த அச் சத்தி கடமாகிய பின்னர் வெளிப்படும், விவகரிக்கும் நிமித்தம் நாவினால் அம்மண்ணைக் கடமென்று சொல்லுவார்கள். அக் கடநாமம் போய் மண்ணாக நிற்பதும் நாவாலேயாம். கற்பனையாக வழங்குகின்ற நாமரூப வடிவங்களை நினையாது மண்ணாகப் பார்ப்பதே உண்மை ஞானமாம். அங்ஙனம் சீவன் ஈஸ்வரன் சகத்து என்னும் வேறுபாடுகளை நீக்கி நீ சின்மாத்திரம் ஆவாய்.

கடத்தை மண் என்று அறியின் கடம் என்பது நசித்து அது மண்ணாக விளங்குவது போல சிற்சத்தியைச் சித்தெனக் காணின் அச்சத்தி நீங்கி அது சித்தாக விளங்குவதே மாயா நிவர்த்தியாகிய முத்தி என்பதாம்.

இஃது மேற்கூறும் எண்வகை ஆனந்தத்தில் ஒன்றான அத்துவிதானந்தம் எனக் கொள்க. (103)

அச் சத்திகள் நீங்கினவிடத்தும் அதன் காரியமான திரிசியம் நீங்காமையால் அஃது நீங்கும் உபாயம் அனுக்கிரகிக்க வேண்டும் என்ற வினாவிற்கு உத்தரம்.

212. பூரிக் கும்கன சச்சிதா னந்தத்தில்
பொய்சடம் துயர்மூன்றும்
தூரத் தாயினும் தோன்றுபாழ் விபரீதந்
துடைப்பதெப் படியென்றால்
நீரில் தோன்றும்தன் நிழல்தலை கீழதாய்
நின்தலை யினும்நேராய்
பாரில் தோன்றிய தன்னைநோக் கிடில்அந்தப்
பாழ்நிழல் பொய்யாமே.

பூரணமாயிருக்கின்ற கனமான சச்சிதானந்த சொரூபத்தில் அனுர்த சட துக்கமாகிய திரிவிதமும் இலவாயினும் மெய்போலத் தோன்றானின்ற தனது சாயையானது தலைகீழாயிருந்து அலைந் தாலும் செவ்விதமாய்ப் பூமியில் தோன்றிய தனது உருவத்தைப் பார்க்கில் அப்பாழான சாயையானது இல்லாமற்போம்.

தன்னைத் தரிசிக்கில் தனது சாயையான திரிசியம் தானாகவே நீங்கும் என்பதாம். (104)

இதுவுமது

213. ஞானம் காரண அறிவுகாண் காரியம்
நாமரூபப் பேர்கள்
ஆன தெப்படி அழிந்ததெப் படியென
ஆய்குதல் பலனன்றே
மான மைந்தனே தீர்க்கச்சொப் பனசுகம்
வந்ததும் பாராமல்
போன தும்நினை யாமலுன் போதமாய்ப்
பூரணமாய் இருப்பாயே.

பெருமையுள்ள புத்திரா! காரணமானது ஞானத்தை அறியும் அறிவாம்; காரியமானது நாம ரூபமான சீவேஸ்வர சகங்களாம். இவற்றின் உற்பத்தி நாசம் எவ்வண்ணமென்று விசாரித்தால் பயன் இல்லையாம். நீண்ட கனவாகிய உலகங்கள் உதித்ததையும் நசித்ததையும் விசாரியாமல் உனது ஞானப்பிரகாசமான பரிபூரண சொரூபமாய் இருப்பாய்.

காரணமான சின்மாத்திரமாகத்தான் விளங்கிய காரியமான யாவும் அஃதாகவே விளங்கும் என்பதாம்.

திருக்கு – (ஞானம்) காரணம்

திருசியம் – (அறியப்படும் பொருள்) காரியம். (105)

சிந்திக்கும் முறையும் அதில் உதிக்கும் அத்துவிதானந்தமும் கூறல்.

214. **அசத்தில் எம்மட்டுண்(டு) அம்மட்டும் பராமுகம்**
**ஆகினாய் அம்மட்டும்**
**நிசத்தில் உள்விழிப் பார்வையாய் இப்படி**
**நிரந்தரப் பழக்கத்தால்**
**வசத்தில் உன்மனம் நின்றுசின் மாத்திர**
**வடிவமா கிடின்மைந்தா**
**கசத்த தேகத்தில் இருக்கினும் ஆனந்தக்**
**கடல்வடி(வு) ஆவாயே.**

மகனே! மெய்போலத் தோன்றிய சக சீவ பரங்களாகிய மித்தையில் எவ்வளவு காலம் சம்பந்தமாய் இருந்தனையோ அவ்வளவு காலமும் பகிர்முகமானாய்; இப்படி பகிர்முகமான அவ்வளவு காலமும் அறிவென்னும் உண்மையில் அந்தர்முக திருஷ்டியால் இடைவிடாத அப்பியாசத்தினால் உன் மனமானது உனது வசமாக இருந்து சைதன்னிய சொரூபமானால் வெறுக்கப்பட்ட சரீரத்தில் நீ இருந்தாலும் பிரமானந்த சாகர சொரூபமாவாய்.

இங்ஙனம் சிந்தித்துச் சித்துருவம் ஆவானாயின் அவ்வுருவமான ஆனந்த சொரூபமே தானாக விளங்குவன் என்பதாம்.

வசத்தில் நிற்றல்—நிறுத்திய இடத்துப் பிறழாதிருத்தல்.

சின்மாத்திர வடிவமாதல்—சிவோகம் என்று பாவனை செய்யும் அகண்டாகார விருத்தி மாத்திரமாய் இருத்தல்.

சிவோகம் என்று பாவணை செய்யும் அகண்டாகார விருத்தி மாத்திரம் உடையவர்க்குச் சரீர துக்கமும் இன்றென்பது இதனால் பெறப்படுவதாம். (106)

மாயை அவித்தை முதலிய சடபாவ நீங்கிச் சிற்சித்தியாகிய ஆத்மாவிற் கரைந்து அஃதான பின்பு, அவ் ஆத்மா சச்சிதானந்த சொரூபம் என்று உணர்த்தின ஆசாரியரை நோக்கி அங்ஙனமாயின் சத்தையும் சித்தையும் போல ஆனந்தமே அதனிடத்திற் காணப் படவில்லை என வினாதல்.

**215. தானன்றி வேறொன்றும் இல்லாத பூரணச்**
**சச்சிதா னந்தகுணமாய்**
**ஊனின்ற உயிர்தோறும் ஒன்றாகும் என்றாலஃ(து)**
**ஒக்கின்ற படிகண்டிலேன்**
**நானென்ற சீவன்கள் சத்தான வகையொக்கும்**
**ஞானங்கள் வெளிக்கண்டதாம்**
**ஆனந்தம் இவைபோல வெளியாக உதியாத**
**அடைவேது குருநாதனே.**

தேசிகரே ஆன்மா தன்மாத்திரம் இருப்பதன்றித் தன்னைத் தவிர இதர வஸ்துக்கள் இல்லாத பரிபூரணமாகிய சச்சிதானந்த சுபாவமாய்த் தேகத்தின்கண் இருந்த சீவர்கள்தோறும் ஏகமாய் இருக்குமாயின், அவ்வான்மா அங்ஙனம் ஒத்திருக்கும் வண்ணம் பார்த்திலன். அகம்பாவமுள்ள சீவர்கள் சத்தென்னும் தன்மை ஒக்கும். சித்தும்

விளங்குகின்றது. இவற்றைப் போல ஆனந்தமானது வெளியாகத் தோன்றாத காரணம் ஏது. (107)

மேல்வினாவிற்கு உத்தரங் கூறல்.

**216. உருவங்கள் இரதங்கள் பரிசங்கள் ஒருபூவில்**
**ஒன்றாகும் ஒன்றாலுமே**
**கரணங்கள் ஓரொன்றின் ஓரொன்று தெரியும்**
**கணக்கின்றி வாராதுகாண்**
**அருமந்த சச்சிதா னந்தச் சுபாவங்கள்**
**ஆன்மாவின் வடிவாகினும்**
**பிரபஞ்ச மயமாம் விருத்திபே தத்தினால்**
**பேதங்களாம் மைந்தனே.**

மகனே! வடிவங்களும் சுவைகளும் பரிசங்களும் ஒரு மலரில் ஒன்றாயிருக்கும் எனினும் இந்திரியம் ஒவ்வொன்றிற்கு அததற்குரிய ஒவ்வொரு விடயம் தெரியுமேயல்லாமல் ஒன்றிற்கும் மற்றொன்றின் விடயம் தெரியமாட்டாது. அப்படியே அருமருந்தன்ன சச்சிதானந்த இயல்புகள் ஆத்ம சொரூபம் ஆனாலும் சகத்துருவமான விருத்தியின் வேற்றுமையினால் வேறுபட்டிருக்கும்.

வடிவம்—கண்ணுக்கு மட்டும் தோன்றும்.

சுவை—நாவிற்கு மட்டும் தோன்றும்.

ஸ்பரிசம்—தோலுக்கு மட்டும் தெரியும். (108)

இதுவுமது.

**217. தாமதம் இராசதம் சாத்துவிதம் முக்குணத்**
**தால்வரும் விருத்திமூன்றாம்**
**ஆமவைகண் மூடமும் கோரமும் சாந்தமும்**
**அபிதானம் ஆகுமகனே**
**ஏமுறஇ ருக்கின்ற சச்சிதா னந்தங்கள்**
**என்றென்றும் ஒன்றாகிலும்**

நாமுரைக் கும்விருத் திப்பிரிவி னால்சொரூப
ஞானாதி பிரிவாகுமே.

மைந்தா! தமசும் இரசசும் சத்துவமும் ஆகிய திரிகுணங்களால் உண்டான விருத்திகள் மூடவிருத்தி எனவும் கோர விருத்தி எனவும் சாந்த விருத்தி எனவும் பெயரைப் பெறுவனவாம். இன்புற இருக்கின்ற சச்சிதானந்தமானவை எப்போதும் ஏகமானாலும் நாம் சொல்லும் விருத்தி பேதத்தினால் சச்சிதானந்த சொரூபங்கள் பேதங்களாம்.

| குணம் | | விருத்தி |
|---|---|---|
| தாமதம் | – | மூடம் |
| ராஜசம் | – | கோரம் |
| சத்துவம் | – | சாந்தம் |
| அபிதானம் | – | பெயர் |
| ஏமுறுதல் | – | மகிழ்வுறுதல். |

(109)

இதுவுமது.

218. சடமான மூடத்த ருக்கல்லு மண்களிற்
சத்தொன்று மேதோன்றுமால்
விடமான காமாதி கோரத்தில் ஆனந்தம்
விளையாது மற்றவைகளாம்
திடமான மொழிவாதி சாந்தத்தி லேசச்சி
தானந்த மூன்றும்வெளியாம்
மடமான மூடங்கள் கோரங்கள் விடுசாந்த
மனமாகில் ஆனந்தமே.

சடமாகிய மரம், கல், மண்களின் மூடவிருத்தியில் சத்து மாத்திரம் தோன்றும். விஷரூபமான காம முதலிய கோர விருத்தியில் ஆனந்தம் உதியாது. சத்தும் சித்தும் தோன்றும். உறுதியான ஒழிவு முதலிய சாந்த விருத்தியில் சத்து, சித்து, ஆனந்தம் ஆகிய மூன்றும் வெளிப்படும். அறிவின்மையாகிய மூடவிருத்திகளையும் கோர விருத்திகளையும்

விடாநின்ற மனமானது சாந்த விருத்தியைப் பெறில் ஆனந்தம் வெளியாம்.

ஆத்ம சொரூப்மான சச்சிதானந்தம் விருத்தி பேதங்களினால் மறைபட்டதும் வெளிப்பட்டதும் போலத் தோன்றினதேயன்றி அவைகள் அதனிடத்து இல்லாதது அன்று என்பதாம். (110)

அச் சச்சிதானந்த இலக்கணம் யாது? என்ற வினாவிற்கு உத்தரம்.

**219. இகமான குருநாத னேசச்சி தானந்தம்**
**எனும்இலக் கணம்அறிகிலேன்**
**அகலாத சத்தாவ தேதுசித் தாவதேது**
**ஆனந்த மேதென்றிடின்**
**மிகுகால மூன்றுங்கெ டாதிருப் பதுசத்து**
**வேறுபா டறிதல்சித்தாம்**
**மகிழ்காம நுகர்போது சுகமாகும் அனுபூதி**
**வாழ்வென்ப(து) ஆனந்தமே.**

இம் மானிட வடிவமாக எழுந்தருளிய குருசுவாமியே! சச்சிதானந்தம் என்கிற இலக்கணத்தைத் தெரிந்திலன்; நீங்காத சத்தென்பது யாது? சித்தென்பது யாது? ஆனந்தம் என்பது யாது? என்று கேட்பாய் ஆயின், மிகுந்த திரிகாலங்களினும் நசியாதிருப்பது சத்தாகும்; சிற்சட பேதங்களை அறிதல் சித்தமாகும்; விரும்பும் காமத்தை அனுபவிக்கும் போது உண்டாகும் இன்பம் போன்ற சுவானுபூதி சுகமென்று சொல்லப்படுவது ஆனந்தமாம்.

சச்சிதானந்த இலக்கணம் இவையெனக் கூறினதாம். (111)

ஆத்மா சச்சிதானந்தம் என்பதற்கு அனுபவம் வினாதல்.

**220. நாகச் சரீரத் திருக்கும் சரீரிதனை**
**நால்வேத மாவாக்கியம்**
**நீசச்சி தானந்தம் என்றிடினும் ஆசிரியர்**
**நீபிரம மாகும்எனினும்**

**மாசற்ற சச்சிதா னந்தநான் என்னஇவன்**
**மன்னுமனு பவம்எங்ஙனே**
**கோசப்பு ரங்களையி டித்துத்த கர்த்தமத**
**குஞ்சரக் குருநாதனே.**

பஞ்சகோசமாகிய மூன்று தேகங்களையும் உடைத்துத் துகளாக்கிய யானையாகிய குரு சுவாமியே! நசிக்கின்ற தேகத்தில் இருக்கின்ற தேகியை, நான்கு சுருதியின் முடிவில் உள்ள மகா வாக்கியங்களும் நீயே சச்சிதானந்த சொரூபம் என்று சொல்லினும் தேசிகர் உபதேசமும் நீயே பிரமமென்று சொல்லினும், நின்மலமான சச்சிதானந்தமே நானென்று இம் மாணாக்கன் பொருந்தும் அனுபவமானது எவ்விதம்?

மூன்று தேகங்கள்: ஸ்தூலம், சூட்சுமம், காரணம்.

| **வேதங்கள்** | **மகாவாக்கியங்கள்** | |
|---|---|---|
| இருக்கு | பிரஞ்ஞானம் பிரஹ்மம் | |
| யசுர் | அகம் பிரஹ்மாஸ்மி | |
| சாமம் | தத்துவமசி | |
| அதர்வணம் | அயமாத்மாப் பிரஹ்மம். | (112) |

ஆத்மா சத்தென்பது அனுபவங் கூறல்

**221. சென்மாந்த ரஞ்செய்த வினைகள்உடல் தருமெனில்**
**செல்காலம் இவன்உண்டலோ**
**கன்மானு பவநரக சொர்க்கமெனில் வருகின்ற**
**காலத்தும் இவன்உண்டலோ**
**உன்மாத யாதனாவுடல் கடவுள் உடன்மனுட**
**உடன்மாறி மாறியழியும்**
**தன்மாய வுடல்கெடினும் இவன்இருப் பதுகொண்டு**
**சத்தென்பது ஒக்கும்மகனே.**

மைந்தா! முற்சனனங்களில் செய்த கன்மங்களானவை தேகத்தைக் கொ[illegible]க்குமென்றால் சென்ற காலத்தினும் இப் புருடன்

இருந்தான் அல்லவா? இப்போது செய்த கன்மம் அனுபவித்ததற்குத் தக்க இனி நரக சொர்க்கங்களை அடைவன் என்றால் எதிர்காலத்தினும் இவன் இருப்பான் அல்லவா? சித்தப் பிரமைக்குக் காரணமான யாதனா சரீரமும், தேவ சரீரமும் மானிட சரீரமுமாக மாறி மாறி நசிக்கும். தனது மித்தையாகிய தேகம் நசிக்கினும் இத் தேகி கெடாமல் இருப்பதனால், இவனே சத்தென்னும் அனுபவம் ஒக்கும்.

தேகம் முதலியன நசிக்கினும் தான் நசியாமல் மூன்று காலங்களிலும் இருத்தலின் ஆத்மாவே சத்தென்பதாம். துக்க விசேஷம் நரகமென்றும், சுக விசேஷம் சுவர்க்கமென்றும் கூறப்படும்.

பாவஞ் செய்தவர்க்கு அவர் இறந்த பின்னர் யமவாதனையை அனுபவித்தற் பொருட்டுப் பஞ்ச தன்மாத்திரைகளாலே வேறொரு யாதனா சரீரம் உண்டாகின்றது. அது துக்கத்தைப் பொறுத்துக் கொள்ளுதற் பொருட்டு மிக உறுதியாக இருக்கின்றது என்று மனுதர்ம சாஸ்திரம் கூறுகிறது. (113)

ஆத்மா சித்தென்பதற்கும் ஆனந்தம் என்பதற்கும் அனுபவம் கூறல்.

**222. இருளாக மூடும்சு ழுத்தியில் இராத்திரியில்**
**இரவிசுடர் அற்றபொழுது**
**மருளாமல் இருளையும் பொருளையும் தெரிகின்ற**
**வகைகொண்டு சித்தாகுமே**
**பெருவாழ்வு மிக்கதா னேதன்னி டத்தினில்**
**பேராத பிரியமதனால்**
**அருகாத பிரியஞ்சு கத்தில்வரும் ஆதலால்**
**ஆனந்த மாம்மைந்தனே.**

மகனே! அந்தகாரமாக மூடிக் கொள்ளும் சுழுத்தி அவத்தையிலும் இரவிலும் சூரியப் பிரகாசம் இல்லாதபோதும் மயங்காமல் இருட்டையும் வஸ்துக்களையும் காண்கின்ற வகையினால் ஆன்மா சித்தாகும். பேரானந்த மிகுந்த தானே

தன்னிடத்தில் நீங்காத பிரியம் வைப்பதனால் குறையாத பிரியமானது தனது சுகத்தில் வருவது அனுபவம், ஆதலால் ஆன்மாவே ஆனந்தம்ாம்.

ஆன்மா அறிவு அறியாமை இன்றி அறிவாயிருந்து அறிதலின் சித்தும் விஷயங்கள் அனைத்திலும் உள்ள பிரியம் நீங்கினும் தனது பிரியம் நீங்காமையின் ஆனந்தமும் ஆம் என்பதாம். (114)

சுக சாதனங்களில் பிரியம் இருப்பது போல ஆத்மாவிலும் பிரியம் இருத்தலின் அது ஆனந்தத்திற்குச் சாதனம் ஆகாதோ எனில் அங்ஙனம் ஆகாது என்பதற்கு அனுபவம் கூறல்.

**223. அன்னபா னாதிசுக சாதனம(து) ஆகையால்**
**ஆர்க்கும்வெகு பிரியமாகும்**
**இன்னவா(று) ஆன்மாவும் ஆனந்த சாதனம்**
**எனக்கருதல் பொருள்அல்லவே**
**சொன்ன ஆன் மாவையொரு சுகசாத னங்களொடு**
**சொல்லுவா யாகின்மகனே**
**உன்னதா னந்தம்வே றேஅனு பவிப்பதாம்**
**உபயஆன் மாவும்உளவோ.**

மைந்தா! உண்பன, பருகுவன முதலியவை சுகத்துக்குச் சாதனம் ஆகையால் யாவர்க்கும் மிகுந்த பிரியமாம் இவ்வண்ணம் ஆத்மாவும் ஆனந்தத்துக்குச் சாதனமென்று நினைப்பது அருத்தம் அல்லவே? சொல்லிய ஆத்ம சொரூபத்தை ஒரு சுக சாதனங்களோடுங்கூடச் சொல்லுவையாகில் உனது ஆனந்தமானது உன்னைவிட வேறோ? அனுபவிப்பதாகிய இரண்டாம் ஆத்மாவும் உண்டோ?

சாதனம் இறந்து, சாத்தியமான இடத்தில் சேஷித்த நிரதிசய ஆனந்தம் வேறும், அஃது அனுபவிக்கும் ஆத்மா வேறும் இன்று; ஆதலினால் அவ் ஆத்மா ஆனந்தம் ஆவதன்றி அதற்குச் சாதனம் ஆகாது என்பதாம். (115)

ஆத்மா ஆனந்த சொரூபமாயின் எதிரிட்டு அனுபவிக்கும் ஆனந்தம் அஃது ஆகாதோ? எனின் அஃது விடயா நந்தமாதலின் ஆகாது என்பதற்கு அனுபவம் கூறல்.

**224. விடயசுக மதில்வருதல் பிரியமாத் திரமாகும்**
**வெகுபிரிய ஆன்மாவிலாம்**
**விடயசுகம வருபிரிய மாறிவரும் ஆன்மாவில்**
**வெகுபிரிய மாறாதுகாண்**
**விடயசுகம் விடலுமாம் கொளலுமாம் ஆன்மாவை**
**விடுவதெவர் கொள்வதெவர்பார்**
**விடயசுக போகங்கள் விடும்அவனை அவனால்**
**விடப்படா தொருநாளுமே.**

விஷய ஆனந்தத்தில் இன்பமுண்டாதல் பிரீதியின் அளவினதாம். ஆத்மாவிடத்தில் அதனினும் மிகுந்த பிரியமுண்டாகும். விடய ஆனந்தத்தில் உதிக்கின்ற பிரியமானது நிலையாது மாறி மாறி உண்டாகும். ஆத்மாவினிடத்திலுள்ள மிகுந்த பிரியமானது மாறாது ஒரு தன்மைத்தாம். விஷய சுகம் வெறுத்து விடுவதற்கும் விரும்பியேற்றுக் கொள்வதற்கும் தகுதியாகும். இப்படி ஆத்மாநந்தத்தை விடுகின்றவர் யாவர்? கொள்ளுகின்றவர் யாவர்? நன்றாகப் பார்; விடய ஆனந்த அனுபவங்களை ஒருவன் வெறுத்துவிடக் கூடும். அங்ஙனம் வெறுத்து விட்டவன் தன்னால் தன்னை வெறுத்துப் புறம் படுத்தக் கூடுமோ? ஒரு நாளும் கூடாதே.

விடய இன்பங்கள் அனைத்தும் ஆத்ம பிரியலேசம் ஆதலின் அஃது நசித்தும் இஃது நசியாதிருத்தலின் அவ் ஆனந்தம் ஆத்மாநந்த மாகாது என்பதாம். (116)

ஆத்மா ஆனந்த வடிவமாகின் அதனிடத்தில் வெறுப்பு இருக்கின்றதேயெனில் அங்ஙனம் இன்று என்பதற்கு அனுபவம் கூறல்,

225. வேகின்ற கோபங்க ளால்என்னை நான்கொன்று
விடுகிறேன் என்றுசிலபேர்
சாகின்ற படியினால் தன்னையே தான்கொன்று
சாவன்எனல் சங்கையலவே
தேகந்த னைக்கொல்லும் அவனால்வி டப்பட்ட
தேதும்அவன் அல்லன்மகனே
ஆகந்த னில்கோபம் இலதுஅதனை ஒருநாளும்
ஆன்மாவெ றுப்பதிலையே.

மைந்தா! கொதித்து எழா நின்ற கோபங்களால் என்னை யான் கொல்லுகின்றேன் என்று சொல்லிச் சிலர் இறக்கின்ற படியினால் ஆன்மா தன்னைத்தானே கொலை செய்து கொண்டு சாவது என்று சங்கிப்பது சங்கை அன்றாம்; உடலைக் கொல்கின்ற அப்புருடனால் நீக்கப்பட்ட தேகமானது அவ் ஆத்மா அன்று, தேகத்தில் கோபம் வந்ததேயல்லாமல் ஆத்மாவை எப்போதும் ஆத்மா வெறுப்பதில்லை.

ஆத்மா தற்பிரியத்தில் குறைவு வாராமல் தேகத்தை நீக்கினதே யன்றித் தன்னிடத்தில் வெறுப்புண்டானது அன்று என்பதாம். (117)

தனது ஆனந்த முதலிய ஆனந்தங்கள் ஆத்மா என வருமெனில் அங்ஙனம ஆகா எனக்கூறி, ஆத்மானந்தமே முக்கியம எனக் கூறல்.

226. தாகப்ப டும்பொருளி லும்மகன் பிரியமாம்
தனயனிலும் உடல்பிரியமாம்
ஆகத்தி லும்பிரியம் இந்திரிய மாம்கரணம்
அதனிலும் பிரியம்உயிராம்
ஏதுப்பி ராணனிலும் வெகுபிரியம் ஆன்மாவில்
இந்தஆன் மாமுக்கியம்
ஊகத்தி னால்கௌண மித்தைகர்த் தாமூன்றும்
ஒன்றினொன்(று) அதிகம்மகனே.

மைந்தனே! பிரியமாகச் சம்பாதிக்கும் தனங்களினும் புத்திரன் பிரியமாகும், அப் புத்திரனினும் தேகம் பிரியமாகும், அத் தேகத்திலும் இந்திரியங்களானவை பிரியமாகும். அவ் இந்திரியங்களிலும் சீவனானது பிரியமாகும். ஒன்றான அச் சீவனிலும் கூடஸ்தனிடத்தில் மிகுந்த பிரியமாம். ஆதலால் இவ் ஆத்மாவே முக்கியமாம்; உத்தியினால் கௌணாத்மா, மித்தையாத்மா, கர்த்த ஆத்மா ஆகிய மூன்றும் ஒன்றினொன்று அதிகமாம்.

தனம் முதலிய ஆறினும் வைக்கின்ற பிரியம் கௌணம் எனவும், ஆத்மப் பிரியமே முக்கியம் எனவும் கூறினதாம்.

1. தனம்
2. புத்திரன்
3. ஸ்தூல சரீரம்
4. இந்திரியம்
5. அந்தக்கரணம்
6. பரமாத்மா

இவை ஒன்றைவிட மற்றொன்று பிரியமாம். யுக்தி வாயிலாகப் பார்க்குமிடத்துக் கௌணான்மா, மித்தையான்மா கர்த்தான்மா என மூன்று ஆன்மா உண்டு. அவற்றுள் ஒன்றிலொன்று அதிகப் பிரியமாம். (118)

ஆத்மானந்தமே முக்கியமாயின் புத்திரன் முதலியவைகள் ஆத்மா எனவும் அவைகள் முக்கியம் எனவும் கூறியது என்னை எனின் அதற்கு உத்தரங் கூறல்.

**227. கெடலான பொழுதிவன் காணிக்கு மகனான**
**கௌணவான் மாமுக்கியம்**
**விடலாத உடலம்ப ரிக்குநாள் உடலான**
**மித்தையான் மாமுக்கியம்**
**திடமான நன்மைகதி வேண்டினால் கர்த்தனாம்**
**சீவஆன் மாமுக்கியம்**
**சடமாயு முத்தியின்நின் ஞானஆன் மாவான**
**தானேம காமுக்கியம்.**

மரண காலத்தில் இவன் ஆதீனத்துக்கு வேண்டிய புத்திரனான கௌணாத்மாவே முக்கியமாம். நீங்காத தேகத்தைத் தாங்குகின்ற நாளில் அத்தேகமான மித்தையாத்மா முக்கியமாம்; பலமாகிய நல்ல கதியை விரும்புங் காலத்தில் நான் என்னும் சீவாத்மா முக்கியமாம்; திரிசியங்கள் நீங்கிய மோட்சத்தில் ஞானாத்ம ரூபமாகிய தானே முக்கியமாம்.

புத்திரன் முதலிய மூன்றையும் முக்கிய ஆத்மா என்றது ஒவ்வோர் சமயத்து ஆதலால் பூர்வபட்சமும், ஆத்மாவை முக்கியம் என்றது என்றும் ஆதலால் சித்தாந்தமுமாம்.

கௌணன் – உரிமையுடையவன்.

அமரபக்கம் – தேய்பிறை (கிருஷ்ண பட்சம்)

பூர்வ பக்கம் – வளர்பிறை (சுக்கில பட்சம்). (119)

விருப்பு முதல் மூன்று நீங்கிய ஆனந்தமே ஆத்ம சொரூபமாம்.

**228. புலியும் அனு கூலமெனில் இட்டமாம் பகைசெயின்**
**புதல்வன்எனி னும்வெறுப்பாம்,**
**உலகில்இரு வகையும்அல் லாதபுல் ஆதியில்**
**உதாசீனமாம் ஆதலால்**
**மலினமறு சின்மயன் பலவகையும் இப்படி**
**மகிழ்ச்சியில் விருப்பம்இகழான்**
**அலகிலான் அந்தவடி வாகுமுன் சொரூபத்தை**
**ஆராய்ந்துபார் மைந்தனே**

மைந்தனே! வெறுக்கத் தக்க புலியும் அனுகூலம் செய்யும் ஆயின், சிநேகமாகும்; புத்திரனாயினும் பகைக்கின் துவேஷமாம். பூமியின்கண் இவ்விரண்டும் அல்லாத திரண முதலியவைகளில் உபேட்சையாம், ஆதலினால் களங்கமற்ற ஞான சொரூபன் ஆனவன் நானாவிதத்திலும் இவ் வண்ணம் ஆத்மானந்தத்தின் பிரியத்தை

நீங்கான். அளவற்ற பிரமானந்த சொரூபமாகிய உனது ஆத்ம சொரூபத்தை ஆராய்ந்து அறிவாயாக.

விருப்பு வெறுப்பு உதாசீனம் ஆகிய மூன்றும் ஆத்ம சுகத்திற்கு மாறுபடுதலினாலும் இவை இல்லாத அச்சுகம் மாறுபடா திருத்தலினாலும் இவ் ஆனந்தமே ஆத்ம சொரூபமாம் என்பதாம். இஃது மேற்கூறும் அஷ்டவித ஆனந்தத்து ஒன்றான ஆத்மானந்தம் எனக் கொள்க.

உதாசீனம் – வெறுப்பு இன்மை (நொதுமல்)

திரணம் – புல் (120)

ஆத்மா நிரதிசயானந்தம் என்பது அனுபவமாம் பொருட்டு அதிசயானந்தம் எண் விதமாகக் கூறுவான் தொடங்கி, ஆனந்தம் எத்தனை வகை என்ற வினாவிற்கு உத்தரங் கூறல்.

**229. மானஞ்சி றந்தகுரு நாதனே ஆனந்த**
**வகைகள் எத்தனை யென்னிலோ**
**ஞானம்தி கழ்ந்தபிர மானந்தம் வாசனா**
**நந்தம்விட யாந்தம்என்(று)**
**ஆனந்தம் மூன்றுவிதம் எட்டுவகை யென்பர்சிலர்**
**அவ்வைந்தும் இதில் அடக்கம்**
**ஆனந்த வகைசொலக் கேள்மைந்த னேஎட்டும்**
**இஃதுஇன்னது இன்னதெனவே.**

பெருமை மிகுந்த தேசிகோத்தமரே! ஆனந்தப் பிரிவுகள் எவ்வளவென்று கேட்பாயாகில், சித்து விளங்கிய பிரமானந்தம் எனவும், வாசன ஆனந்தம் எனவும், விஷயானந்தம் எனவும், ஆனந்தம் மூன்று விதமாம். சிலர் எட்டு விதம் என்று சொல்லுவார்கள். மற்றைய ஐந்தும் இம் மூன்றில் அடக்கமாம். எண்வகை ஆனந்தமும் இஃது இன்னது இன்னது என்று நாம் அவ் வகுப்பைச் சொல்ல நீ கேட்பாயாக.

பிரமானந்தத்தில் ஆத்மானந்தமும், முக்கியானந்தமும், நிசானந்தமும், அத்துவிதமானந்தமும், ஞானானந்தமும் ஆகிய ஐந்தும் அடங்கி இருக்கின்றது என்பார். 'அவ்வைந்தும் இதில் அடக்கம்' என ஒருமையாகக் கூறினார். (121)

அவ் அஷ்டவித ஆனந்தத்தின் வகை கூறல்.

**230. போகத்தில் வருசுகம் விடயசுகம் நித்திரைப்**
**போதுளது பிரமசுகமாம்**
**மோகத்த னந்தலிற் வாசனை சுகமும்**
**முழுப்பிரியம் ஆன்மசுகம்**
**யோகத்தில் உளதுமுக் கியசுகம் உதாசீன**
**முற்றசுக நிச்சுகமதாம்**
**ஏகத்தை நோக்கல்அத் துவிதசுகம் வாக்கியம்**
**எழுந்தசுகம் ஞானசுகமே**

போகங்களில் வருகின்ற ஆனந்தம் விடயானந்தமாம். சுழுத்தி காலத்துள்ள ஆனந்தம் பிரமானந்தமாம். மயக்கமாகிய நித்திரை தெளிந்து வரும் சமயத்துள்ள ஆனந்தம் வாசனானந்தமாம். எங்கும் தனது பிரிய வடிவமாகக் காணும் சுகம் ஆத்மானந்தமாம். சமாதியிலுள்ள சுகம் முக்கிய ஆனந்தமாம்; உதாசீனத்திலுள்ள ஆனந்தம் நிச ஆனந்தமாம்; அத்துவிதமான தன்னை நாடா நிற்கும் சுகம் அத்துவித ஆனந்தமாம், மகாவாக்கிய விசாரத்தில் உதயமான ஆனந்தம் வித்தியானந்தமாம்.

ஞேயத்தில் உதிக்கும் இன்பம் என்பார், "போகத்தில் வருசுகம்" எனவும், நனவில் சுழுத்தியில் உள்ளது பிரம சுகம் என்பார், "நித்திரை போதுளது பிரமசுகம்" எனவும் கூறினார்.

சுருக்கமான அருத்தத்துடன் அவ் ஆனந்தங்களின் நாமங்களைக் கூறினதாம். (122)

அவற்றில் விடயானந்த இலக்கணங் கூறல்.

231. இவ்வா றுரைசெய்த சுகபே தங்களின்
இயல்பாம் அவைசொல மகனேகேள்
ஒவ்வா நனவினில் உழல்வான் இடர்கெட
உறங்குஞ் சயனத்தில் உறுநேரம்
செவ்வா மனமக முகமா மதிலொளிர்
சித்தின் சுகநிழல் சேருங்காண்
அவ்வா றிவனுள மகிழ்வாம் அனுபவம்
அதுதான் விடயசு கானந்தம்.

1. விஷயானந்தம்

மைந்தா! இந்தப் பிரகாரம் சொல்லிய ஆனந்த வேறுபாடுகளின் இயல்பான தன்மைகளைச் சொல்லக் கேட்பாயாக. இன்பம் பொருந்தாத சாக்கிரத்தில் சுழல்பவனுடைய துன்பம் நீங்கும் பொருட்டுப் படுக்கையில் நித்திரை செய்யும் சமயத்தில் செவ்விதான மனமானது அந்தர் முகமாகும். அம் மனதில் பிரகாசிக்கின்ற சிதானந்தச் சாயையானது சேரும். அவ் வண்ணம் இவன் மனமானது மகிழ்ச்சியாகும்; அனுபவமான அதுவே விடயானந்தமாம்.

சமாதியில் அகமுகமாகச் சென்று அறியுமிடத்து உண்டானது பிரமசுகம் ஆயினும் அதை எதிரிட்டு அறிந்து மனமகிழ்தலின் அச் சுகம் விடயமானந்தமாயிற்று என்பதாம். (123)

பிரமானந்த இலக்கணங் கூறல்.

232. ஈனந் தருசுக விடயந் திரிபுடி
இடரா மௌனமனம் அசையாமல்
சேனந் தனதுகு லாயந் தனில்விழு
செயல்போல் நித்திரை செறிசீவன்
தானந் தமில்பரன் உடனொன் றுவனொரு
தனையல் லதுபிற நினையாமல்
ஆனந் தம்மய மாவன் சுகமிகும்
அதுதான் உயர்பிர மானந்தம்

## 2. பிரம்மானந்தம்

இழிவைக் கொடுக்கின்ற விஷய சுகமானது திரிபுடியான துன்பமாம் என்று மனம் சலியாமல் பருந்தானது தனது கூண்டில் அடங்கும் தொழிலைப் போல நித்திரை செய்கின்ற சீவனானவன் முடிவில்லாத பிரமத்தோடு கூடுவன். ஒப்பற்ற தன்னையல்லாது வேறு கருதாமல் ஆனந்தா காரமாவன்; சுக மிகுந்த அவ் ஆனந்தமே மேலான பிரமானத்தமாம்.

நித்திரையென்பது அறிதுயில் எனக் கொள்க. (124)

இதுவுமது

**233. தூங்கும் சுகமது பிரமச் சுகமெனல்**
**சுருதிப் பொருள்விழி துயில்வோர்கள்**
**தாங்கும் மலரணை நன்றா கச்சிலர்**
**சம்பா திப்பது தானசுகம்**
**தீங்கும் நன்மையும் ஆண்பெண் முறைமையும்**
**தெரியாது அம்ளிசெய் பொழுதேபோல்**
**ஆங்குள் வெளிகளும் அறியா அனுபவம்**
**அதனால் அதுபிர மானந்தம்.**

அறிதுயிலில் உதயமாகும் ஆனந்தமானது பிரமானந்தம் என்று கொள்வது வேத முடிவான மகா வாக்கியப் பொருளாம். நித்திரை செய்பவர்களில் சிலர் தாங்கா நின்ற புஷ்பசயனத்தை நல்லதாகச் சேகரிப்பது ஸ்தான சுகமாம். நன்மை தீமையும் ஆண் பெண் என்கின்ற முறைமையும் அறியாமல் நித்திரை செய்கின்ற காலம் போல அவ்விடத்து அகம் புறங்களும் தெரியாத சுவானுபவம் ஆதலால் அவ் அறிதுயில் பிரமானந்தமாம்.

சுழுத்தியைப் போலச் சமாதியில் அக முகமாய் ஆத்மா பிரமத்தில் சேர்ந்து அதன் மயமாச் சுகத்தை அனுபவத்தலின் அஃது பிரமானந்தம் ஆயிற்று என்பதாம். (125)

சித்தில் சுகம் விளங்கும் அனுபவம் தெரிவான் அறிவின்றி ஆனந்தம் அறிவில் எங்ஙனம் தோன்றும்? என்று இடையில் வினாதல்.

234. உதவும் புவியினில் ஒருவன் அனுபவம்
ஒருவன் மனதினில் உதியாதே
மதியும் கெடுகிற துயில்கொண்(டு) ஆனந்த
மயனன்றோ சுகமுறு கின்றான்
இதுவிஞ் ஞான மயனாம் சிந்தையின்
நினைவாய் வந்திடுமெனல் கண்டேன்
சுதைவிண் ணார்புகழ் குருவே நீரிது
சொல்லீர் சகலமும் வல்லீரே.

முத்திக்குச் சகாயமாகிய இப் பூமியில் ஒருவனுக்கு உதிக்கும் அனுபவமானது வேறொருவன் மனதில் உண்டாகாதே: மனோமயகோசத்தோடு விஞ்ஞான மயகோசமும் இறக்கின்ற யோக நித்திரையைக் கொண்ட ஆனந்தாகாரன் அல்லவா பரமசுகத்தை அடைகிறான். இச் சுகமானது விஞ்ஞான வடிவமாகிய மனதில் நினைவாக வரும் என்பதை அறிந்தேன். இஃது எங்ஙனம் கூடும்? அமிர்த பானம் செய்யும் தேவர்கள் துதிக்கா நின்ற சமஸ்த வல்லமையுள்ள தேசிகரே! நீர் இதை அருளிச் செய்வீராக. (126)

மேல் வினாவிற்கு உத்தரங் கூறல்.

235. நெய்யும் வெண்ணெயும் இருபேர் களும்அறி
நினைவிற் பிறிவறி வினில்இல்லை
செய்யும் நனவினில் இறுகும் மனதொடு
சேருஞ் சின்மய விஞ்ஞானன்
நையும் துயர்மனம் நழுவும் பொழுதுணர்
ஞானச் சுகமுணும் ஆனந்தன்
பெய்யும் துளிகளும் நீருங் குளமொடு
பாகும் போலிவர் பிறிவன்றே.

நெய் என்பதும் வெண்ணெய் என்பதுமாகிய இரண்டு நாமங்களும் நாமரூபமாக அறிகின்ற மனதிற் பேதமே அன்றி அவற்றின் சுவையைக் கொள்கின்ற அறிவினில் பேதம் இல்லை. இச்சா ஞானக் கிரியைகளைச் செய்கின்ற சாக்கிரத்தில் ஸ்திரமான மனதோடும் சேருகின்ற சின்மாத்திரமான விஞ்ஞான மயனும் வருந்துகின்ற துன்பமுள்ள மனமும் நீங்குங் காலத்து அறிகின்ற ஞானானந்தத்தை அனுபவியாநின்ற ஆனந்த மயனும் ஆகிய இவர்கள் மேகம் பொழியாநின்ற மழைத்துளிகளும் சலமும் போலவும் வெல்லமும் பாகும் போலவும் வேறல்லர்.

அறிவிறந்து உதிக்கும் ஆனந்தம் தெளிவாக விளங்குதலினாலும் ஆனந்தத்தினின்று உதிக்கும் அறிவு சுகமாய் இருத்தலினாலும் இச் சிற்சுகம் அனுபவித்தல் ஒன்றாதலின் அறிவில் வரும் என்பதாம். இதை குருமுகமாகச் செய்யும் சகச நிஷ்டையில் காண்க.

குளம் – வெல்லம் (127)

அங்ஙனம் ஆயின் பிரமானந்தமயமாக நின்றுவிடாமல் அறிவில் வருவானேன் என்ற வினாவிற்கு உத்தரமும் வாசனானந்த இலக்கணமுங் கூறல்.

**236. ஒன்றா கியபிர மாநந் தன்சுகம்**
**ஒழிவா னேன்வெளி வருவானேன்**
**என்றான் முன்செய்த கருமம் வெளியினில்**
**இழுக்குஞ் சுமுத்திவிட் டெழுந்தோனும்**
**நன்றா யினசுகம் அகலான் வெளியிலும்**
**நடவான் மறதியும் பெறமாட்டான்**
**அன்றாம் எனஇருந்(து) உறங்கும் சிலகன்மம்**
**அதுவே வாதனை ஆனந்தம்.**

### 3. வாசனானந்தம்

ஆனந்த மயமான சீவன் ஏகமாகிய பிரமானந்த சுகத்தை நீங்குவானேன்? வெளியே சாக்கிரத்தில் வருவானேன்? என்று கேட்கில் பூர்வத்தில் செய்த கன்மமானது வெளியினில் கொண்டு வரும்; அப்படிச் சுழுத்தியினின்று வெளிப்பட்டவனும் நன்மையான அச்சத்தை நீங்கான்; புறம்பிலும் செல்லான்; மறதியையும் அடையான்; அன்றெனவும் ஆம் எனவும் நின்று நித்திரை செய்கின்ற சொற்ப காலமாகிய அதுதான் வாசனானந்தமாம்.

ஆனந்த மயத்தினின்றும் விஞ்ஞான மயத்தில் வருதல் சகஜ நிட்டையும் பிராரத்த கன்மானுபாவத்தையும் குறித்தெனவும் துயிலைப் போலச் சமாதியினின்று நீங்குஞ் சமயத்தில் பிரமாநந்த சமஸ்காரத்தோடும் வருதலின் அச் சுகம் வாசனானந்தம் ஆயிற்றெனவும் கூறினதாம். (128)

நிசானந்த இலக்கணங் கூறல்.

237. **அந்தக் கணம்உடல் அகமென் றிடர்களில்**
**அலைந்தே சுகந்தனை மறந்தேபோம்**
**முந்தைச் செயும்வினை சுகதுக் கந்தரு**
**மோனந் தருநடு வடிவேகாண்**
**எந்தப் புருடனும் ஒருசிந்தை யும்அற**
**இருந்தேன் எனல்அனு பவமாகும்**
**இந்தப் படிதன்உ தாசீ னச்சுகம்**
**இதுவே நிசமெனும் ஆனந்தம்.**

### 4. நிஜானந்தம்

தேகத்தை நானென்று நினைத்த அப்போதே ஆன்மா துன்பங்களிற் சுழன்று ஆனந்தத்தை மறந்து விடும். முன்செய்த கன்மன்மானது இன்பங்களையேனும் துன்பங்களையேனும் கொடுக்கும்; மகாமௌனங் கொடுப்பது மத்திய கத நிலையையேயாம். எத்தன்மையான புருஷனும் ஒரு நினைப்புமின்றி

இருந்தேன் என்பது அனுபவமாம், இப்படி தனது உதாசீனத்தில் உண்டான ஆனந்தமான இதுதான் நிசானந்தமாம்.

சமாதியில் விருப்பு வெறுப்பு இன்றிச் சமரசமான உண்மையாய் இருத்தலின், அச்சுகம் நிசானந்தமாயிற்று என்பதாம்; இதை முக்கியானந்தம் எனக் கூறுவாரும் உளர்.

**விளக்கம்:** சுகத்தை நல்வினையும், துக்கத்தைத் தீவினையும் தருகின்றன. உதாசீனத்தன்மை எந்த வினையாலும் உண்டாவதன்றாம். ஆனால் சுக துக்கங்களின் சந்தியில் இயல்பாக உண்டாவதாம். அவ் உதாசீன காலத்தில் தோன்றும் ஆனந்தம் வாசனானந்தமாம் என்றுணர்க. (129)

முக்கியானந்த இலக்கணங் கூறல்.

**238. நிசமா னதுமுக் கியமோ குடத்துள**
**நீரன்றோ வெளியீ ரந்தான்**
**வசமாம் அகங்கர மறைந்தான் நிசமது**
**படிந்தால் முக்கிய வகையாகும்**
**திசையார் திரிசயம் அறியா தேதுயில்**
**செறியா தேயுடல் தறிபோலே**
**அசையா தேமதி சமமா கியநிலை**
**அதுதான் முக்கியம் ஆனந்தம்.**

### 5. முக்கியானந்தம்

நிசானந்தமானதும் முக்கியானந்தமோ எனில் கடத்துக்குள் இருக்கும் சலமல்லவோ புறம்பில் இருக்கின்ற ஈரம். அதுபோல வசமான அகங்காரம் மறைபட்டு நிசமானது கூடினால் முக்கியமாம். திக்குகளில் நிறைந்திருக்கின்ற விடயத்தை அறியாமலும் நித்திரையை அடையாமலும் தேகமானது ஸ்தம்பத்தைப் போல அசையாமலும் அறிவானது சமமாக நிற்றலே முக்கியானந்தமாம்.

சமாதியில் அறிவு அறியாமை இன்றி அறிவே முதலாகச் சுகித்திருத்தலின் அச் சுகம் முக்கியானந்தம் ஆயிற்றென்பதாம். இதை

நிசானந்தமெனக் கூறுவாருமுளர். அங்ஙனம் கூறாது இங்ஙனம் கூறியது என்னையெனின் நடுநிலையில் நிற்கின் முக்கியமான சொரூபம் வெளிப்படுதலின் எனக் கொள்க. சமாதியில் தன்னிடத்தில் தானே சுகித்தலின் அச் சுகம் ஆத்மானந்தமாயிற்று எனவும் சமாதியில் ஆனந்தம் அத்துவிதானந்தமாயிற்று எனவும், சமாதியில் அது நீ என்பது இன்றி ஆனந்த போதமாய்ச் சுகித்தலின் அச்சுகம் வித்தியானந்தமாயிற்று எனவும் கொள்க நிரதிசயானந்த அம்சமான இவ் அஷ்டவித ஆனந்தங்களும் அதிசயமாகச் சமாதியின்கண் நவநவமாய் விளங்குதலின் அதிசய ஆனந்தமெனக் கூறப்படு வனவாம்.

**விளக்கம்:** தியான – யோக – சமாதிகளின் அப்பியாச மிகுதியால் மனோலயமான விடத்து மறைப்பின்றி விளங்கும் ஆனந்தம் முக்கியானந்தமாம் என்றுணர்க. (130)

ஆனந்த மகான்மியங் கூறல்.

**239. மனுடன் மனுடகந் தருவன் தேவநன்**
**மாகந் தருவன்ஒண் பிதிரோடே**
**தனுடன் னசுரன் சுரன்இந் திரனா**
**சானும் பிரசா பதியானோன்**
**கனவி ராட்டன் இரணிய கருப்பன்**
**கருதும்இப் பதினொரு பேர்கள்**
**பினவா னந்தங்கள் நுரையாம் பிரளய**
**வெள்ளக் கடல்பிர மானந்தம்.**

மானுடனும் மானுட கந்தருவனும் தேவகந்தருவனும் பிதிர்கருமத் தேவனும் அசுரனும் தேவனும் இந்திரனும் பிரகஸ்பதியும் பிரமனும் கனமாகிய விராட் புருடனும் இரணிய கர்ப்பனும் ஆகிய முறையாக நினைக்கின்ற இந்தப் பதினொரு பெயர்களின் ஒன்றுக்கொன்று பேதமாயுள்ள ஆனந்த வகைகள் பிரமானந்த மென்னும் கற்பாந்த வெள்ள சாகரத்தின் நுரைகளாம்.

நிரதிசயானந்தமென்னும் கடலில் அஷ்டவித ஆனந்தமென்னும் நீரில் மனுடானந்த முதல் பதினோரானந்தங்களும் நுரை முதலிய லேசங்களாகத் தோற்றும் என்பதாம்.

பிரகஸ்ப்தி – தேவகுரு

பிரஜாபதி – விராட்டு

இரணிய கருப்பன் – பிரமதேவர்

லேசம் – சிறுமை

இப்பாட்டிற்குப் பாட பேதங்கள் உள. (131)

மேலே கூறிய ஆனந்தமே அதீதமாம் எனல்

240. **எவனா கிலும்இந்தத் துரியா தீதத்தில்**
**ஏழாம் பூமியில் இருந்தானேல்**
**அவனார் அதன்சுகன் சிவன்மால் அயன்முதல்**
**அறிவோர் அனுபவ சுகபோதம்**
**விவகா ரதிர்சியம் இதுவே அனுபவம்**
**எனமுன் சொல்லிய விவகாரி**
**உவமா னமும்அறி மகனே அவனடி**
**உதிரும் பொடிகள்என் முடிமேலே.**

மைந்தா! யாவன் ஆனாலும் இந்தத் துரியாதீதம் என்னும் ஏழாம் பூமியில் இருந்தானாகில், அம் மகாபுருடன் அரன், அரி, அயன் என்னும் மும்மூர்த்திகளுக்கும் நாரதர் சுகர் முதலிய அறிஞருக்கும் உள்ள சுவானுபவாகிய ஆனந்த சின்மயன் ஆவன். விவகாரங்களில் திரிசிய திஷ்டியில்லாத இதுவே சுவானுபவம் என்று முன்னே சொல்லி யிருக்கின்ற விவகாரியின் திஷ்டாந்தமும் தெரிவாயாக. அவ் அனுபவியினுடைய பாதத்தில் உதிரா நின்ற தூள்களானவை என் சிரசின்மேல் இருக்கின்றன.

தூரியாதீதத்தை அடைந்தவனது மகிமையைக் கூறினதாம், (132)

சச்சிதானந்த இலக்கணம் கூறி இன்னஞ் சந்தேகம் உளதேல் கேட்பாய் எனல்.

அறுசீர் விருத்தம்

241. **இந்தவா றைந்துசுகம் சொல்லினோம் வித்தைசுகம்**
**இனிமேற் சொல்வோம்**
**முந்தைமா யையும்சச்சி தானந்தப் பொருளுமே**
**மொழியும் போதில்**
**அந்தமாம் அத்துவித சுகம்ஆன்ம சுகம்இரண்டும்**
**அங்கே சொன்னோம்**
**தொந்தமாற் றியமகனே இன்னமுனக்(கு)**
**சொல்லு வாயே. (ஐயமுண்டேல்**

சுகதுக்காதி பந்தங்களைக் கெடுத்த மைந்தா! இவ்விதம் விடயானந்தம், பிரமானந்தம், வாசனானந்தம், நிசானந்தம், முக்கியானந்தம் என்னும் ஐந்துவித ஆனந்தத்தை உரைத்தோம். வித்தியானந்தத்தை இனிமேல் உரைப்போம்; முன் மாயா ரூபத்தையும் சச்சிதாநந்தார்த்தத்தையும் சொல்லுமிடத்தில் வேத முடிவான அத்துவிதானந்தமும் ஆத்மானந்தமும் ஆகிய இரண்டு ஆனந்தத்தையும் அவ்விடத்தில் உரைத்தோம். இன்னமும் உனக்குச் சந்தேகம் உண்டானால் கேட்பாய்.

**விளக்கம்:** வித்தியானந்தம் 164–177 செய்யுட்களிலும் அத்துவிதானந்தம் 95–120 செய்யுட்களிலும் கூறப்பட்டுள்ளன.

(133)

ஆத்மா சச்சிதானந்த சொரூபம் எனத் தெரிந்தும் அதன் உண்மையான சுவானுபூதி வெளிப்படும் நிமித்தம் சுருதி, புத்தி அனுபவங்களுக்கு ஒத்திருக்கும் அவற்றின் ஒருமையைத் தெரிய வினாதல்.

242. குகன்தனையும் எனையுமுல கினையும்ஈன் றளித்தருளும்
குருவே கேளீர்
புகன்றசச்சி தானந்தப் பதங்கள்தனித் தனியாயே
பொருள்வே றானால்
உகண்டமனம் உறைப்பதெங்கன் பரியாய
உறவுங் காணேண் (பதங்களைப்போல்
அகண்டமாய் ஒருசுவையாய்த் தேனீக்கூட்டியமதுவா
அறிவிப் பீரே.

குமரனையும் என்னையும் சகங்களையும் சிருட்டித்து ரட்சித்தருளுகின்ற இறைவனே! கேட்பீராக, முன் சொல்லிய சத்து, சித்து, ஆனந்தம் என்னும் முப்பதங்களும் வெவ்வேறாகி அருத்தமும் வேறுபடுமானால், விடயங்களிற் பாயாநின்ற மனமானது ஸ்திரமாய் நிற்பதெப்படி? பரியாய நாமங்களைப் போலச் சம்பந்தமும் தெரிகிலன். ஆதலால் ஏகமாகவும் ஒரே ருசியாகவும் தேனீக்களால் கூட்டப்பெற்ற தேனாகத் தெரிவிப்பீர்.

**விளக்கம்:**

1. குருவைச் சிவமாகக் கருதுதல் மரபு.

2. நிலம், தீ, நீர், வளி, விசும்பு ஆகிய ஐந்தும் கலந்தது உலகம்.

3. எஞ்ஞான்றும் நிவர்த்தியின்றி இருத்தலின் சத்தெனவும் ஜடத்திற்கு வேறாய்ப் பிரகாச வடிவமாய் இருத்தலின் சித்தெனவும், துக்கத்திற்கு வேறாய் முக்கியப் பிரீதிக்கு விஷயமாய் இருத்தலின் ஆனந்தமெனவும், ஆன்மா கூறப்படுகின்றதென்க.

4. ஒரு சொல்லின் பொருளைக் குறிக்கும் வேறொரு சொல் பரியாய பதம் எனப்படும். (134)

சச்சிதானந்த ஒருமையைச் சுருதிப் பிரமாணத்தால் கூறுவான் தொடங்கி அவற்றின் காரணமும் ஒருமையும் கூறுகின்றார்.

243. குளிரிளகல் வெண்மையென்ற பதங்களினால் நீர் மூன்று
கூறா யின்றோ
ஒளிதபனம் செம்மையென்ற பதங்களால் அக்கினியும்
ஒருமூன் றாமே
வெளிமுதலாம் சகமசத்து மூடமிடர் எனப்பிரித்து
விலக்கி வேதம்
எளிதறிய முரண்மொழிந்த சத்தாதி யெனும்பிரமம்
ஏகந் தானே.

குளிர்ச்சியும் நெகிழ்ச்சியும் வெள்ளையுமெனச் சொல்லிய சொற்களினால் சலமானது மூன்று பொருளானதோ? பிரகாசமும் சூடும், சிவப்புமெனச் சொல்லிய சொற்களினால் நெருப்பும் மூன்று பொருளாகுமோ? அதுபோல ஆகாய முதலான உலகத்தை அனுர்தமெனவும் சடமெனவும் துக்கமெனவும் வேறுபடுத்தி நீக்கிச் சுருதியானது பக்குவிகள் எளிதில் உணர அவற்றிற்கு எதிராகச் சொன்ன சத்து, சித்து, ஆனந்தம் என்னும் பிரமமானது ஒன்றேயாகும்.

சச்சிதானந்தங்கள் பரஸ்பரம் பின்னமல்ல, ஏகந்தான். குணமாயின் பின்னமாம். பிரம சொரூபமாகலின் பின்னமாகா. பிரம்மம் ஒன்றே நிவர்த்தியின்மையின் சத்தென்றும் சடத்தில் விலட்சணமான பிரகாச ரூபமாகலின் சித்தென்றும் துக்கத்தின் வேறாய் முக்கிய பிரீதிக்கு விஷயமாகலின் ஆனந்தமென்றும் கூறப்படுகின்றது. சலமானது எப்படி நெகிழ்ச்சி குளிர்ச்சி வெண்மை ரூபமோ, அக்கினியானது லோகிதோஷ்ணப் பிரகாச ரூபமோ அப்படியே பிரமமும் சச்சிதானந்த ரூபம் என்றறிக.

சகத்தை அனுர்த சட துக்கமெனக் கண்டு அதனை நீக்குதற்காகக் குறித்த நாமம் சச்சிதானந்தமெனவும் அதன் விருத்தம் ஒன்றான பிரமமெனவும் கூறினதாம்.

விலட்சணம்–சிறப்பியல்பு

அனுர்தம்–அசத்து

எங்ஙனம் ஒருவன் பிதாவினது நோக்கத்தால் புத்திரனென்னும் பாட்டனது நோக்கத்தால் பேரன் என்றும், மாமனது நோக்கத்தால் மருமகன் என்றும் சொல்லப்படுகின்றானோ, அங்ஙனமே, ஆத்மாவும் மாயா பிரபஞ்சத்தின் அசத்தினது நோக்கத்தால் சத்தென்றும் சடத்தினது நோக்கத்தினால் சித்தென்றும், துக்கத்தினது நோக்கத்தால் ஆனந்தமென்றும் சொல்லப் படுகின்றது என்பது இங்கு உணர்தற்பாலதாம்.

தபனம் – வெப்பம் (135)

சச்சிதானந்தம் ஒருமையென்பது உறுதிப்படு நிமித்தம் ஒருமையாகச் சொல்லிய பரியாய நாமங்களில் விதி நாமங்கூறல்.

**244. நித்தியம்பூ ரணம்ஏகம் பரமார்த்தம் பரப்பிரமம்**
**நிதானம் சாந்தம்**
**சத்தியம்கே வலம்துரியம் சமந்திருக்கும் கூடஸ்தன்**
**சாட்சி போதம்**
**சுத்தம்இலக் கியம்சனா தனம்சீவன் தத்துவம்விண்**
**சோதி ஆன்மா**
**முத்தம்விபு சூக்குமம்என்(று) இவ்வண்ணம்**
**மொழியும் வேதம். (விதிகுணங்கள்**

நித்தியம் எனவும், பூரணம் எனவும், ஏகம் எனவும், பரமார்த்தம் எனவும், பரப்பிரமம் எனவும், நிதானம் எனவும், சாந்தம் எனவும் சத்தியம் எனவும், கேவலம் எனவும் துரியம் எனவும், சமம் எனவும், திருக்கு எனவும், கூடஸ்தன் எனவும் சாட்சி எனவும் போதம் எனவும், சுத்தம் எனவும், லட்சியம் எனவும், சனாதனம் எனவும், சீவன் எனவும், தத்துவம் எனவும், விண் எனவும், சோதி எனவும், ஆத்மா எனவும், முத்தம் எனவும், விபு எனவும், சூக்குமம் எனவும் இந்தப் பிரகாரம் விதியால் குணப்பரியாய நாமங்களைச் சுருதிகள் சொல்லும்.

நிதானம்–ஆதிகாரணம், சநாதனம்–அநாதி. (136)

விலக்கு நாமம் கூறல்.

245. அசலம்நிரஞ் சனம்அமிர்தம் அப்பிரமே யம்விமலம்
வசனா தீதம்
அசட்ம்அநா மயம்அசங்கம் அதுலம்நிரந் தரம்அணு
நிருபா கண்டம்
அசம்அனந்தம் அவினாசி நிர்க்குணநிஷ் களம்நிர்அவ
யவம்அ நாதி
அசரீரம் அவிகாரம் அத்துவிதம் எனவிலக்கும்
அநேகம் உண்டே.

சலனம் இன்மையும், அஞ்சனம் இன்மையும், மிர்தம் இன்மையும் பிரமேயம் இன்மையும், மலம் இன்மையும், வாக்குக்கு எட்டாமையும் சடம் இன்மையும், ஆமயம் இன்மையும், சங்கம் இன்மையும், துலம் இன்மையும், அந்தரம் இன்மையும், அணு இன்மையும், ரூபம் இன்மையும், கண்டம் இன்மையும், சன்மம் இன்மையும், அந்தம் இன்மையும், நாசம் இன்மையும், குணம் இன்மையும், சகளம் இன்மையும், அவயவம் இன்மையும், ஆதி இன்மையும், சரீரம் இன்மையும், விகாரம் இன்மையும், துவிதம் இன்மையும் என்று சொல்லப்பட்ட விலக்கு நாமங்களும் அநேகம் உள்ளனவாம்.

அப்பிரமேயம்–அறியப்படாதது; அநாமயம்–நோய் இல்லாதது. அதுலம்–கனமில்லாதது; நிரந்தரம்–இடையில்லாதது, நிரவயவம்–அவயவம் இல்லாதது; அசம்–பிறப்பில்லாதது.

விதிமுக மறைமுக விசேஷணங்களின் விரிவை இலட்சணா விருத்தியிற் காண்க. (137)

இவ்விதி விலக்கு நாமங்களின் ஒருமை கூறல்.

246. இன்னவகை விதிவிலக்குக் குணங்கள்நன்றாய்ச்
சேர்ந்தொருமித்(து) எல்லாங் கூடிச்
சொன்னபொருள் ஒன்றன்றி இரண்டில்லை
ஒருபொருளை சொல்லுஞ் சொற்கள்

பின்னபத மாம்அதனால் சத்தாதி
குணப்பொருளாம் பிரமம் ஏகம்
அன்னபொருள் ஒருமையறிந்(து) அகண்டபரி
பூரணமாய் ஆவாய் நீயே.

இத்தன்மையவாக விதியும் விலக்கும் ஆகிய குணங்கள் நன்றாகச் சேர்ந்து ஒன்றுபட்டு அனைத்தும் கூடிச் சொல்லிய அருத்தம் ஏகமே அன்றித் துவிதமில்லை. ஏக வஸ்துவை உரைக்கும் வசனங்கள் வெவ்வேறு சொற்களாம். ஆதலினால் சத்து சித்து ஆனந்தம் என்னும் குணப்பதங்கட்குப் பிரமமொன்றே பொருளாம். அத்தன்மையான அருத்தத்தின் ஒருமையைத் தெரிந்து அகண்டமான பூரண சொருபமாக நீ ஆகக் கடவாய்.

இவ் விதிவிலக்கு நாமங்கள் பலவாயினும், கைம்மலை, கறையடி, புழைக்கை என்னும் சொற்கள் வெவ்வேறு பதமாயினும் அவைகளின் பொருளான யானை பின்னமாகாமல் ஒன்றேயாவது போலும், ஒரு புருடனைப் பிதாமகன் தம்பி என்னும் அநேக சொற்களாற் சொல்லினும் அநேகன் ஆகாமல் ஒருவனேயாவது போலும், அவைகளால் உணர்த்தப்படும் பொருள் ஒன்றாதல் போலச் சத்து சித்து ஆனந்தம் என்னும் பதங்கள் மூன்றாயினும் அவையுணர்த்தும் பொருள் ஒன்றான அத்துவித வஸ்துவாய் இருப்பதால் சந்தேகம் ஒழிந்து அதுவாயிருத்தி என்பதாம். (138)

குணாதீதமான வஸ்துவிற்குக் குணம் கூறலாமோ? என்பதற்கு உத்தரங் கூறல்.

247. நிற்குணவஸ் துவின்குணங்கள் உரைப்பதுதாய்
மலடிஎனல் நிகர்என் னாதே
சற்குணனே வஸ்துநிலை உரையாமல்
அறியவல்ல சதுரர் உண்டோ

நற்குணவே தங்கள் இந்தச் சீவன்முத்தி
பெறப்பிரம ஞானந் தோன்றச்
சொற்குணங்கள் பிரமத்தின் குணங்கள் அல்ல
பிரமமாம் சொரூபந் தானே.

சற்குணமே! குணரகிதமான பிரம வஸ்துவிற்கு இத்தன்மையான நாமங்களைச் சொல்வது தாய் மலடி என்பதற்குச் சமான மென்று சொல்லாதே; வஸ்து நிச்சயத்தை ஆசிரியர் சொல்லாமல் தானே தெரிந்து கொள்ளும் வல்லமையுள்ள சதுரரான சீருடம் உளரோ? ஆதலால், நல்ல சுபாவத்தையுடைய சுருதிகளானவை இச் சீவன் முத்தியை அடையும் பொருட்டுப் பிரமஞானம் உதிக்கும்படி உரைத்த சத்தாதி குணங்கள் பிரமத்தின் குணங்கள் அல்லவாம். அதன் அருத்தம் பிரம்ம சொரூபமாம்.

அறிதல் இறந்த விடத்து அனுபவமாய் உள்ள நிர்க்குண வஸ்து, அறிவிற்கு அவதானமாகும் பொருட்டு, உரைக்கும் பரியாய நாமங்களின் அருத்தபடி சிந்திக்கின் இக் குண ரூபம் இறந்து, அக் குணாதீத சொரூபம் வெளிப்படும் அன்றி, மற்றொன்றால் வெளிப்படாது. ஆதலால், அங்ஙனம் கூறும் சுருதிப் பிரமாணத்தை உணர்த்தியதாம்.

**விளக்கம்:**

1. முன்னுக்குப் பின் முரணாகக் கூறுதல் வியாகாதமாம்.

2. மாயாப் பிரபஞ்சத்தைச் சொப்பனப் பிரபஞ்சம் போல மித்தையென்றுணர்ந்து அதனை வெறுத்துப் பிரமத்தியானஞ் செய்கின்றவர் அப்பியாசிகளாவர்.

3. மாயாப் பிரபஞ்சத்தை மித்தையென்றுணர்ந்து மோட்சமடைய முயற்சி செய்கின்றவர் முமுட்சுக்களாவர்.

(139)

குண+அதீதம்=குணாதீதம்.

சச்சிதானந்தப் பொருள் ஒன்று என்பதைச் சுருதியில் காட்டினதுபோல யுத்தியிலும் காட்டல்வேண்டும் என வினாதல்.

**248. மோகஇருள் கெடக்கோடி அரணனென**
**வருகுருவே மொழியக் கேளீர்**
**ஏகபரி பூரணமாம் என் சொரூபம்**
**என்னுளத்தில் இருக்கும் வண்ணம்**
**ஆகமங்கள் சொன்னபடி என்னைஅகண்**
**டாத்தமா அறிந்தேன் ஐயா**
**ஊகமும்ஒத் திடவுரைத்தால் பசுமரத்தில்**
**ஆணிபோல் உறைக்கும் நெஞ்சே.**

மோகாந்தகாரம் நீங்கக் கோடி சூரியர் உதயமானது போல எழுந்தருளிய ஆசாரியரே! அடியேன் சொல்வதைக் கேட்டருள்க; ஒன்றான பூரண சொரூபமாகிய எனது பிரம சொரூபம் என் இதயத்தில் அழுத்துமாறு சுருதிகள் சொல்லியபடி எனது சொரூபத்தை அகண்ட பொருளாகத் தரிசித்தேன். எனது ஆசிரியரே! யுத்தியும் பொருந்தும்படி அருளிச் செய்தால், மனம் பச்சை மரத்தில் அறையும் ஆணியைப் போல் ஸ்திரப்படும். (140)

மேல் வினாவிற்கு உத்தரங் கூறல்

**249. சச்தேசித் தாகும்அய லெனில்அசத்தாம்**
**அசத்தானால் சாட்சி எங்கே**
**சித்தேசத் தாகும்அய லெனில்சடமாம்**
**சடங்குகளுக்குத் திதியும் இல்லை**
**ஒத்தேதோன் றியசத்தும் சித்தும்நல்ல**
**சுகமாகும் ஊகத் துக்கோர்**
**வித்தேஅன் னியமாகில் சடம்சத்தாம்**
**சுகானுபவம் விளைந்தி டாதே.**

சத்தாக விளங்குதலே சித்தாகும். சத்துக்குச் சித்து வேறென்றால் அப்போது சத்து இல்லாததாம்; இல்லாத தாயின் நடுவாய் இருந்தறியும் சாட்சி எங்ஙனமாம். சித்தாய் இருத்தலே சத்தாகும். சித்துக்குச் சத்து வேறென்றால் அறியாமையாம். அத்திரிசயங்களுக்கு விளங்கும் தன்மையும் இல்லையாம்; ஆதலால் பொருந்தத் தோன்றிய திரிகாலங்களிலும் நசியாது இருக்கின்ற சத்தும் முக்காலங்களினும் தெளிவாக விளங்கிய சித்துமே நிரதிசய ஆனந்தமாகும். உத்திக்கோர் விதையாகும்; வேறானால் சித்தும் சத்தும் சடமும் அசத்துமாம். அங்ஙனமாயின் ஆனந்தம் உதியாமல் துக்கமுண்டாகும். (141)

இதுவுமது

**250. வீயாத சத்துமுன்னம் விளங்குவது**
**தன்னாலோ வேறொன் றாலோ**
**வாயால்வே றெனில்அதுவும் அசத்தோசத்**
**தோஅசத்தேல் மலடிமைந்தன்**
**பேயாகாரி யஞ்செயுமோ அசத்தெனஇப்**
**படியதையும் பிரித்துச் சொன்னால்**
**ஓயாத அவத்தையாம் குதர்க்கவிகற்**
**பங்களைவிட்(டு) ஒழிந்தி டாயே.**

பேயனே! திரிகாலங்களிலும் நசியாத சத்தானது முன் பிரகாசிப்பது தன்னாலேயா? மற்றொன்றாலேயா? வாக்கினால் வேறென்றால் அச்சத்தமும் இல்லாததா? இருப்பதா? இல்லாததென்றால் வந்தியா புத்திரன் தொழிலைச் செய்வானா? அக்கிரியைகளையும் இங்ஙனம் அசத்து என்று பகுத்துச் சொல்லின் நீங்காத அவத்தையாம். குதர்க்கமாகிய வேறுபாடுகளை விட்டு நீங்குவாயாக.

இருந்தது விளங்குதலின் சத்தே சித்தெனவும், விளங்குவதே இருத்தலின் சித்தே சத்தெனவும், இவ் ஒருமையில் சுகம் விளைதலின்

இஃதே ஆனந்தமெனவும், இவ் அனுபவத்தால் உத்திரப் பிரமாணம் உணர்த்தியதாம்.

பேயனே–சீடனது புத்தி குதர்க்கத்தால் மாறுபாடு அடையா வண்ணம் சிறிது முனிவுற்றதுபோல் கூறினார் என்க.

புதிய அர்த்தத்தைக் கற்பித்தல் தர்க்கமாம். இது சுதர்க்கம்–குதர்க்கம் என இருவகைத்தாம். அவற்றுள் சுருதிக்கு விரோதம் இல்லாத தர்க்கம் சுதர்க்கமாம். சுருதிக்கு விரோதமான தர்க்கம் குதர்க்கமாம். (142)

சச்சிதானந்தப் பதங்களின் பொருள் ஒன்றென்பதற்கு அனுபவம் கூறல்.

251. சுருதியுத்தி ஒத்ததுபோல் அனுபவமும்
கேள்சுழுத்திச் சுகஆ னந்தம்
மிருதிவடி வாதலின் அவ் ஆனந்த
மேயறிவாம் வேறங்கில்லை
கருதுபிர ளயம்சுழுத்தி இரண்டிலும்நீ
இருந்திருளைக் காண்கின் றாயே
இருதயத்திப் படிநோக்கி யேகபரி
பூரணமாய் இருந்தி டாயே.

சுருதியும் உத்தியும் பொருந்தினது போல அனுபவத்தையும் கேளாய்; சுழுத்தி அவத்தையில் உள்ள ஆனந்தமானது பூரண சொரூபமாதலின் அந்த ஆனந்தமே ஞானமாம்; அவ்விடத்து மற்றொன்றில்லை, நினைக்கின்ற கற்பாந்தமும் சுழுத்தி அவத்தையும் ஆகிய இரண்டு காலத்தும் நீ சத்தாக நின்று அந்தகாரத்தைப் பார்க்கின்றாய் அல்லவா? உனது இருதயத்தில் இவ்விதமாகப் பார்த்து ஒன்றான பூர்ண சொரூபமாகவே இருப்பாயாக.

சச்சிதானந்தத்தின் பொருள் ஒருமை என்பதற்கு அனுபவம் கூறியதாம். சுருதியுத்தி அனுபவங்களோடும் உணர்த்திய சச்சிதானந்

தத்தின் பொருள் ஒருமையின் சொரூபத்தைத் தேசிகர் உபதேச முகத்தால் தெரிந்து கொள்க.

**விளக்கம்:** இது கூடும், இது கூடாதெனத் தோன்றும் அறிவு யுக்தி எனப்படும்; அநித்தியம்–அழிவதாம்; அதிசயம்–பேதமாம். (143)

சுருதியுத்தி அனுபவப்படி சீடன் சகச நிட்டையில் பெற்ற அனுபவங் கூறல்.

**252. பலகலையும் உணர்ந்தகுரு மொழிந்தபடி**
**இவனும்அனு பவம்வி டாமல்**
**பலமலரின் மதுப்போலச் சச்சிதா**
**நந்தமொன்றாம் பரமார்த் தத்தைப்**
**பலபொழுதும் கண்மூடிச் சமாதியிருந்**
**தான்விழித்துப் பார்த்தபோது**
**பலவடிவாம் சராசர சித்திரங்களெல்லாம்**
**தோன்றுமொரு படமா னானே.**

சகல சாஸ்திரங்களையும் அறிந்த தேசிகர் அனுக்கிரகித்த வண்ணம் இச் சீடனும் அனுபவத்தைவிட்டு நீங்காமல் பல மலர்களில் இருக்கும் தேன் ஒருமித்தது போலச் சத்துச் சித்தாந்தங்கள் ஏகமாகிய பிரமப் பொருளை எப்போதும் ஊனக் கண்ணை மூடி சொரூப சமாதியிலிருந்து ஞான விழியால் பார்க்கும் போது நானாவித உருவங்களான தாவர, சங்கமமாகிய சித்திரங்கள் அனைத்தும் தோன்றுகின்ற ஓர் சித்திரப் படமானான். (144)

துரியாதீதமே துரியமாக விளங்கும் அனுபவத்தில் நவநவமா ரமிக்கும் பொருட்டு அஃது உதயமாவதற்கு இடமான ஞான பூமியைக் குறித்து நான்கு வகையாக வினாதல்.

**253. இதயமொத்த சற்குருவே நமக்கிதுவே**
**விநோதமன்றி இனிவே றுண்டோ**

அதையுரைத்தும் அதைநினைத்தும் இருப்பதன்றோ
ஞானிகளுக்(கு) ஆன நீதி
முதலுரைத்த துரியாதீ தமும்ஏழாம்
பூமியும்முக் கியமாம் என்ற
பதமும்அதன் வகையுமெனக்கு எளிதாகத்
தெளியும்வண்ணம் பணித்தீ டீரே.

மனமொத்த என்னுடைய ஆசிரியரே! நமக்கு இவ் விசாரமே லீலையல்லாமல் இனி வேறும் ஒன்றுளதோ? அப்பிரமத்தை வாக்கினால் பேசியும் மனதினால் தியானித்தும் இருப்பதல்லவா ஞானவான்களுக்கான நியாயம்; முன் சொன்ன துரியாதீதத்தையும் ஏழாவது பூமியும் முக்கியமென்று சொல்லிய பதமும் அதன் பகுப்பையும் அடியேனுக்குச் சுலபமாகத் தெரியும்படி அருளிச் செய்வீராக. (145)

சுபானுபவத்தில் செல்லும் மனோலய மார்க்கமான ஞான பூமியைக்கூறுவான் தொடங்கி உற்பத்திக்கிரமமான அஞ்ஞான பூமியின் வகையாகிய நாமங்கள் ஏழையும் முற்கூறுகின்றார்.

254. வினவுமிடத்(து) அஞ்ஞான பூமிகள்ஏழ்
ஞானபூ மிகளேழ் என்பார்
இனியவற்றுள் அஞ்ஞான பூமிகளே
ழையுமுந்தி இயம்பக் கேளாய்
தனிவித்து சாக்கிரஞ்சாக் கிரமகா
சாக்கிரஞ்சாக் கிரத்தைச் சார்ந்த
கனவுகனாக் கனவுசாக் கிரம்சுழுத்தி
யென்றெழுபேர் கணித்தார் மேலோர்.

விசாரிக்குமிடத்தில் அஞ்ஞான பூமிகள் ஏழு, ஞான பூமிகள் ஏழு என்று சத்துக்கள் சொல்லுவார்கள். இனி அவைகளுக்குள் அஞ்ஞான பூமிகள் ஏழினையும் முன்பு சொல்லுவோம் கேட்பாயாக. தனிமையான வித்து நனவு எனவும், மகா நனவு எனவும், நனாக் கனவு,

கனவு எனவும், கனா நனவு எனவும், சுழுத்தி எனவும் ஏழு நாமங்கள் மகான்கள் கூறினார்கள்.

ஞானபூமிகளுக்கு விரோதமாயிருப்பன பீஜ சாக்கிர முதலி யனவாம்; அவை அஞ்ஞான பூமி எனப்படும். பூமி என்பது ஈண்டு அவஸ்தை (நிலை) யாம், பீஜம், வித்து, விதை, மூலம் என்பன ஒரு பொருட் கிளவியாம். (146)

அவற்றுள் நான்கு பூமிகளின் இலக்கணங் கூறல்,

**255. முந்தவகண் டத்தெழுமோர் அறிவுமாத்**
**திரம்அதுதான் முதல்வித் தாகும்**
**இந்த அறி விற்பண்டில்லா அகந்தை**
**முளைபோலாம் இதுந னாவாம்**
**வந்துவந்து பிறவிதொறும் அகமமதை**
**வளருமது மகாந னாவாம்**
**நந்துமகங் கொடுநனவின் மனோராச்சி**
**யஞ்செயலே நனாக் கனவே.**

முன்னரே உள்ள அகண்டமாகிய சத்தில் உதித்த ஓர் உணர்வாகிய அதுவே முன்னுண்டான வித்து நனவாம்; இவ்வித்தாகிய உணர்வில் முன்பில்லாத அகந்தையானது முளை போல உண்டாம் இது சாக்கிரமாகும். உண்டாகிச் சனனங்கள் தோறும் யான் எனது என்கிற விருட்சம் வளரும் அது மகா சாக்கிரமாம். நசிக்கின்ற அகத்தைக் கொண்டு சாக்கிரத்தில் மனோராச்சியம் செய்வது சாக்கிர சொப்பனவாம். (147)

ஏனைய மூன்று பூமிகள் இலக்கணங் கூறல்.

**256. உண்டுறங்கி மனோராச்சி யஞ்செயல்சொப்**
**பனமெனும்பே ருடைய தாகும்**
**பண்டுநனாக் கண்டுமறந் ததைமீண்டு**
**நினைப்பதுசொப் பனந னாவாம்**

மண்டுமிருள் மூடுவது சுழுத்தியாம்
அஞ்ஞான வகைகள் சொன்னோம்
விண்டுநிறை முத்திதரு ஞானபூ
மிகளேழும் விளம்பக் கேளாய்.

புசித்து நித்திரை செய்து மனோராச்சியம் செய்வது கனா என்னும் நாமம் உள்ளதாம்; முன் சாக்கிரத்திற் பார்த்து மறந்து விட்டதைத் திரும்ப ஞாபகப்படுத்துவது சொப்பன சாக்கிரமாம். மிகுந்த இருள் மூடிக் கொள்வது சுழுத்தியாம்; அஞ்ஞான பூமிகளின் விதத்தைச் சொன்னோம்; சடம் முதலியவைகள் வேறுபட்டுப் பரிபூரணமான (கைவல்லியத்தைக் கொடுக்கும்) ஞானபூமிகள் ஏழையும் சொல்ல கேட்பாயாக.

**தாத்பரியம்:** வித்து நனவு, நனவு, மகா நனவு ஆகிய இம் மூன்றும் அறிவு பரிணமித்து ஆகாரமாய் எதிரிடுதலால் சாக்கிரம் எனவும், சாக்கிர சொப்பனம், சொப்பனம், சொப்பன சாக்கிரம் ஆகிய இம் மூன்றும் எதிரிடுகின்ற ஆகாரங்களின் அறியாமையோடு விகாரங்கள் செய்தலின் சொப்பனம் எனவும், சுழுத்தி ஒன்றும் சிருட்டி முதல் இதுகாறும் தன் யதார்த்தம் தெரியாமல் விடயானந்த காரமாக உறங்குதலின் சுழுத்தியெனவும் கூறினார் என்பதாம். (148)

ஞான பூமிகளின் நாமங்கள் ஏழையுங் கூறுகின்றார்.

257. புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சைவிசா
ரணையிரண்டாம் பூமி யாகும்
நலதனுமா னசிமூன்றாம் பூமிசத்து
வாபத்தி நாலாம் பூமி
சொலும்அஞ்சச் சத்திப்பேரும் பதார்த்தபா
வனைப்பேரும் துரியப் பேரும்
மலினமறு மகனேஐந் தாறேழு
பூமிகளா வகுத்தார் மேலோர்.

களங்கமற்ற மைந்தனே! அறிஞர்கள் துதியாநின்ற முந்தின பூமியானது சுபம் விரும்பல் எனவும், இரண்டாம் பூமியானது விசாரம் செய்தல் என்வும், மூன்றாம் பூமியானது மனஞ் சிறுகல் எனவும், நான்காம் பூமியானது உண்மையிலே நிலை பெற்று நிற்றல் எனவும், சொல்லா நின்ற சங்கற்பம் அறல் என்னும் நாமம் உடையதையும் பதார்த்த எண்ணம் அறுத்திடல் என்னும் நாமம் உடையதையும் துரியம் என்னும் நாமம் உடையதையும் முறையே ஐந்தாம் பூமி, ஆறாம் பூமி, ஏழாம் பூமிகளாக மகான்கள் பிரித்தார்கள். (149)

அவற்றுள் நான்கு பூமிகளின் இலக்கணம் கூறல்.

258. துர்ச்சங்க நிவர்த்திவந்து சிவஞானம்
விரும்புவது சுபேச்சை யாகும்
நற்சங்க மொழிவினவி ஞானநூல்
பழகல்விசா ரணையா நம்பி
முற்சங்க ஈஷணைகள் விடல்தனுமா
னசிஇந்த மூன்றி னாலும்
சற்சங்க மனதிலுண்மை யறிவுதித்தல்
சத்துவா பத்தி தானே.

துர்ச்சங்க நீங்கிச் சிவஞானத்தை யாசிப்பது (சுபத்தை விரும்புதலாகிய) சுபேச்சையாகும்; சாது சங்கத்தைச் சேர்ந்து அவர் உரைக்கும் வாக்கியத்தைக் கேட்டு ஞான சாஸ்திரத்தை அப்பியாசிப்பது விசாரணையாகும். விசாரத்தின் வெளிப்படும் பொருளை நம்பி முன்னுள்ள இச்சைகளை நீக்குதல் (மனம் சிறுகுதலாகிய) தனுமானசியாகும். இம் முப்பூமிகளின் பழக்கத்தினாலும் சற்சங்கம் பழகிய மனதில் மெய்யுணர்வு பிறத்தல் (உண்மையிலே நிலைபெற்று நிற்றலாகிய) சத்துவாபத்தியாகும்.

சுபேச்சை – சுப+இச்சை= நன்மையை விரும்புதல்.

விசாரணை – மனனம் செய்தல்

தனுமா நசி – இச்சை நீங்குதல் (சித்தம் சிறுகல்)

சத்துவாபத்தி – சொரூப சாட்சாத்காரம் உண்டாதல்.

சத்துவ + ஆபத்தி = சொரூபத்தை அடைதல். (150)

ஏனைய மூன்று பூமிகளின் இலக்கணங் கூறல்.

259. தத்துவத்தின் மனமுறைத்து மித்தையெலாம்
மறத்தல் அசம் சத்தி யாகும்
அத்துவிதா நந்தம்வரும் திரிபுடிபோம்
பதார்த்தாபா வனைய தாகும்
வத்துநிலை யிருந்தபடி இருந்தமவு
னசுபாவந் துரிய மாகும்
இத்துரிய பூமியைமுன் துரியாதீ
தப்பதமென்(று) அதுவும்கேளாய்.

உண்மையில் மனம் ஸ்திரப்பட்டுப் பொய்ம்மைகள் அனைத்தையும் மறந்து விடுவது (சங்கற்பம் அறலாகிய) அசம் சத்தியாகும். அத்துவிதானந்தம் உண்டாதலும் திரிபுடி நீங்குதலும் பதார்த்த எண்ணம் அறுத்திடலாகிய பதார்த்த பாவனையாகும்; பிரமவஸ்துவின் நிச்சயம் இருந்த வண்ணம் இருக்கின்ற மோனத் தன்மையே துரியமாம்; இந்தத் துரிய பூமியை முன்பு துரியாதீதப்பதம் என்று சொன்னதையும் கேட்பாயாக.

சம்சத்தி – (நாமரூபங்களின்) சம்பந்தம். அஃதின்மை அசம் சத்தியாம். அசங்கம் அசம் சத்தி என்பன ஒரு பொருட்கிளவியாம்.

பதார்த்தா பாவனை – (பதார்த்த+அபாவனை) பதார்த்த நினைவு ஒழிதல் (பற்றறுதல்)

துரியம் – சொரூபத்தில் நிலைத்த மனத்தின் நிலை.

விளக்கம்:

1. சுயேச்சை – சாதன சதுட்டயம் உதித்து விஷயதோஷ திருஷ்டி உண்டாய்த் தன்னைத் தரிசிக்க விரும்புவது.

2. **விசாரணை** – விருப்பத்தால் அவனாகிய சித்துருவும் தானல்லாத சட உருவமும் இஃதென விசாரித்தல்.

3. **தனுமானசி** – அவ்விசாரத்திலுள்ள சித்தில் வாசனை உண்டாய்ச் சடவாசனை விட்டு மனம் அடங்குதல்.

4. **சத்துவாபத்தி** – அச்சித்து வாசனை மிகுந்து அது அனுபவமாக வெளிப்படுதல்.

5. **அசஞ்சத்தி** – அச் சித்து உதயத்தினால் சடபாவம் நீங்குதல்.

6. **பதார்த்தா பாவனை** – அச் சித்தில் ஆனந்த உதயமாய் இரண்டற யாவும் தானே தானாயிருத்தல்

7. **துரியம்** – இவ் அனுபவம் எப்போதும் உள்ளதாக விளங்குதல். (151)

இந்தத் துரிய பூமியே துரியாதீதமாகும் இயல்பு தோன்றச் சத்த பூமியையும் பஞ்சாவத்தையாகப் பகுத்து அதன் வகையும் இலக்கணமும் கூறுகின்றார்.

**260. முற்புவிமூன் றினும்உலகம் தோன்றுதலாற்**
**சாக்கிரமாம் மூன்றற்(கு) அப்பால்**
**சொப்பனமாம் அதுவும்மெள்ள நழுவுமஞ்சாம்**
**பூமியே சுழுத்தி யாகும்**
**அற்புதமாம் சுவானுபவம் மிகுமாறாம்**
**புவிதுரியம் அதற்கப் பாலோர்**
**கற்பனையிலாதவிடம் அதீத மென்று**
**மவுனமாகக் காட்டும் வேதம்.**

முதற்கண் கூறிய பூமிகள் மூன்றிலும் சகம் தோற்றுகின்றபடியால் அம்மூன்று பூமியும் நனவாகும்; நான்காவது பூமி கனவு ஆகும்; அக் கனவு மெள்ள நீங்குகின்ற ஐந்தாம் பூமியே சுழுத்தியாம்;

அதிசயமாகிய சுவானுபம் மிகுந்த ஆறாம் பூமி துரியமாகும்; ஏழாம் பூமி ஒரு கற்பனையும் அற்ற இடம் துரியாதீதமென மௌனமாகச் சுருதியானது தரிசிப்பிக்கும்.

விளக்கம்:

1. **சாக்கிரம்:** சுபேச்சை, விசாரணை, தனுமானசி ஆகிய இம் மூன்றில் சகம் விஷய ரூபமாகத் தோற்றுதல்.

2. **சொப்பனம்:** சத்துவாபத்தியில் சகம் நினைவு உருவாகத் தோற்றுதல்.

3. **சுழுத்தி:** அசஞ்சத்தியில் சகம் தோன்றாமை.

4. **துரியம்:** பதார்த்தா பாவனையில் சகம் சின்மாத்திரையாகத் தோற்றுதல்.

5. **துரியாதீதம்:** துரியத்தில் காண்பானும் காணப்படு சகத்தும் சத்த மாத்திரமாக விளங்குதல். (152)

இவ்வேழாம் பூமியைத் துரியம் என்பதற்கு அனுபவம் கூறல்.

**261. துரியநிலம் தனைத்துரியா தீதமெனின்**
**மயக்கமென்று சுருதி மேலோர்**
**அரியதொரு விதேகமுத்தி அதீதம்என்பார்**
**அதுகணக்கில் ஆறாம் பூமி**
**மருவுசுழுத் தியிற்காட்சி சுழுத்தியென்பார்**
**என்பதுநீ மனத்திற் கொள்வாய்**
**பெருமைதரு ஞானபூ மியின்விகற்பம்**
**இன்னமுண்டு பேசக் கேளாய்.**

துரிய பூமியைத் துரியாதீதம் என்றால் மயக்கம் உண்டாம் என்று கருதி வேதாந்தம் உணர்ந்த மகான்கள் எட்டுதற்கரிய ஒப்பற்ற விதேக கைவல்லியத்தைத் துரியாதீதம் என்று சொல்லுவார்கள். அந்தக்

கணக்கிற்கு ஆறாவது பூமியான பதார்த்தா பாவனை பொருந்தா நின்ற சுழுத்தியைக் காணும் அறிவாகிய சுழுத்தியென்று சொல்லுவார்கள் என்று அதை நீ மனதில் வைப்பாய்; மாட்சிமையைக் கொடுக்கின்ற ஞானபூமிகளின் பேதங்கள் இன்னும் இருக்கின்றன; அதைச் சொல்லக் கேட்பாய். (153)

ஞான பூமிகளை அடைந்த சீவன் முத்தர்களின் அவசர நாமம் கூறல்.

262. முன்நிலங்க ளேறியமூ வரும்அப்பி
யாசிகளாம் முத்தர் அல்லர்
பின்நிலங்கள் வரன்வரியான் வரிட்டனெனும்
சீவன்முத்தர் பேத மாகும்
சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே
பிரமவித்தாம் தூய முத்தர்
இன்னமும்அப் பூமிகளின் பெருமைதனை
நீயறிய யான்சொல் வேனே.

முதற்கண் உள்ள மூன்று பூமிகளில் ஏறி வந்த மூன்று பேர்களும் சாதகர்களாம். சீவன் முத்தர்கள் அல்லர்; இறுதியில் உள்ள மூன்று பூமிகள் ஐந்தாம் பூமியில் ஏறியவன் பிரமவரன் எனவும், ஆறாம் பூமியில் ஏறியவன் பிரம வரிட்டன் எனவும், சீவன் முத்தர்களின் பேதங்களாம்; இப்போது சொல்லிய பூமிகளின் மத்தியாகிய நாலாம் பூமியில் ஏறிய ஞானவான்கள் பிரமவித்து என்னும் மேலான சீவன் முத்தர்களாம்; மேலும் அந்த ஞானபூமிகளின் பெருமையை நீயறிய உனக்குத் தெரியும் பொருட்டு யான் சொல்வேன்.

முன் மூன்று பூமியை அடைந்தவர் அப்பியாசிகள் எனவும், மற்ற நான்கு பூமியை அடைந்தவர் சீவன் முத்தர்கள் எனவும் கூறினதாம். (154)

ஞான பூமிகளில் முன் மூன்றின் அப்பியாசத்தால் வரும் பயனும் அதில் முதற் பூமியின் அருமையும் கூறல்.

263. நாலாம்பூ மியில்வருமுன் மூன்றுபூ
மியும் அடைந்து நடந்து மாண்டோர்
மேலான பதமடைந்து பிறந்துமெள்ள
மெள்ளவந்து வீடு சேர்வார்
மாலான பவத்தில்விழார் முதற்பூமி
கிடைப்பதுவே வருத்த மைந்தா
காலான முதற்பூமி கைவந்தான்
முத்தியுங்கை வந்த தாமே.

மகனே! நான்காம் பூமியில் வருவதற்கு முன்னம் மூன்று பூமியையும் சேர்ந்து அவற்றை அனுஷ்டித்து வரும் போது மரித்தவர்கள் உயர்ந்த பதவியைப் பெற்றுப் பூமியிற் சனித்துக் கொஞ்சம் கொஞ்சமாக ஏறி முத்தியை அடைவார்கள். இச் சாரூபமான சனனத்தில் விழார்; முதற் பூமியான சுபேட்சையுண்டாவதே பிரயாசமாம்; ஆதியான முதற் பூமி கைவசமானால் மோட்சமும் கைவசம் ஆனதாம். (155)

அப்பியாச பூமியை அடைந்தவன் எவ்விதத்திலும் அனுபவியாவன் என்பது கருதி அவன் அனுபவியே எனக் கூறுதல்.

264. இப்புவியில் இஞ்ஞான பூமியொன்றில்
இரண்டிலடைந்(து) இருந்தா ரானால்
அப்புருடர் மிலேச்சரா கிலும்முத்தர்
குருபாதத்(து) ஆணை மெய்யே
தப்புரையென் றவர்கெடுவார் நடுவான
மறைகளைநீ சங்கி யாதே
செப்புமொழி வழிதிடமா அகம்பிரம்மம்
என்றிருந்து தெளிந்தி டாயே.

இவ்வுலகத்தின்கண் இந்த ஞானபூமிகள் ஏழில் சுபேச்சை யிலாவது விசாரணையிலாவது சேர்ந்திருப்பாராயின் அந்தப்

புருடர்கள் மிலேச்சர்களானாலும் தேசிகர் திருவடியாணை சீவன் முத்தராவர் என்பது சத்தியமே; இதைப் பொய் வசனம் என்றவர்கள் பவத்தில் அழிவார்கள்; நடுவு நிலைமையான வேத வாக்கியங்களைக் குதர்க்கமாக நீ சங்கை பண்ணாதே, போதிக்கின்ற உபதேச மார்க்கத்தில் ஸ்திரமாகச் சென்று கூடஸ்தனே பிரமம் என்று சகச சமாதியிலிருந்து தெளிவாய்.

இவ் அப்பியாச பூமியை அவசியம் அடையும் பொருட்டு அவைகளின் பெருமையையும் அவைகளாற் பெறும் பயனையும் கூறினதாம்.

மிலேச்சன் – (புறநாட்டான்; யவனன்); இங்கு அறிவிலி.

தெளிதல் – சந்தேகத்தினின்றும் நீங்குதல். (156)

முத்தியை அடைதற்கு வர்ணாச்சிரமபேதம் வேண்டுவது இன்று என்பது தோன்ற இப் பூமிகளின் முடிவான துரியாதீதம் துறவறத்தார்க்கு அன்றி இல்லறத்தார்க்கு வாரா என்னும் ஐயத்தை நீக்கவேண்டும் என வினாதல்.

**265. பொல்லாத மிலேச்சருக்கும் விதேகமுத்தி**
**தருஞான பூமி யென்று**
**நெல்லாகி முளைக்கும்எனைத் தண்டுலமாக்**
**கியகுருவே நீர்சொன் னீரே**
**இல்லாளும் குடும்பம்விட்டுச் சந்நியா**
**சம்புகுந்தே காங்கி யானோர்**
**அல்லாமல் முத்திபெறா ரென்றுசிலர்**
**சொன்மயக்கம் அகற்று வீரே.**

கொடியரான மிலேச்சர்களுக்கும் விதேக கைவல்லியத்தைக் கொடுப்பது ஞானபூமியாம் என்று தேவரீர் அருளினீர்; நெல் வித்தைப் போலச் சனித்துக் கொண்டிருக்கும் அடியேனை அரிசியைப்போலச் சனியாமற் செய்த ஆசிரியரே! மனைவி முதலிய குடும்பத்தைத்

துறந்து துறவைப் பெற்றுத் தனித்தவர்களே அன்றி மற்ற இல்லறத்தோர் மோட்சம் அடை மாட்டார்கள் என்று சிலர் சொல்லுகின்ற பிரமையை நீக்குவீர்.

தண்டுலம் – அரிசி

**விளக்கம்:** நெல் முளைத்து அழிதற்கு உமி முதலியன காரணமாய் இருப்பதுபோல ஞானிகள் அல்லாதார் பிறந்து இறத்தற்கு அவித்தை காம கர்மங்கள் காரண மாயிருக்கின்றன.

**சந்நியாசம் பெறுபவன் விடவேண்டியவை**

1. பெண்
2. பொன் நிலம் என்றற்றொடக்கத்துத் தனம்
3. சப்த பரிச ரச கந்தம் என்னும் விஷயம்
4. சபை (ஜனக் கூட்டம்)
5. சன்மானம்

**அடியிற்கண்டவற்றை விடாமல் சஞ்சரித்தல் வேண்டும் என்பது நியமம்**

1. வஸ்திரம்
2. கயிற்றோடு கூடிய கமண்டலம்
3. ஏகாந்தம் (தனிமை)
4. (தேகம் நிலைத்தற்கேற்ற வளமான) பிச்சை
5. வேதாந்த விசாரம்.

குறிப்பு: சமாதி புரிவதற்குரிய ஏகாந்தஸ்தானம் மலை முழை, நதிதீரம், புண்ணிய க்ஷேத்திரம் முதலியன. (157)

நால்வகைத் துறவின் நாமமும் அவற்றின் காரணமும் கூறல்.

**266. சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்த**
**சங்கைநன்று தெரியக் கேளாய்**

கட்டழியும் துறவுநால் வகையாகும்
அவைகளுக்கங் காகும் பேர்கள்
பட்டதுயர் கெடுங்குடீ சகம்பகூ
தகம்அம்சம் பரம அம்சம்
விட்டகலும் துறவுக்கு விராகம்கா
ரணமன்றி வேட மன்றே.

சற்சனர் துதிக்கின்ற மைந்தா! நீ வினாவின வினாவானது நன்றாம். தெரியக் கூறுவோம் கேள்; பந்தம் அழிகின்ற சந்நியாசமானது நான்கு விதமாம்; அந் நான்குக்கும் அவ்விடத்தாகும் நாமங்கள்; உண்டான துன்பம் நசிக்கின்ற குடீசக சந்நியாசம் எனவும், பகூதக சந்நியாசம் எனவும், அம்ச சந்நியாசம் எனவும், பரமாம்ச சந்நியாசம் எனவும் பந்தத்தைவிட்டு நீங்கும் இச் சந்நியாசங்களுக்கு நிராசை காரணமே அல்லாமல் வேடம் காரணம் அன்றாம்.

குறிப்பு:

1. யாத்திரை செய்யச் சக்தியின்மையால் எங்கேனும் ஒரு குடிசை ஏற்படுத்திக் கொண்டிருத்தல் குடீசகம்.

2. சந்நியாச ஆசிரமத்தின் கர்மத்தைச் செய்து கொண்டு யாத்திரை செய்தல் பகூதகமாம்.

3. அக்கினியால் சாதிக்கப்படும் கர்மத்தினை விட்டுப் பிரணவ ஜப முதலியவற்றை அனுஷ்டித்தல் ஹம்சமாம்.

4. பரமஹம்சம் – விவிதிஷை, வித்வத் என்று இருவகையாம். விவிதிஷை – துறவு; வித்வத் – வித்வத் சந்நியாசம்.

**விளக்கம்:** ராகம் – ஆசை; விராகம் – ஆசையின்மை. (158)

துறவின் காரணமாக விராக மூன்றின் நாமமும் அவைகளின் இலக்கணமும் கூறல்.

267. மந்தமும்தீ விரமும்தீ விரதரமும்
எனமூன்று வகைவிராகம்
வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை
வெறுத்துவரும் விராக மந்தம்
இந்தவுடல் அளவுமனை தனம்வேண்டாம்
எனவிடல்தீ விரம்என் பார்கள்
அந்தணர்நூல் மித்தையென விடலதுதீ
விரதரமாம் அறிந்தி டாயே.

விராகமானது மந்த விராகமும் தீவிர விராகமும் தீவர தர விராகமும் என்று மூன்று விதமாம், அவற்றில் வெவ்விய துன்பம் வரும்போது சம்சாரத்தை வெறுக்கா நின்ற விராகமானது மந்த விராகமாம். இத் தேகாந்த பரியந்தம் மனைவியும் திரவியமும் முதலியவைகள் வேண்டா என்று துறத்தல் தீவிர விராகம் என்று சொல்லுவார்கள். வேதியர்க்குரிய கன்ம காண்டங்களைக் கற்பிதம் என்று துறத்தலானது தீவிரதர விராகம் ஆகும்; இவற்றைத் தெரிந்து கொள்வாயாக. (159)

மந்த விராகம் பயன் இன்று என்றும் தீவிர விராக சந்நியாசம் இரண்டின் தன்மை இஃது என்றும் கூறுதல்.

268. பாவிமந்த விராகத்தில் சந்நியா
சங்களொன்றும் பலித்தி டாதே
தீவிரத்தில் குடீசகமும் பகூதகமும்
என்றிரண்டு திறங்கள் உண்டாம்
தாவிநடந் திடத்திடமி லாதவர்க்குக்
குடீசகமும் சகங்கள் எங்கும்
மேவிநடந் திடத்திடமுள் ளவர்க்குபகூ
தகமுமென விதித்தார் மேலோர்.

தீதான மந்த விராகத்தால் துறவானவைகள் ஒன்றும் சித்தியாது தீவிர விராகத்தில் குடீசக சந்நியாசமும் பகூதக சந்நியாசமும் என

இரண்டு விதங்கள் உளவாம்; எட்டி நடக்கப் பலமில்லாதவர்களுக்குக் கூடீசக சந்நியாசமும் உலகில் எவ்விடத்தும் அடைந்து நடக்கப் பலமுள்ளவர்களுக்கு பகூதக சந்நியாசமும் உரியது என்று மேலோர் நியமித்தார்கள்.

மந்த விராகம், புராண வைராக்கியம், மயான வைராக்கியம் போல்வதாம். அது நிலைத்திருப்பது அன்மையின் அதனால் யாதொரு சந்நியாசமும் சித்திப்பது இல்லையாம் என்க. (160)

தீவிரதர விராக சந்நியாசங்கள் இரண்டின் பயன்கூறல்.

**269. இருவகைதீ விரதரத்தும் அம்சனென்றும்**
**பரமாம்சன் என்றும் சொல்வார்**
**வரும்அம்ச னுக்கு முத்தி சத்தியலோ**
**கத்தன்றி வாரா தென்பார்**
**பரமாம்ச னுக்குமுத்தி இவ்வுலகின்**
**ஞானத்தால் பலிக்கு மென்பார்**
**திரமருவும் பரமாம்சன் தானும்இரு**
**வகையாகும் செப்பக் கேளாய்.**

தீவிரதர சந்நியாசத்தும் அம்ச சந்நியாசி எனவும், பரமாம்ச சந்நியாசி எனவும் இரண்டு விதமாகச் சாதுக்கள் உரைப்பார்கள்; வராநின்ற அம்ச சந்நியாசிக்கு மோட்சமானது அயனுலகத்தில் கிடைப்பது அன்றி இம்மையில் கிடையாது என்று சொல்லுவார்கள். பரமாம்ச சந்நியாசிக்கு மோட்சமானது இவ்வுலகத்தின் கண் ஞானத்தினால் கிடைக்கும் என்று சொல்லுவார்கள்; ஸ்திரம் பொருந்திய பரமாம்ச சந்நியாசியும் இரண்டு விதமாம். இதைச் சொல்லுவோம் கேளாய்.

அம்ச பரமாம்ச சந்நியாசிகளின் பயன் கூறினதாம். (161)

பரமாம்ச சந்நியாசிகள் அப்பியாசியும் அனுபவியும் என இருவகையாவர் எனல்.

270. சிஞ்ஞாசு ஞானவான் என்றிரண்டு
பேர்கள் அவ ரிற்சிஞ் ஞாசு
மெஞ்ஞான பூமியின்முன் மூன்றுபூ
மியுள்நடக்கும் விவேகி யானோன்
சுஞ்ஞான வானென்போன் சீவன்முத்தி
யடைந்திருக்கும் தூய மேலோன்
அஞ்ஞானம் அகலுமந்தச் சிஞ்ஞாசும்
இருவகையாம் அதுவும் கேளாய்.

சிஞ்ஞாசு எனவும் சுஞ்ஞானவான் எனவும் இருவர்களாம். அவ் விருவர்களில், சிஞ்ஞாசு என்பவன் ஞான பூமியேழில் முந்தின மூன்று பூமிகளில் செல்லுகின்ற விவேகமுள்ளவன் ஆவான்; சுஞ்ஞானவான் என்பவன் சீவன் முத்தியைப் பெற்றிருக்கின்ற பரிசுத்தமான மகானாம், அறிவின்மை நீங்கும் அச் சிஞ்ஞாசுவும் இரண்டு விதமாம்; அதையும் கேளாய்.

பரமாம்சத்தின் கூறான சிஞ்ஞாசு சுஞ்ஞாசு என்னும் இரண்டு சந்நியாசிகளின் இலக்கணம் கூறினதாம். (162)

சிஞ்ஞாசு என்பவன் இல்லறத்திலேனும் துறவறத்திலேனும் இருந்து முத்தியை அடைவன் எனல்.

271. பந்தமனை துறந்துசிலர் அதிதிகளாய்
இருந்தடைவர் பரம ஞானம்
அந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரராய்
இருந்துசிலர் அடைவர் ஞானம்
இந்தவகை சாத்திரத்தும் உலகத்து
நடப்பதுங்கண் டிருந்து மைந்தா
சிந்தனையின் மயக்கமென்ன சுருதியுத்தி
அனுபவத்தால் தெளிந்திடாயே

மகளே! சிலர் பந்தமான இல்வாழ்க்கையை விட்டுத் துறவிகளாக இருந்து பிரம ஞானத்தைப் பெறுவார்கள்; சிலர் பிராமணராகவும் க்ஷத்திரியராகவும் வைசியராகவும் சூத்திரராகவும் இருந்து பிரம ஞானத்தை அடைவார்கள். இவ்வகையை ஆகமப் பிரமாணத்திலும் உலகத்தில் நடப்பதாகிய பிரத்தியட்சப் பிரமாணத்திலும் பார்த்திருந்தும் மனதில் சந்தேகம் ஏன்? சுருதி யுத்தி அனுபவம் என்னும் மூன்றினாலும் தெளிவாய்.

முத்தியை அடைதற்கு விராகத்தால் வரும் சாந்தியே காரணம் அன்றி இல்லறம் துறவறம் என்னும் இரண்டும் அல்ல எனக் கூறியதாம். (163)

மேற்கூறுவோம் என்றவாறே முற்கூறிய சர்வார்த்தங்களும் அடங்கிய வேதங்களின் முடிவான வித்தியானந்தமாகக் கூறுவான் தொடங்கி இச் செய்யுளில் பிரமமே கூடஸ்தன் எனக் கூறுகின்றார்.

அறுசீர் விருத்தம்

**272. பிறந்ததுண் டானால் அன்றோ**
**பிறகுசா வதுதான் உண்டாம்**
**பிறந்ததே யில்லை யென்னும்**
**பிரமமா வதுவும் நானே**
**பிறந்தது நானன் றாகில்**
**பிரமமென் றந்த நானே**
**பிறந்ததும் இறந்த(து) அற்ற**
**பிரமமாம் நானே நானே.**

சனித்தது உளதாயின் அன்றோ பின் மரித்தலும் உளதாம் சனித்ததே இன்று என்னும் பிரமம் என்பதும் நானேயாம். சனித்தது நானல்லன் ஆயின் பிரம்மம் என்று சொல்லப்பட்ட அந்த நானே உற்பத்தியும் லயமும் இல்லாத பிரமம் ஆகிய கூடஸ்தனே நான்.

சாமவேத மகா வாக்கியப்படி அது நீயானாய் என்பார் 'பிரமமாம் நானே' என்றார். பிரமம் என்பது அது என்னும் ஆனந்தமும் நான் என்பது நீ என்னும் வித்தையும் ஆம் என்பது ஆனாய் என்னும் ஐக்கியமும் ஆமெனக் கொள்க. (164)

கூடஸ்தனே பிரமம் எனக் கூறுகின்றார்.

**273. நானென்ற பிரம மான**
**நானேநான் அறியேன் என்றால்**
**நானென்ப தேது பின்னை**
**நம்முட புந்தி யென்னில்**
**தானது மயக்கம் தன்னில்**
**சாகுமோ சாவா தாகில்**
**நானென நிறைந்தி ருந்த**
**ஞானமாம் நானே நானே.**

யானென்று சொல்லும் பிரமமாகிய யானே யான் காண்கிலேன் என்னின் யான் என்பது யாது? பின்பு நமது புத்தியென்று சொல்லில் அப்புத்தியும் சுழுத்தி மயக்கத்தில் இறக்குமே, அங்ஙனம் இறவாதிருக்குமாயின் யானே நான் என்று பூரணமாக விளங்கிய மெய்ஞ்ஞானமாம்.

இருக்குவேத மகா வாக்கியப்படி ஞானமே பிரமம் என்பார் 'நானென்ற பிரமம்' என்றார். நான் என்பது ஞானமாகிய வித்தை எனவும் கொள்க.

புந்தி – மனம், அறிவு, (165)

வித்தியா நந்தத்தின் ஒருமை கூறல்.

**274. நிறைந்தவா றெந்த வாறு**
**நிலைதெரிந் திலன்என் றாயேல்**

அறிந்ததாம் சுழுத்தி தன்னில்
ஆனந்தம் அதுவே யாகும்
குறைந்ததுக்(கு) ஆனந் தம்தான்
குவலயம் தன்னில் இல்லை
நிறைந்ததே இந்த ஆன்மா
நிதானம்இவ் அறிவு தானே.

யான் பரிபூரணமான விதம் எவ்வண்ணம் நிச்சயம் தெரிகிலன் என்பாயானால் நனவிற் சுழுத்தியின் கண்ணுள்ள நிரதிசய ஆனந்தமானது அப் பரிபூரணமேயாம். ஏகதேசமான சுக துக்கங்கள் உலகத்தின் கண் இல்லையாம்; இவ் ஆத்மாவே பூரணமானது, இச்சைதன்னியமே நிதானமாம். (சைதனியம் – தத்துவஞானம்; ஆன்மா)

யசுர்வேத மகா வாக்கியப்படி அகம் பிரமாஸ்மி என்பார், 'நிறைந்ததே இந்த ஆத்மா நிதானம் இவ்வறிவு தானே' எனக் கூறினார். நிறைந்தது என்பது பிரமம் என்னும் ஆனந்தமும், ஆத்மா என்பது அகம் என்னும் வித்தையும், நிதானம் இவ்வறிவு என்பது அஸ்மி என்னும் ஐக்கியமும் ஆமெனக் கொள்க.

நிதானம் – மூலகாரணம், தீர்மானம், உத்தேசம். (166)

வித்தியானந்த ஒருமையான சுவானுபூதியே தான் எனல். அனுபூதி – அனுபவ அறிவு.

275. மனத்தினால் எண்ணித் தானே
வந்ததிவ் உலக மாகும்
நினைத்திடில் அநேக லோகம்
நிற்பதவ் அறிவில் அன்றோ
அனைத்தையும் கடந்துஅப் பாலும்
அந்தமற்(று) அறிவி தாமென்(று)

எனைத்தனி விசாரித் திட்டால்
ஏகமாய் நிறைந்தோன் நானே.

மனோ சங்கற்பத்தினால் இவ்வுலகம் உதித்ததாம்; கருதும் இடத்து அநேக உலகங்கள் இருப்பது அந்த ஞானத்தில் அன்றோ? யாவையும் தாண்டி மேலும் முடிவிறந்த ஞானம் இதுவாம் என்று என்னைத் தனிமையாக விசாரணை செய்தால் யானே பூரணமாக நிறைந்தவன்

அதர்வண வேத மகா வாக்கியப்படி அயமாத்மா பிரமம் என்பார் 'ஏகமாய் நிறைந்தோன் நானே, என்றார். அற்ற என்பது அற்றெனத் திரிந்து நின்றது' ஏகம் என்பது பிரமம் என்னும் நித்தியானந்தமும் நிறைந்தது என்பது ஆத்மா என்னும் வித்தையும் நான் என்பது இவ்வித்தியானந்தத்தின் ஐக்கியபத்தில் உதித்த சுவானு பூதியாகிய அயம் என்னும் தானும் ஆம் எனக் கொள்க.

தாத்பரியம்: நான்கு வேதங்களின் முடிவாயுள்ள மகா வாக்கியார்த்த சென்னியமான வித்தியானந்த ஐக்கிய சொரூபமான நிரதிசய ஆனந்த சாட்சாத்காரமே தானெனக் கூறியதாம். (167)

முற்கூறிய கற்பிதங்கள் அனைத்தையும் விருத்தியுள் அடக்கி அவ் விருத்தியை நீக்கின் சுவானுபவம் உதயமாம் எனக் கூறல்.

276. அந்தவா(று) இருந்து கொண்டே
ஆனந்தம் அனுப விக்க
எந்தவா(று) இருந்து கொண்டால்
எனக்கிது தெரியும் என்னில்
இந்தமூன்(று) அவத்தை தம்முள்
எழுந்திடும் விருத்தி நீக்கில்
அந்தவா(று) இருந்து நீயும்
ஆனந்தம் அடைய லாமே.

அவ்வாறு பூரணமாக இருந்து கொண்டே பூரண ஆனந்தத்தை அனுபவிக்க, எவ்வண்ணம் இருந்தால் எனக்கு இவ் அனுபவம்

தரிசனமாம் என்பாய் ஆயின், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னும் இம் மூன்று அவத்தைக்குள் உதிக்கின்ற விருத்தியைத் தள்ளில். அவ்வாறு பரிபூரண ஞானமாயிருந்து நீ நிரதிசய ஆனந்தத்தை அடையலாம். (168)

விருத்தி நீங்குவதற்கு மூவகை உபாயம் கூறுவான் தொடங்கி இச் செய்யுளில் அனுபவ உபாயம் கூறுகின்றார்.

**277. வாதனா வசத்தி னாலே**
**வருகிற விருத்தி யெல்லாம்**
**ஏதினால் அடக்க லாகும்**
**என்றுதான் விசாரம் செய்யின்**
**போதமாம் இராசன் தானாய்ப்**
**புந்திஐம் புலன்கள் எல்லாம்**
**தாதராய் இருக்கப் பெற்றால்**
**சகலமும் அடங்கும் தானே.**

பழக்க வாசனையால் வருகின்ற விருத்திகள் அனைத்தையும் யாதினால் ஒடுக்கலாம் என்று விசாரிக்கின் தான் ஞான வாசனாய்ப் புத்தி முதலிய விடயங்கள் அனைத்தும் தன் ஏவலாளாய் இருக்கப் பெறின் அனைத்தும் ஒடுங்கும்.

தானாகிய நித்தியானந்த போதமே ஸ்புரண முதலிய யாவிலும் விளங்கின் விருத்திகள் நீங்கும். (169)

ஏனைய அப்பியாச உபாயங்கள் இரண்டையும் கூறல்

**278. விருத்திகள் தாமும் இன்னும்**
**விநோதமாம் யோகத் தாலே**
**துருத்திபோல் ஊதும் மூச்சைச்**
**சுகமுடன் அடக்கில் நிற்கும்**

**கருத்ததற்(கு) இல்லை என்னில்**
**காரண சரீர மாகிப்**
**பெருத்ததோர் அவித்தை தன்னைப்**
**பிடுங்கிடில் அடங்குந் தானே.**

மேலும் விநோதமான யோகத்தினால் துருத்தியைப் போல ஊதாநின்ற சுவாசத்தை இன்பத்தோடும் ஒடுக்கின் விருத்திகளானவை அடங்கும். அதற்கும் மனம் இன்றாயின் காரண தேகமாகத் தடித்த ஒப்பற்ற அவித்தையை நீக்கின் ஒடுங்கும்.

பிராண பந்தன உபாயத்தைக் கவனமாகக் கூறி, அவித்தையை நீக்க உபாயத்தை முக்கியமாகக் கூறினார். (170)

அவித்தையைக் களையும் உபாயம் யாது? என வினாதலுக்கு உத்தரங்கூறல்.

**279. காரண சரீரம் தன்னைக்**
**களைவதுஎவ் வாறென்(று) ஓதில்**
**ஆரணம் பொய்சொல் லாதே**
**அதன்பொருள் அகத்தில் உன்னிப்**
**பூரண மாகும் மென்மேல்**
**புவனங்கள் தோற்றும் என்று**
**தாரணை வந்த தாகில்**
**தரித்திடும் அவித்தை எங்கே.**

காரண தேகத்தைக் கெடுப்பது எவ்விதமென்று கேட்கில் வேதமானது நிச்சயத்தைச் சொல்லும், ஆதலால் அதன் மகா வாக்கியார்த்தத்தை உளத்திற் சிந்தித்துப் பரிபூரணமாகிய என்னிடத்தில் ஆரோபமாகச் சகங்கள் தோற்றுமென்று உறுதி வந்ததானால் அவித்தையானது எவ்விடத்திலிருக்கும்?

ஆரோபித்தல் – ஏற்றுவித்தல்; ஊர்தல்.

வேத நிச்சயப்படி குருவாக்கியத்தால் சர்வம் பிரம்ம மய்ம் என்னும் அனுபவம் உண்டாயின் அவித்தை நசிக்கும் என்பதாம்.
(171)

சர்வம் பிரம மயம் என்னும் ஞானம் உதித்ததற்கு அனுபவம் கூறல்.

**280.** **அப்படி யிருக்கச் சித்தம்**
**அலைதலால் விவகா ரத்தில்**
**எப்படிக் கூடும் என்னில்**
**என்னைவிட்(டு) ஒன்றும் இல்லை**
**இப்படிக் கண்ட எல்லாம்**
**என்மயம் என்க னாப்போல்**
**கற்பிதம் என்று தானே**
**காண்கின்ற சித்து நானே.**

விவகாரங்களில் மனமானது சுழல்வதனால் அங்ஙனம் நிற்க எங்ஙனம் கூடும் என்றால், என்னைத் தவிர வேறொரு வஸ்துவும் இல்லை; இவ்விதமாகக் கண்ட திரிசியங்கள் அனைத்தும் எனது சொரூபம், எனது சொப்பனத்தைப் போலக் கற்பிதமென்று தானே பார்க்கின்ற சைதன்யமே நான்.

கற்பிதமாகக் காணப்பட்ட திரிசயங்கள் அனைத்தும் தனது சிற்பிரகாசமாக விளங்குகின்றது என்னும் அனுபவ திருஷ்டியால் யாவும் தன்மயமாய் விளங்கும் என்பதாம். (172)

இச்சித்தே ஆனந்த வடிவமாம் எனல்.

**281.** **சித்துநான் நிறைந்தோன் என்ற**
**திடம்மற வாதி ருந்தால்**
**எத்தனை எண்ணி னாலும்**
**ஏதுசெய் தாலும் என்ன**

நித்திரை உணர்ந்த பின்பு
நிற்கின்ற கனாவைப் போல
அத்தனை யும்பொய் தானே
ஆனந்த வடிவு நானே.

யான் சைதன்னியமாகப் பூரணமானவன் என்னும் திடச் சித்தத்தோடு கூடியிருந்தால் எவ்வளவு சங்கற்பித்தாலும் எக்கிரியை செய்தாலும் அதனால் குற்றம் என்ன? நித்திரை தெளிந்த பின்பு நிற்கும் சொப்பனம் போல அவ்வளவும் மித்தையாம்; யானே ஆனந்த சொரூபமாம்.

தானே சித்தென்னும் அனுபவம் உதிக்கில் யாவும் மித்தையாய்த் தான் அந்த வடிவன் ஆனவன் என்பதாம். (173)

இவ் அனுபவம் உதிப்பதற்கு ஏதுவான உறுதி கூறல்.

282. நானென உடலைத் தானே
நம்பினேன் அநேக சென்மம்
ஈனராய்ப் பெரியோ ராகி
இருந்தவை எலாம்இப் போது
கானலில் வெள்ளம் போலக்
கண்டுசற் குருவி னாலே
நானென என்னைத் தானே
நம்பியீ டேறி னேனே.

அனந்த சனனங்களில் தேகத்தையே யானென்று நம்பினேன். இழிந்தவராகவும் உயர்ந்தவராகவும் இருந்தவைகள் அனைத்தையும் இச் சமயத்தில் கானற் சலத்தைப்போல ஆசிரிய ரூபதேசத்தினால் பார்த்து எனது பிரம வடிவத்தையே யானென்று நம்பி ஈடேறினேன்.

குரு கிருபையினால் தேகம் நானென்னும் நம்பிக்கையை விடுத்துச் சித்தே நானென்னும் நம்பிக்கை உண்டானால் சின்மாத்திர மான முத்தியைப் பெறுவன் என்பதாம். (174)

குரு கிருபையை வியந்து மகிழ்தல்.

283. என்னபுண் ணியமோ செய்தேன்
ஏதுபாக் கியமோ காணேன்
நன்னிலந் தனில்எ ழுந்த
நாரணன் கிருபை யாலே
தன்னியன் ஆனேன் நான்உத்
தரீயத்தை வீசு கின்றேன்
தன்னியன் இன்னும் நானே
தாண்டவம் ஆடு கின்றேன்.

என்ன தருமம் செய்தேனோ யாது பாக்கியம் பெற்றேனோ தெரிகிலன்; நன்னிலமென்னும் நகரத்தில் மானுடராக அவதரித்த நாராயணன் என்னும் எனது ஆசிரியரது கருணையினால் கிருதார்த்தனான யான் அங்கவஸ்திரத்தை ஆகாயத்திலெறிந்து விளையாடுகின்றேன்; கிருதார்த்தனான யானே மேலும் நடனம் செய்கின்றேன்.

கிருதார்த்தன் – பேறுபெற்றவன். (175)

தன் அனுபூதி விளக்கத்துக்குத் தக்க நாமம் தனக்குத் தரித்த மாதா பிதாவைப் புகழ்தல்.

அனுபூதி – அனுபவ அறிவு.

284. தத்துவ ஞானம் வந்த
சந்தோஷ அதிச யத்தால்
நித்தமா டுவன்காண் என்ற
நிலைமுன்ன மேய றிந்த
சத்தியம் அதனால் அன்றோ
தாண்டவா என்ற ழைத்தார்
அத்தனை மகிமை யுள்ளோர்
அன்னையும் பிதாவும் தாமே.

அத்துவித ஞானம் உதித்த பேருவகையான அற்புதத்தினால் எப்போதும் ஆனந்த நடனம் செய்வன் என்னும் நிலையை முன்பே தெரிந்த உண்மையினால் அன்றோ, அத்தனை மகிமையை உடைய தாய் தந்தையர்கள் தாண்டவராயன் என்னும் நாமம் தரித்துக் கூப்பிட்டார்கள். அத்துவிதம் – இரண்டன்மை அல்லது ஒன்று; பரமான்மாவும் சீவான்மாவும் ஒன்றென்கை. (176)

நிரதிசயானந்த அனுபூதியின் ஆராமை கூறல்.

ஆராமை – தெவிட்டாமை.

**285. வந்தவோர் இவ்வா நந்த**
**மகிழ்ந்ததா ரோடே சொல்வேன்**
**சிந்தையில் எழுந்து பொங்கிச்**
**சகமெலாம் நிறைந்து தேங்கி**
**அந்தமில் லாத தாயிற்று**
**றப்படி குருவே தாந்த**
**மந்திரம் அருளும் ஈசன்**
**மலரடி வணங்கி னேனே.**

அறிவில் உதித்த ஒப்பற்ற இந்த நிரதிசய ஆனந்தத்தினால் மகிழ்ச்சி அடைந்ததை யாருடன் உரைப்பேன்! உள்ளத்தில் ஊறி மேலிட்டு உலகங்கள் அனைத்தும் பூரணமாய் முடிவில்லாத தாயிற்று. அவ்வண்ணம் வேத முடிவான மகா வாக்கியார்த்த ரகசியத்தை அருளா நின்ற இறைவனாகிய தேசிகரது கமல மலர் போன்ற திருவடிகளைத் தொழுதேன்.

சிந்தனையில் உதித்த ஆனந்தமதனைக் கரைக்கச் சீவபரமான அனைத்தும் தானாகிய சிதானந்த வடிவமாகவே விளங்குகின்றது என வித்தியானந்தத்தை முடித்ததாம். (177)

இந்நூலால் விளையும் பயன் கூறல்.

286. வித்தியா னந்தம் இந்த
விதமென விளம்பி னோமே
பத்தியாய் இந்த நூலைப்
பார்த்தனு பவித்த பேர்கள்
நித்திய கரும நிட்டை
நிலைதனை யறிந்து சீவன்
முத்தியை யடைந்தி ருந்த
முநீஸ்வரர் ஆகு வாரே.

ஞானானந்தமானது இவ்வகையாம் என்று சொல்லினோம். அன்பாக இஞ் ஞான சாஸ்திரார்த்தத்தை உணர்ந்து அப்பொருளை அறிந்தபடி அனுபவமான பேர்கள் நித்தியமான ஞான நிஷ்டையின் நிலைமையைத் தெரிந்து சீவன்முத்திப் பதத்தைப் பெற்றிருந்த முனி சிரேஷ்டர்கள் ஆவார்கள். (178)

குருவாக்கியப்படி இந்நூல் சம்பூரணமாயிற்று எனல்.

287. ஆரணப் பொருளாம் வித்தை
ஆனந்தம் விளங்க ஏதும்
காரணம் குறைவில் லாமல்
கைவல்ய நவநீ தத்தைப்
பூரண மாக்க வேண்டிப்
பூர்வமா நன்னி லத்தில்
நாரண குருந மக்கு
நவின்றனர் கனவில் வந்தே

வேத முடிவில் உள்ள மகா வாக்கியார்த்தமான ஞானானந்தம் விளங்கும் பொருட்டு கைவல்ய நவநீதம் என்னும் ஞானசாஸ்திரத்தை எவ்வளவும் எடுத்துக்காட்டும் காரணங்களில் குறைவுபடாமல் நிறைவாகச் செய்ய விரும்பிப் பழமையாகிற நன்னில எனும் தலத்தில் மானிட வடிவமாக எழுந்தருளிய **நாராயண தேசிகர்** எனக்குச் சொப்பனத்தில் தோன்றி அருளிச் செய்தார். (179)

இந்நூலாசிரியரது சிறப்புக் கூறல்.

288. அண்ணல்தன் அருளி னாலே
அகம்புறம் இன்றி ஒன்றாய்
எண்ணமில் இலக்கி யார்த்தத்(து)
இன்பொருள் அதுநான் என்ன
நண்ணின சரீரம் ஆதி
நாதத்தின் உபாதி என்றே
கண்ணதாய் அனைத்தும் காணக்
காட்டினன் தாண்ட வேசன்.

தேசிகரது கிருபையினால் உள்வெளி என்பது இன்றி ஏகமாய் எண்ணுதற்கரிய இலக்கியார்த்தத்தின் பொருட்படி பிரமமாகிய அதுவே கூடஸ்தனாகிய நான் என்னும் படி பொருந்திய தேக முதலியவற்றை மாயாஉபாதி என்று களைந்து சகலத்தையும் ஞானாகாரமாய்த் தரிசிக்கும்படி **தாண்டவேசன்** என்னும் '**இந் நூலாசிரியர்**' தரிசிப்பித்தார்.

அண்ணல் – பெருமையிற் சிறந்தோன்.

தேசிகன் – குரு; உபாதி – வேதனை.

குறிப்பு: 180, 181, 182, 183, 184, என்ற ஐந்து பாடல்களும் சில பிரதிகளில் இல்லை. (180)

இம் மரபினால் அனுபவம் உதிக்கும் அவர்களே சுவானுபவிகள் எனல்.

289. ஆன்ற பதமாம் மூன்றற்கு
அதுநீ ஆனாய் எனும் பொருளில்
சான்ற துரியா தீதமெனும்
தடையற்(று) இலங்கொள் சைதன்னியம்

ஊன்றி உணர்ந்தோர் விகற்பமயக்(கு)
ஒழித்துத் தடையும் ஊடறுத்துத்
தோன்றித் தானே தானாவர்
துலங்கும் அவர்க்கே சுவானுபவம்.

மாட்சிமையாகிய மகா வாக்கியத்தின் தத்துவமசி என்னும் மூன்று பதத்திற்கும் அதுவென்னும் பிரமமும் நீயென்னும் கூடஸ்தனும் இவ்விரண்டின் ஐக்கியமும் என்கிற அர்த்தத்தில் நிறைந்த துரியாதீதம் என்கின்ற மறைப்பின்றி அபரோட்சமாக விளங்குகின்ற சுயந்தேசசு உள்ள மெய்யுணர்வை ஸ்திரமாகத் தெரிந்தவர்கள் பேதமான பிரமையை நீக்கி அறிவின்மையையும் கெடுத்துச் சகோதயமாய்த் தன் மயமாவர், அவ் அறிஞர்க்கே சுவானுபவமானது பிரகாசிக்கும். (181)

இந் நூலாசிரியர் தன் ஆசிரியரைப் புகழ்தல்.

290. என்னும் மாவாக் கியநான்கும்
இசைக்கும் வித்தியா நந்தமிது
சொன்ன நாரா யணன்பாதம்
தொழுது துதித்தோர் துகளற்றோர்
இன்ன மாணாக்கர் கள்குருவால்
சந்தே கந்தீர்ந் திடுபதத்தே
துன்னி நிறைந்து நின்றோர்கள்
தூய முத்தர் ஆகுவரே.

சுபாவம் என்கின்ற நான்கு வேதத்தின் முடிவான நான்கு மகாவாக்கியங்களும் சொல்லுகின்ற ஞானானந்தம் இதுவாம். இதனை அருளிய நாராயணன் என்னும் ஆசிரியர் உபய பாதங்களை வணங்கித் துதி செய்தவர்கள் களங்கமற்றவர் ஆவர். இத் தன்மையான

சீடரானவர் ஆசிரியரால் ஐயம் நீங்கிய இப்பதத்தையடைந்து பூரணமாகியிருந்து பரிசுத்தமான சீவன் முத்தர் ஆவார்கள்.

உபயம் – இரண்டு.

நான்கு வேதங்களின் முடிவில் உள்ள நான்கு மகா வாக்கியார்த்தமும் ஒன்றான வித்தியானந்தமே அனுபவம் எனவும் அதை அடைந்தவர்களே சீவன் முத்தர் எனவும் கூறினதாம். (182)

இந்நூல் செய்த விதங் கூறல்.

**291. தத்துவ விளக்கத் தாலும்**
**சந்தேகம் தெளித லாலும்**
**ஒத்திருள் விடாத மாயா**
**உள்ளிருள் இரியஓங்கும்**
**சித்ததாம் ஒளிவி ளங்கச்**
**செய்துபின் விருத்தி பேதப்**
**புத்தியால் வரும்ஐ யத்தைப்**
**புரையறத் தெளிவித்(து) ஆண்டான்.**

தத்துவ விளக்கம் என்னும் படலத்தினாலும் சந்தேகம் தெளிதல் என்னும் படலத்தினாலும் பொருந்தச் செய்து அந்தகாரம் நீங்காத மாயையென்னும் அகத்திருள் கெட உயரா நின்ற ஞானப் பிரகாசத்தைத் திகழும்படி செய்து பின்பு விருத்தி விகற்பமான அறிவினால் வாரா நின்ற சந்தேகத்தைக் குற்றமறத் தெளிவித்து இரட்சித்தார் இந்நூல் ஆசிரியர்.

உயராநின்ற – உயர்கின்ற; ஆநின்று – இடைநிலை. (183)

இந்நூல் ஆசிரியரைத் துதித்தல்.

**292. ஆண்டதே சிகனாம் ஐயன்**
**நாரணன் அனந்தன் பாதம்**

பூண்டுமூ ஆரோ பத்தால்
பொய்ம்மயக் காய்வந்த அத்தை
மாண்டநல் அபவா தத்தால்
மாய்த்தருள் நோக்கத் தென்றும்
காண்டிட வைத்த ளித்த
காரணா போற்றி-போற்றி.

தடுத்தாட் கொண்ட குருசாமியாகிய நாராயணன் என்னும் முடிவற்றவனது திருவடியைச் சிரசில் தரித்துச் சீவேஸ்வர சகத்தென்னும் மூன்றுவிதக் கற்பனையால் இல்லாத மயக்கமாய் உண்டானதை மாட்சிமையாகிய நன்மையான அபவாத உத்தியினால் கெடுத்துக் கிருபா நோக்கத்தினால் எப்போதும் அபரோட்ச ஞானமாகத் தரிசிக்கத் திருவடி சூட்டி இரட்சித்த காரணனே சரணம் சரணம்.

மூ + ஆரோபம் – மூன்று விதக் கற்பனை. (184)

இந்நூலைப் புகழ்தல்.

293. குலவுசற் குருவின் பாதக்
குளிர்புனல் தலைமேற் கொண்டால்
உலகினில் தீர்த்த மெல்லாம்
உற்றபே(று) அடைவார் போல
நலமெய் யாகியகை வல்ய
நவநீத நூலைக் கற்றால்
பலகலை ஞான நூல்கள்
படித்தஞா னிகளாய் வாழ்வார்.

விளங்கா நின்ற சற்குருவின் அகத்தையும் புறத்தையும் குளிரச் செய்கின்ற பாத தீர்த்தத்தைச் சிரசின்மேல் தரிக்கின் சகத்திலுள்ள புண்ணிய தீர்த்தங்கள் அனைத்தினும் ஸ்நானம் செய்த பலனைப்

பெறுவார்கள். அது போல நன்மையும் உண்மையுமாகிய **கைவல்ய நவநீதம்** என்னும் ஞான சாஸ்திரத்தை அப்பியாசித்தால் அந்தக் கல்வி நூல்களின் சாரமான ஆத்மஞான சாஸ்திரங்களை அப்பியாசித்த ஞானவான்களாக வாழ்வார்கள்.

சுருதி குரு சுவானுபவங்களை நவநவமாகத் துதித்ததாம். (185)

முற்றிற்று

## நூலின் சிறப்பு

இந் நில உலகின்கண் சீவான்மாக்கள் துக்க நிவர்த்தியும் சுகப் பிராப்தியுமே விரும்புகின்றனர் என்பது யாவர்க்கும் தெரிந்த விஷயம். இத்தகைய துக்க நிவர்த்தியோடு கூடிய சுகம் ஆன்ம ஞானம் ஒன்றினாலேயே அடையப்படும். இச் சம்சாரத்தில் ஆன்ம ஞானத்தைத் தவிர மேலான பேறு வேறொன்றில்லை. ஏனெனில் ஆன்ம ஞான வாயிலாக மோட்சத்தை அடைந்த அதிகாரிகள். மீண்டும் சம்சாரத்திற்கு வருவதில்லை.

ஆதலால் ஞானிகளுக்குப் பிறப்பு இறப்புகளின் நீக்கமாகிய அனாவிருத்தியே உண்டு. இச் சீவான்மா அஞ்ஞான நிவர்த்தி பூர்வகமாய்த் தனது சச்சிதானந்த வடிவமாய் நிலைத்தல்தான் மோட்சம் எனப்படும். பிரமலோக முதலியவற்றை அடைதல் மோட்சமன்று.

கர்மங்களால் செய்யப்பட்ட பைங்கூழ் எவ்வாறு நாசத்தை அடைகின்றனவோ, அவ்வாறே நல்வினையால் சம்பாதிக்கப்பட்ட சொர்க்க முதலிய யாவும் நாசத்தை அடைகின்றன. நித்திய சொருப மோட்சம் அடையும் பொருட்டு சர்வஞ்ஞத்வாதி சகல கல்யாண குணகண அலங்கிருத பரம கிருபாலுவான சர்வேஸ்வரன் அதிகாரிகளின் வேறுபாட்டினால் அவர்கள் உய்ய கர்மம் உபாசனை ஞானம் என்னும் மூன்றினையும் வேதங்களின் வாயிலாகக் கூறி அருளினார். இவற்றுள் கர்மம், உபாசனை இரண்டும் சித்த சுத்திக்கு ஏதுவாயும், ஞானம் ஒன்றே அனர்த்த நிவர்த்தி, ஆனந்தபிராப்தி வடிவ மோட்சத்தைப் பயப்பதாயும் இருத்தலால் பண்டைக் காலத்து

மகரிஷிகள் ஞானம் ஒன்றையே பிரதிபாதிப்பதாகிய **ஸ்ரீ பிரம சூத்திரம், ஸ்ரீ பகவத்கீதை** உபநிஷத்துக்களாகிய வேதாந்த நூல்களை அருளிச் செய்தனர்.

இம் மூன்றிற்கும் ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள் செய்த பாஷியங்களே பிரஸ்தானத்திரயம் என்று உலகத்தில் பொன்போல் போற்றப்பட்டு வருகின்றன.

இவற்றை அனுசரித்து ஆன்றோர் வழிநூல் சார்பு நூலாக வாசிட்டம், பஞ்சதசி முதலிய நூல்களை இயற்றி அருளினர். அவைகளை ஆராய்ந்தறியும் சக்தியில்லாத தீவிர முமுட்சுக்களாகிய அதிகாரிகள் சுலபமாய் அறிந்து அனுஷ்டித்து மோட்சமடையும் பொருட்டுப் பெருங்கருணையினால், ஸ்ரீ **தாண்டவராய சுவாமிகள்** வட மொழியிலுள்ள பிரஸ்தானத் திரய முதலிய வேதாந்த நூல்களின் சாரமான கருத்துக்கள் அமையும்படி தமிழ் மொழியில் செய்யுள் வடிவமாய்க் கைவல்லிய நவநீதம் என்னும் ஞான நூலை இயற்றி அருளினார்.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

